நாடோடி

# என்னைக் கேளுங்கோன்னு!



பிரசுரம்:

நாடோடி

தியாகராயநகர் ★ சென்னை 17.

முதற்பதிப்பு டிசம்பர் 1946



விலை ரூபாய் ஒன்று

## நாடோடி
## எழுதிய நூல்கள்



நாடகமே உலகம்
இதுவும் ஒரு பிரகிருதி
பிழைக்கும் வழி
ஒரு நாள் கூத்து
அட பரமசிவா
படித்த பெண் வேண்டாம்
எங்கள் குடும்பம் பெரிது
ஹே, அநுராதா!
என்னைக் கேளுங்கோன்னு!
எல்லைப்புறத் தொல்லை.

# என்னைக் கேளுங்கோன்னா !

## இட்டிலி - சாம்பார்

ஏன், தலைப்பைக் கண்டதுமே வாயில் ஜலம் ஊறுகிறதோ? உடனேயே பக்கத்தில் உள்ள ஹோட்டலுக்கு ஓடிப்போய் ஒரு இட்டிலி-சாம்பார் வாங்கிச் சாப்பிடா விட்டால் தலை சுக்கு நூறாக உடைந்து விடும் போல் தோன்றுகிறதோ? ரொம்ப சரி, கொஞ்சம் பொறுங்கள். இதோ, சாப்பிட்டுக்கொண்டிருக்கும் இட்டிலி - சாம்பாரை முடித்துக்கொண்டு நானும் உங்களுடன் புறப்பட்டு வருகிறேன்.

காப்பிக்கு அடுத்தபடியாக நாம் உயிரை விடத் தயாரா யிருக்கும் பொருள் இந்த இட்டிலி - சாம்பார்தான் என்பதில் சந்தேகமில்லை. யோசித்துப் பார்க்கும்போது, இதற்கு முதல் ஸ்தானமே கொடுத்து விடலாம் என்று தோன்றுகிறது. காலை யில் எழுந்ததும், முதலில் இட்டிலி - சாம்பார் முகத்தில் விழித்த பிறகுதானே காப்பியின் முகத்தில் விழிக்கிறோம்.

மனைவிக்குப் பயந்து கொண்டு அவள் போட்டுக் கொடுத்த காப்பிக் கஷாயத்தைக் குடித்துவிட்டு, வயிற்றைப் பிடித்துக் கொண்டு இருக்கிறார்களே, அவர்களைப் பற்றி நான் ஒன்றும் சொல்ல விரும்பவில்லை. காலையில் எழுந்ததும் இட்டிலி - சாம் பார் முகத்தில் விழிக்காதவர்கள் மனிதப் பிறவியில் சேர்த்தியா, என்ன? "அரிதரிது, மானிடராய்ப் பிறத்தலரிது" என்று பாடப் பெற்ற அரிதான மானிட ஜன்மத்தை எடுத்தபிறகு, இட்டிலி-சாம் பார் சாப்பிடாமல் அதைப் பாழாக்குவ தென்றால்!

இட்டிலி - சாம்பாரினால் எத்தனை நன்மைகள் விளைகின்றன என்கிறீர்கள்! முதலில் காப்பி ஹோட்டலுக்கு நடந்து போவதே ஒரு நல்ல 'மார்னிங் வாக்' ஆகிறது. இதைவிட நல்ல தேகப் பயிற்சி நமக்கு வேறு எங்கே கிடைக்கப் போகிறது? இதை

உத்தேசித்தாவது தினம் காலையில் காப்பி ஹோட்டலுக்குப் போக வேண்டும் என்று கூறுவேன்.

ஹோட்டல் சிப்பந்திகள் தான் நம்மிடம் எவ்வளவு மரியாதையாக நடந்து கொள்கிறார்கள்! நாம் போய் உட்காரவேண்டியது தான் தாமதம், உடனே ஒரு இட்டிலி - சாம்பார் கொண்டுவந்து நம் முன் வைத்து விடுவார்கள். பள பள வென்று கண்ணைப் பறிக்கும் அழகான பீங்கான் பிளேட்! அதன் நடுவே நம் மனதைக் கவரும் இட்டிலி! இட்டிலி இருக்கும் இடம் தெரியாதபடி அதை மூழ்கடித்து நிற்கும் சாம்பார்! கடைசியாக இட்டிலியில் சொருகப் பட்டிருக்கும் அந்த வெள்ளை வெளேரென்று வெள்ளியைச் வெகுளச் செய்யும் ஸ்பூன்!

ஸ்பூன் என்றதும் ஒரு விஷயம் ஞாபகத்துக்கு வருகிறது. நம்மில் யாருக்கும் ஸ்பூனை உபயோகிக்கத் தெரியாதுதான். இதில் அவமானப் படுவதற்கு ஒன்றும் இல்லை. நாம் யாரைப் பார்த்து இந்த வழக்கம் கற்றுக்கொண்டிருக்கிறோம் என்று நினைக்கிறோமோ அவர்களுக்கும் ஸ்பூனில் எடுத்துச் சாப்பிடத் தெரியாது. ஆங்கிலேயர்கள் சாப்பிட உபயோகப் படுத்துவது கத்தியும், முள் ஸ்பூனுமே தவிர, வெறும் ஒற்றை ஸ்பூன் அல்ல.

இட்டிலியோ அல்லது வேறு எதுவோ ஸ்பூன் கொண்டு சாப்பிடுவதற்காக நம் ஜனங்கள் படும் திண்டாட்டத்தைக் கவனித்திருக்கிறீர்களா? கையால் எடுத்துச் சாப்பிட்டால் பக்கத்தில் இருப்பவர் என்ன நினைக்கப் போகிறாரோ என்று உங்களுக்கு எண்ணம். பக்கத்தில் இருப்பவருக்கோ, நீங்கள் என்ன நினைக்கப் போகிறீர்களோ என்று பயம். ஆகவே இரண்டு பேரும், "நமக்காச்சு, இந்த ஸ்பூனுக்காச்சு" என்று 'ஒரு கை' பார்த்து விடத் தீர்மானிக்கிறோம்.

ஆனால் அந்த சதிகார இட்டிலி உங்களுடன் ஒத்துழைத்தால் தானே? நாமொன்று நினைத்தால் அது ஒன்று நினைக்கிறது. நாம் ஸ்பூனைக் கிழக்கே கொண்டு போனால் அது மேற்கே ஓடுகிறது; மேற்கே கொண்டுபோனால் கிழக்கே ஓடுகிறது. "உனக்கு இத்தனை ஆணவமா?" என்று இது வரையில் 'ஒரு கை' பார்த்துக் கொண்டிருந்த நீங்கள் இப்பொழுது 'இரண்டு கை' பார்க்கத் துணிகிறீர்கள். இதுவரையில் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த இடது கை பிளேட்டைப் பிடித்துக்கொள்ளுகிறது.

அப்பொழுதும் இட்டிலிக்கும் ஸ்பூனுக்கும் சண்டைதான்! கடைசியாக ஒரு வகையாக இட்டிலியிலிருந்து ஒரு துண்டு பிரிகிறது. ஆனால் அது ஸ்பூனுக்குள் அகப்பட்டுக் கொண்டால் தானே? இதற்காகப் பிளேட்டை இப்படிச் சாய்த்தும், அப்படிச் சாய்த்தும் இன்னும் அதைத் தட்டாமாலை சுற்றியும் பார்க்கிறீர்கள். இதனால் சில சமயம் உங்களுக்குச் சாம்பார் அபிஷேகம் நடப்பதும் உண்டு. இதையெல்லாம் பொருட் படுத்தாமல் நீங்கள் 'விடேன் தொடேன்' என்று யுத்தத்தை மேற்கொண்டு நடத்துகிறீர்கள். கடைசியாக உங்கள் ஸ்பூனுக்குள் ஒரு இட்டிலித் துண்டு அகப்பட்டுக் கொண்டு விடுகிறது. ஆனால் ஸ்பூனுக்கு எட்டினது வாய்க்கு எட்டினால்தானே? அதுதான் பாதி வழியில் உருண்டு விழுந்து விடுகிறதே!

கடைசியாகத் தோல்வியை ஒப்புக்கொண்டு கையால்தான் எடுத்துச் சாப்பிடவேண்டி யிருக்கிறது.

ஆனால் இதற்காக ஸ்பூன் வேண்டாம் என்று சொல்லிவிடாதீர்கள். இட்டிலியில் ஸ்பூன் சொருகப்பட்டிருக்கிறதா என்றுதான் நீங்கள் முக்கியமாகக் கவனிக்க வேண்டும். சில சாமான்கள் வாங்கும்போது, அதன் மீது அதன் 'டிரேட் மார்க்' இருக்கிறதா என்று கவனித்து வாங்குவதில்லையா? அதைப் போலவே இட்டிலி நம் பாட்டி பண்ணும் பொரிவிளங்காய் உண்டை போல் இல்லாமல் பூப்போல் வெந்திருக்கிறதா என்பதற்கு ஸ்பூன் சொருகியிருப்பதுதான் டிரேட் மார்க் அடையாளம்.

கொஞ்ச நாட்களாக இந்த இட்லியைப் பார்த்துப் பாக்கிப் பதார்த்தங்களுக்குப் பொறாமை உண்டாகி இருக்க வேண்டும். இல்லாவிடில் இட்டிலிக்கும் ஓர் 'இமிடேஷன்' ஏற்படுமா?

சென்னையில் காஞ்சிபுரம் இட்டிலி என்று ஒன்று ஏற்பட்டிருக்கிறது. இதை நான் சாப்பிட்டுப் பார்த்தது கிடையாது. சாப்பிட்டுப் பார்ப்பதாகவும் உத்தேசமில்லை. உண்மையில் எனக்கு அதன் முகத்தில் விழிக்கக்கூட இஷ்டமில்லை. அசல் நெய் கலப்பட நெய்க்குப் பயந்துகொண்டு "வெண்ணெய் காய்ச்சின நெய்" (வெண்ணெய் காய்ச்சாத நெய்யும் உண்டு போலும்!) என்ற பெயருடன் வெளிவர வில்லையா? அதைப்போல் இட்டிலியும் "ரைஸ் - இட்லி" என்ற புதுப்பெயருடன் வெளியுலாவத் தொடங்கி யிருக்கிறது!

இதை யெல்லாம் நினைத்துப் பார்க்கும்போது இந்த இட்டிலி விஷயமாக சர்க்கார் ஏன் ஒரு சட்டம் கொண்டுவரக் கூடாது என்று தோன்றுகிறது. இது விஷயமாக ஒரு சட்டமும் செய்யாமல் காங்கிரஸ் மந்திரிகள் ராஜீனுமாச் செய்து விட்டார்களே என்று வருத்தமா யிருக்கிறது. இந்த வருத்தத்தில் காங்கிரஸ் விரோதிகள் கூடப் பங்கெடுத்துக் கொள்ளத் தயாரா யிருக்கிறார்கள் என்றால், எல்லாரையும் ஒற்றுமைப் படுத்தும் இந்த இட்டிலியின் மகிமையைப் பற்றி என்னவென்று சொல்வது!

முதலில் இட்டிலி காலை வேளையில் கிடைக்கிறதே தவிர, பாக்கி நேரங்களில் கிடைப்பதில்லை.

இரண்டொரு ஹோட்டல்களில் வாரத்திற்கொரு நாள் மத்தியான டிபனுக்கு என்று "ரைஸ் - இட்லி" போடுகிறார்கள்—அதாவது சுவரில் மாட்டியிருக்கும் பலகையில் எழுதி வைக்கிறார்கள். ஏனெனில் நாம் இட்டிலி வேண்டும் என்று கேட்டால், "இன்னும் கொஞ்சம் நாழி ஆகும்" என்றோ, அல்லது "ஆகிவிட்டது ஸார்" என்றோதான் பதில் வரும். இதற்கு, அவர்கள் இட்டிலியே போடவில்லை யென்றோ, அல்லது போட்டிருந்தும் அந்தச் சிப்பந்திகளுக்குக் கொடுக்க மனமில்லை என்றோதான் அர்த்தம்.

"காப்பி ஹோட்டல் என்று பெயர் வைத்துக் கொண்டிருக்கும் எந்தக் கடையும், எந்த வேளையில் யார் போனாலும், எத்தனை கேட்டாலும், இல்லை யென்னாமல் இட்டிலி – சாம்பார் சப்ளை செய்ய வேண்டும். இல்லாவிடில் அவர்கள் லைசென்ஸ் பறிமுதல் செய்யப்படும்" என்று மாத்திரம் சர்க்கார் சட்டம்போட்டு விட்டால் எவ்வளவு நன்றாயிருக்கும்!

ஒரு கடையில் அரையணா, இன்னொரு கடையில் அரையணாவுக்கு மூன்று என்று இப்படிக் கன்னா பின்னா வென்று இட்டிலிக்கு விலை ஏற்படுத்தப் பட்டிருக்கின்றது. இதனால் நமக்கு ஏற்படும் அவதியும் அவமானமும் எண்ணுந் தரமன்று. காலணா இட்டிலியாக்கும் என்று நினைத்துக்கொண்டு கணக்கில்லாமல் சாப்பிட்டு விடுகிறோம். பிறகு 'பில்' கிடைத்த பிறகுதான் நாம் செய்த தவறு தெரிகிறது. போதுமான சில்லறைகொண்டு வராத தப்பிதத்தை உணர்கிறோம். சில சமயங்களில் அரையணா இட்டிலியாக்கும் என்று நினைத்து, ஒன்று இரண்டுடன் திருப்தியடைந்து விடு

கிறேம். பிறகு அது காலணு இட்டிலி என்று தெரிந்ததும் "முன்ன மேயே தெரியாமல் போச்சே" என்று வருத்தமாயிருக்கிறது.

ஆகவே இந்தத் தொல்லே யெல்லாம் நீங்குவதற்கு, தமிழ்நாட்டின் எல்லாப் பாகங்களிலும் இட்டிலிக்கு ஒரே விலை நிர்ணயித்து விடவேண்டும். இன்னும் கடைக்குக் கடை இட்டிலி சின்னது, பெரிதாயிருப்பதைத் தடுப்பதற்காக, இட்டிலி என்றால் அதன் எடை, குறுக்களவு, சுற்றளவு, கன பரிமானம் இன்னும் இத்தனை அரிசிக்கு இத்தனை உளுந்து என்ற கணக்கு முதலிய எல்லாவற்றையும் சர்க்கார் தீர்மானித்து விடவேண்டும்.

இட்டிலியில் ஸ்பூனைச் செருகிக் கொடுக்க வேண்டும் என்றும் சட்டம் வேண்டும். சில ஹோட்டல்களில் ஸ்பூன் கொடுப்பதில்லை; அப்படிக் கொடுத்தாலும் தனியாக வைத்து விடுகிறார்கள். இதில் ஒரு பெரிய சூட்சி இருக்கிறது. இட்டிலி வெந்திருக்கிறதா, இல்லையா என்று நமக்குத் தெரியாமல் இருப்பதற்குத்தான் அப்படிச் செய்கிறார்கள்.

சட்னி, மிளகாய்ப் பொடி, கொத்சு முதலியவற்றைப் பற்றி ஒன்றும் சொல்லவில்லையே என்று ஒரு நண்பர் கேட்கிறார். ஆம் சொல்லவில்லை தான். ஏனெனில் என் அபிப்பிராயப்படி இட்டிலிக்கு மிகவும் உகந்தது சாம்பார்தான். ஆனால் இந்த ஹோட்டல் காரர்கள் இருக்கிறார்களே, மிகவும் பொல்லாதவர்கள். நீங்கள் சாம்பார் ஏகத்தாராகக் கேட்பீர்கள் என்று இட்டிலிக்குச் சட்டினியா, மிளகாய்ப் பொடியா என்றெல்லாம் உங்களைக் கேட்பார்கள். நீங்கள் அவர்கள் வலையில் விழாமல், அழுத்தந் திருத்தமாக, 'சாம்பார்' தான் என்று வற்புறுத்த வேண்டும்.

சாம்பார் எவ்வளவு ஊற்றுவது என்பதைப் பற்றி ரொம்ப நாளாகவே பெரிய சர்ச்சை இருக்கிறது. ஆகவே அதைப் பற்றியும் ஒரு சட்டம் வேண்டியதுதான். என்னைக் கேட்டால் தட்டில் இட்டிலி இருப்பது தெரியக்கூடாது, குறைந்த பட்சம் அவ்வளவு சாம்பாராவது ஊற்ற வேண்டும் என்று கூறுவேன்,

கடைசியாக நம் பெண்மணிகளின் ஞாபகம் வருகிறது. இவர்களுக்கு மாத்திரம் சரியானபடி இட்டிலி, சாம்பார் செய்யத் தெரிந்துவிட்டால், ஆண் உலகத்தையே அடிமைப்படுத்தி விடலாம். ஆனால் அவர்களுக்குத் தெரியாத வரையில் நம் பாடு கொண்டாட்டந்தான்!......

"யார் ஸார், அங்கே? இன்னொரு இட்டிலி - சாம்பார்!"

# தீவளிக்குத் தீவளி

சட், சட், சட், சட், சட், சட், சட்! என்ன தொல்லை! என்ன தொல்லை! இந்தச் சனியன் வந்தாலே இப்படித்தான்!

இன்னும் முப்பது நாள் இருக்கு, இன்னும் இருபத்தொன்பது நாள் இருக்கு, இன்னும் இருபத்தெட்டு நாள் இருக்கு......என்று எவ்வளவு ஆசையாக எதிர்பார்த்தேன்! கடைசியில் என்னடா என்றால்......சட், சட்......

நான் எதைப் பற்றிப் பேசுகிறேன் என்றே புரியவில்லையோ? எதைப் பற்றிப் பேசப் போகிறேன்? எல்லாம் இந்த முதல் தேதியைப் பற்றித்தான்.

ஒவ்வொரு மாதம் முதல் தேதி வந்ததும் அடுத்த மாதம் முதல் தேதி எப்பொழுது வரப்போகிறதென்று நாட்களை எண்ண ஆரம்பித்து விடுவேன். என்ன பண்ணலாம்? என்னைப் போல் வரவுக்கு மிஞ்சின செலவுள்ளவர்களாயிருந்தால் நீங்களும் அப்படித்தான் பண்ணுவீர்கள்!

ஆனால் முதல் தேதி வந்தாலோ, "ஏன் வந்தது சனியன்" என்று இருக்கிறது. பொழுது விடிந்ததும் சுக்கலாம் பரதரம் குட்டி விடுவாள் சரஸ்வதி அம்மாள். "சாயந்திரம் சம்பளப் பணம் ஜாடா வீடு வந்து சேரணும். 'அதற்குக் கழித்துக் கொண்டான், இதற்குக் கழித்துக் கொண்டான்' என்றெல்லாம் பொய்யும் புனை சுருட்டும் சொன்னேளோ—" என்று கட்டளை பிறந்துவிடும்.

"இந்தக் கட்டளையை எப்படி நிறைவேற்றப் போகிறேன், ஈச்வரா" என்று கவலைப்பட்டுக் கொண்டிருக்கையில், யம கிங்கரர்கள் போல் வந்து சேர்ந்து விடுவார்கள் வீட்டுக்கார வீராசாமி, பால்கார பாலுசாமி, தயிர்க்கார தங்கசாமி, துணிக்கடை துரைசாமி, நகைக் கடை நாகசாமி ஆகிய எல்லா ஆசாமிகளும்.

எல்லாருமாகச் சேர்ந்து திண்ணையில் கூடி, பத்து நாய்கள், இருபது கழுதைகள், முப்பது சிங்கங்கள், நாற்பது யானைகள், ஐம்பது காண்டா மிருகங்கள் எல்லாமாகச் சேர்ந்து எவ்வளவு

சத்தம் போடுமோ அவ்வளவு சத்தம் போடுவார்கள். இதனால், "சாயந்திரம் சம்பளம் வாங்கிக்கொண்டு வீடு திரும்பினதும் எங்கள் கணக்கைத் தீர்த்து விடணும்" என்று என்னை ஞாபகப் படுத்திவிட்டதாக அவர்கள் எண்ணம்!

ஆபீஸுக்குப் புறப்பட்ட பிறகாவது நம்மை விடுவார்கள் என்று நினைக்கிறீர்களா? முன் காலத்தில் சிஷ்ய கணங்கள் குருவைப் பின்பற்றிச் சென்றதுபோல், இவர்களும் ஆபீஸ் வரையில் என்னைத் தொடர்ந்து வருவார்கள். ஆனால் அதற்குமேல் அவர்கள் பாச்சா பலிக்காது.

ஆபீஸுக்குள்ளும் நுழைந்து மற்ற உத்தியோகஸ்தர்களிடமும் இன்னும் துரையிடமும் சொல்லி, என் 'மானத்தைக் கப்பலேற்ற' வேண்டும் என்றுதான் இவர்களுக்கு ஆசை. ஆனால் காவல் புரியும் அந்தக் கூர்க்கா சேவகனிடம் இவர்கள் வால் ஆட்ட முடியுமா, என்ன?

மத்தியானம் ஆனதும் சம்பளம் கொடுக்கிறார்கள் என்று பையன் வந்து சொல்வான். ஆசையாகப் போவேன். காஷியர் கொடுக்கும் கவரைப் பெற்றுக் கொள்வேன். அடுத்த கணமே ஒரு பெரிய சந்தேகம் வந்துவிடும். "நம் கையில் இருப்பது நம் சம்பளம்தானா? அடடா, அடையாளமே தெரியவில்லையே! பஞ்சத்தில் அடி பட்டதுபோல், வாடி, வதங்கி, உருக்குலைந்து, சீரழிந்து நிற்கிறதே! நம் சம்பளம் அறுபது ரூபாய் என்றல்லவா ஞாபகம்? கையில் இருப்பது இருபத்து மூன்று ரூபாய், ஐந்தணா, ஏழு தம்பிடியல்லவா?"

என் சந்தேகத்தைக் காஷியர் தெரிந்துகொண்டு, "என்ன ஐயா யோசனை பண்றேள்? நாலாவது வருஷக் கடனுக்காக மூன்று ரூபாய், மூன்றாவது வருஷக் கடனுக்காக ஐந்து ரூபாய், போன வருஷக் கடனுக்காகப் பத்து ரூபாய்..." என்று ஜாப்தா வாசிக்க ஆரம்பித்து விடுவார். "சரி, இன்னும் கொஞ்ச நாழி நின்றால் 'அடுத்த வருஷம் வாங்கப் போகிற கடனுக்காக ஓர் ஆறு ரூபாய்,' என்று பிடித்துக் கொண்டாலும் பிடித்துக்கொண்டு விடுவார்" என்று பயந்து திரும்பினால், என் எதிரே நிற்பது நம் ஆபீசுக்குப் பக்கத்து ஹோட்டல் காரன்! அவன் கணக்கை அழுது தொலைப்பதைத் தவிர வேறு வழியில்லை.

அன்று ராத்திரி பத்து மணிக்குத்தான் வீடு போய்ச் சேர்வேன் என்று நான் சொல்லாமலே தெரிந்து கொண்டிருப்பீர்கள். அப்படி நாழி கழித்துப் போனாலும் நேர் வழியில் போக முடியுமா? அந்தச் சந்தில் நுழைந்து இந்தச் சந்தில் திரும்பி, அதற்கு அடுத்த சந்தில் விழுந்தடித்து இந்த மாதிரி ஒரு பர்லாங்கு தூரத்தை ஒரு மைல், இரண்டு மைல் என்று நீட்ட வேண்டி வரும்.

அதற்குமேல் இருக்கிறது சரசுவுடன் சண்டை. ஆனால் அதையெல்லாம் சொல்லி நானே என் மானத்தைக் கப்பலேற்ற விரும்பவில்லை.

இதற்குப் பிறகு ஐந்தாறு நாட்களுக்கு இந்தக் கடன்காரர்கள் கண்ணில் படாமல் இருப்பதற்காக நான் பண்ணும் யுக்திகளைப் பற்றியும், கண்டுபிடிக்கும் பொய்ச் சாக்குகளைப் பற்றியும், நம்ப பையன், "அப்பா குதிருக்குள் இல்லை" என்று சொல்லும் தகவல்களைப்பற்றியும் ஒரு தனிப் புராணம்தான் எழுதவேண்டும்.

என்னைக் கேட்டால், இப்படி மாதா மாதம்—ஒரு தடவையா, இரண்டு தடவையா, வருஷம் பன்னிரண்டு தடவை—சம்பளம் கொடுப்பதால்தான் இத்தனை கஷ்டங்கள் நேரிடுகின்றன என்று சொல்வேன். சம்பளப் பணத்தைச் சேர்ந்தாப்போல் வருஷத்திற்கு ஒரு தடவை, அதாவது 'தீவளிக்குத் தீவளி' கொடுப்பது என்று இருந்தால் எவ்வளவு சௌகரியம் என்கிறீர்கள் !

முதலில் சம்பளம் வந்தால் அதன் பின்னாடேயே வந்து விடுகிறார்களல்லவா சில கடன்காரர்கள் : அவர்களைப் பார்த்தும் பயப்படத் தேவையில்லை. "தீபாவளியும் அதுவுமா வந்து கழுத்தை அறுக்காதே, போடா" என்று அவர்களைக் கழுத்தைப் பிடித்துத் தள்ளிவிடலாம். நாம் தள்ளிவிடும் வேகத்தில் அவர்கள் திரும்பி வராமலேயே போய்விட்டால் ரொம்ப க்ஷேமம். இல்லை, திரும்பி வந்தார்கள், ஏதாவது சாக்குப் போக்குச் சொல்லி அலைக் கழித்துக் காலை ஒடித்து விட்டால் போகிறது. அப்படியும் வண்டி வைத்துக்கொண்டு வந்தார்கள் என்றால், கூப்பிட்டு உள்ளதைச் சொல்லிவிட வேண்டியதுதான்.

"இதோ பாரும், செட்டியாரே ! வீணாக அலைந்து பிரயோசனமில்லை. கையில் இருக்கும் பணம் செலவழிந்து விட்டது. அடுத்த சம்பளம் வந்ததும் கொடுத்து விடுகிறேன்."

இதற்குமேல் வண்டிச் சத்தம் கொடுத்துக்கொண்டு வரு வதற்குச் செட்டியாருக்குப் பைத்தியமா பிடித்திருக்கிறது?

ஆகவே வருஷத்தில் முதலில் ஒரு பதினைந்து நாள், கடைசியில் ஒரு பதினைந்து நாள் தள்ளிவிட்டால், பாக்கிப் பதினொரு மாதம் சேர்ந்தாப்போல் பிடுங்கல் இல்லாமல் நிம்மதியாக இருக்கலாம்.

பால்காரர் முதலியவர்கள் நின்றுவிடுவார்களோ என்று பயப் படாதீர்கள். நின்றால் யாருக்குக் கஷ்டம்? ஒரு வருஷ வாடிக்கை யல்லவா அவர்களுக்குப் போய்விடும்? அத்துடன் "ஏன் நடுவில் மோசம் பண்ணினாய்?" என்று நீங்கள் பழைய கணக்கைக் கொடுக்க மறுக்கலாம். ஆகவே அவர்கள் வாயைத் திறக்காமல் வழக்கம்போல் வந்துகொண்டிருப்பார்கள். அப்படி நடுவில் ஏதா வது முணுமுணுத்தால், "என்னடா பயித்தியக்காரனா யிருக்கே? சம்பளப்பணம் வந்துதானே கொடுக்கணும்?" என்று அவனுக்குப் பைத்தியக்காரப் பட்டம் கட்டிவிட்டால் போகிறது.

இந்த முறையில் இன்னும் ஒரு பெரிய அனுகூலம் இருக்கிறது. முன்னெல்லாம் போல் மாதத்துக்குப் பத்துப் பொய்ச் சாக்குகள் தயாரித்துக்கொண்டு அவதிப்படவேண்டாம். ஏதாவது பெரிய சாக்காகப் பார்த்து வருஷத்திற்கு ஒன்று வைத்துக்கொண்டால் போதும். முக்கால்வாசி இந்தச் சிரமம்கூடத் தங்களுக்கு ஏற் படாது. தன்னைப்போல் பெண்ணுக்குக் கல்யாணம், பிள்ளைக்குச் சீமந்தம், பேத்திக்கு ஆண்டு நிறைவு, பேரனுக்கு அக்ஷராப்பியாசம் என்று ஏதாவது வந்துகொண்டேயிருக்கும். பேசாமல், பாரத்தை யெல்லாம் அவற்றின் மேல் போட்டுவிடலாம்.

எனவே, சம்பளம் கொடுக்கும் முதலாளிகள் தீவளிக்குத் தீவளி சம்பளம் கொடுக்கப் போகிறார்களா, அல்லது நம் சம்ப ளத்தை உயர்த்தப் போகிறார்களா?......வேண்டாம், எத்தனை சம் பளத்தை உயர்த்தினாலும் வரவுக்கு மிஞ்சின செலவாய்த்தான் இருக்கிறது. ஆகவே செலவுக்கு மிஞ்சின சம்பளம் கொடுக் கட்டும், போதும்.

எப்படி என் யோசனை! அதற்குத்தான் சொன்னேன் என்னைக் கேளுங்கோன்னு என்று.

# கறிகாய் பேரம்

"பி. ஏ. பாஸ் பண்ணிக் குட்டிச் சுவராய்ப் போனான்! கடையிலே போய் ஒரு சாமான் வாங்கிண்டு வரத் துப்புக் கிடையாது. பி. ஏ. பாஸ் பண்ணினானும், பி. ஏ.!"

என் தாயார் ஒரு சமயம் என்னைப் பற்றி இப்படிக் கூறி வந்தாள். அதற்குக் காரணம், எனக்குச் சாமான் வாங்கிக் கொண்டு வரத் தெரியாததுதான்.

"சாமான் வாங்கிண்டு வரத் தெரியாதா? அதில் என்ன கஷ்டம்? கடைக்குப் போக, பணத்தைக் கொடுக்க, சாமானை வாங்கிக்கொண்டு வர" என்று நீங்கள் கேட்கலாம்.

ஆனால் "காசிக்குப் போனேன், காவடி கொணர்ந்தேன்" என்று சாமான் வாங்கிக்கொண்டு வருவதை எந்தத் தாயாரும் ஒப்புக்கொள்ள மாட்டாள்.

சாமான் வாங்குவதற்கு மிகவும் அத்தியாவசியமாகத் தெரிந்திருக்க வேண்டிய விஷயம் 'பேசுகுதல்' என்பது. இதற்கு அறுபத்தைந்தாவது கலை என்று பெயர் கொடுத்தாலும் மிகையாகாது.

முதலில் கடைக்குப் போவதற்கு என்று ஒரு தனி உடை வைத்துக் கொள்ளவேண்டும். அது எவ்வளவுக் கெவ்வளவு அழுக்கா யிருக்கிறதோ எவ்வளவுக் கெவ்வளவு கந்தலா யிருக்கிறதோ, எவ்வளவுக் கெவ்வளவு சிக்குப் பிடித்திருக்கிறதோ, அவ்வளவுக் கவ்வளவு நல்லது. இதைக் கடைக்குப் போகும் சமயம் மாத்திரம் உபயோகிக்கவேண்டும். பாக்கிச் சமயங்களில் ஜாக்கிரதையாக அது வெளுப்பு ஆகாமல் பார்த்துக் கொள்ளவேண்டும். இம்மாதிரி பொருத்தமான ஆடை அமைவதே பாதிக் காரியம் ஆன மாதிரி.

உடுப்பு மாட்டிக்கொண்டால் மட்டும் போதாது. கொஞ்சம் 'மேக் அப்' பும் செய்து கொள்ள வேண்டும். நீங்கள் மிகவும் அழகாக வாரிவிட்டிருக்கும் கிராப்பைக் கொஞ்சம் கலைத்து விட்டுக் கொள்ளவேண்டும். முடிந்தால் நாலு நாள் பட்டினி கிடந்தவன் போல் முகத்தை வைத்துக் கொள்ளுங்கள். அவ்வளவுதான்.

மார்க்கெட்டுக்குப் போனதும், எல்லாக் கடைகளையும், பத்துத் தடவைக்குக் குறையாமலாவது சுற்றிவர வேண்டும். பிறகு ஏதாவது ஒரு கடைக்குப் போகவேண்டும் என்று தீர்மானித்துக் கொள்ளுங்கள். ஆனல் அந்தக் கடையைத் தவிர, பாக்கி எல்லாக் கடைகளுக்கும் போங்கள். ஒவ்வொரு கடையின் முன்னல் ஒரு கால்மணி நேரமாவது நின்று, எல்லாச் சாமான்களின் விலையையும் விசாரித்து விட்டு நழுவி விடுங்கள்.

முடிவில் முதலில் தீர்மானித்திருந்த கடைக்கு வந்தீர்களா?



ரொம்ப சரி. ஆனல் வந்ததும், வராததுமாக உங்களுக்கு வேண்டிய கறிகாயை விலை கேட்டு விடாதீர்கள். முதலில் ஒரு நிமிஷம் நின்று பாருங்கள். பிறகு, நீங்கள் தேடிய சாமான் அங்கு இல்லாதது போல் முகத்தைச் சுளுக்கிக்கொண்டு, அத்துடன் ஒரு 'ச்சு' வும் கொட்டி விட்டு வீட்டுக்குத் திரும்புகிறவர் போல் வேகமாக மார்க்கெட் வாசலுக்கு நடையைக் கட்டுங்கள்.

"ஏஞ்சாமி, உங்களுக்கு என்ன வேணும், சாமி? இங்க வாங்க சாமி, நான் தாரேன் சாமி" என்று கடைக்காரன் உங்களைக் கூப்பிடுவான்.

கூப்பிட்டதும் நீங்கள் போய்விடக் கூடாது. "போப்பா, நீ ஒண்ணும் நயமாகக் கொடுக்க மாட்டே" என்று மார்க்கெட் வாசற்படியில் இருந்து கொண்டே கத்துங்கள்.

"இல்லே சாமி, நயமாக் கொடுக்கிறேன், சாமி" என்று நான்கு தடவையாவது அவன் கெஞ்சிய பிறகு தான் நீங்கள் போக வேண்டும். கடையின் முன் உட்கார்ந்து கொண்டு எல்லாக் கறி காய்களின் விலையையும் கேளுங்கள். அவன் சொன்ன விலையில் நாலில் ஒரு பங்குக்குக் கொடுப்பானு என்று பாருங்கள். அவன் முடியாது என்று சொல்லுவான். பரவாயில்லை. அவன் அப்படிச் சொல்ல வேண்டுமென்றுதான் நான் உங்களைக் கால் விலைக்குக் கேட்கச் சொன்னது. எல்லாச் சாமான்களின் விலையையும் விசாரித்த பிறகு எழுந்து நின்று கொண்டு, "சரி நாழியாகிறது. கத்தரிக்காய் என்ன சொல்றே?" என்று கேளுங்கள்.

"அதுதான் சொன்னேனே சாமி! எங்கே வேணுமானுலும் கேட்டுப்பாருங்க. வீசை மூணணு தானுங்க."

"மூன்றணுவா ? அடேயப்பா ! சரி, எப்படித்தான் கொடுப்பே சொல்லு ?"

"சாமி! உங்களுக்காகச் சொல்றேன். வீசை ரண்டரையணுவுக்குப் போடறேனுங்க. அதற்கு ஒரு தம்படிகூடக் குறைக்க முடியாதுங்க."

"சரி யப்பா, நான் போறேன்" என்று நீங்கள் கிளம்பி நாலு அடி எடுத்து வைக்கவேண்டும்.

"ஏஞ்சாமி, நீங்கதான் ஒரு விலை கேளுங்களேன்."

"கத்தரிக்காய்க்கு என்னப்பா கிராக்கி வந்து விட்டது. இந்த மாதிரி கத்தரிக்காய் திருச்சினுப்பள்ளியில் வீசை ஒரணுவுக்குச் சிரிப்பாய்ச் சிரிக்குமே" என்று சொல்ல வேண்டும். (திருச்சினுப் பள்ளி வாசிகள் வேறு ஏதாவது ஊரின் பெயரைச் சொல்ல வேண்டும்.)

"சாமி! இந்த மாதிரி இளம் பிஞ்சு நீங்க வாங்கியிருப்பீங்களா?" என்று நான்கு கத்தரிப் பிஞ்சுகளை எடுத்து நீட்டுவான். நீங்கள் உடனே குவியலில் இருந்து ஒரு சொத்தைக் காயை எடுத்துக் காண்பித்து, "என்னப்பா, சொத்தையை வைத்துக்கொண்டு பிரமாதப்படுத்தறயே" என்று கூறி அவனை மடக்க வேண்டும்.

"சரி, சாமி. இரண்டே காலணு போட்டுக்கோங்க."

"அதெல்லாம் முடியாது. வீசை ஒண்ணே காலணா. போட முடியுமா, முடியாதா?"

இதைக் கேட்டதும் கடைக்காரனுக்குக் கோபம் வரும் என்பதில் சந்தேக மில்லை. உங்களைக் கன்னா பின்னாவென்று பேசுவான் என்பதிலும் தடையில்லை. ஆனால் இந்தக் கலையில் இதெல்லாம் நடக்க வேண்டிய அம்சங்களாதலால் அதைப் பற்றிக் கவலைப் படத் தேவையில்லை. கண்ணாடி யில்லாமலே நம்முடைய முகத்தின் அழகைப் பற்றியும், நம்முடைய முகத்தின் ரூபலாவண்யங்களைப் பற்றியும் இன்னும் நம்முடைய யோக்யதையைப் பற்றியும் கடைக்காரனிடமிருந்து தெரிந்து கொள்வது எல்லாருக்கும் கிடைக்கக் கூடியதா, என்ன! ஆகவே இதைப் பொருட்படுத்தாமல் ஐந்து நிமிஷம்நின்றால், கடைக்காரன் பேசி ஓய்வான். "சரி, ரண்டணா போட்டுக்கோங்க" என்று ஒரு படி இறங்கி வருவான்.

மூன்றணா சொன்ன காயை இரண்டணாவுக்குத் தருகிறானே என்று சந்தோஷப் பட்டுவிடாதீர்கள். "ஒண்ணரை அணாவுக்குச் சம்மதமானால் சொல்லு, இல்லாவிட்டால் போ" என்று சொல்லி விட்டு, எண்ணி பத்து அடி எடுத்து வையுங்கள். பத்தாவது அடி எடுத்து வைத்ததும், திரும்பிப் பாருங்கள். கடைக்காரன் உங்களைக் கூப்பிட்டாலும் கூப்பிடுவான். அப்படிக் கூப்பிடாவிட்டால், "என்னப்பா, என்ன சொல்றே?" என்று கேட்டுக் கொண்டே நீங்களே திரும்பிவாருங்கள்.

இம்மாதிரி நாலைந்து தடவையாவது நீங்கள் நடந்து கொண்டால், அவன் உங்கள் சங்காத்தம் பொறுக்க மாட்டாமல் ஒண்ணே முக்காலணாவுக்குச் சம்மதிப்பான் என்பதில் சந்தேகமில்லை.

இதற்குப் பிறகுதான் இருக்கிறது 'கொசிர்' விஷயம். விலையிலேயே நீங்கள் இவ்வளவு பிசுகி விட்டதால் கொசிர் போட அவன் சம்மதிக்க மாட்டான். ஆகவே, "எல்லாம் கொடுக்கலாம்ப்பா" என்று சொல்லிக் கொண்டே ஒரு காயை எடுத்துப் பைக்குள் போட்டுக் கொண்டு விடுங்கள்.

"காயைக் கீழே போடு, சாமி" என்று அவன் உங்கள் கையைப் பிடித்து இழுப்பான். இதை ஒரு அவமானமாகக் கருதாமல் அவன் பிடியினின்றும் மாத்திரம் நழுவி வந்து விட்டால் நீங்கள் சாமர்த்தியசாலிதான்!

இந்தக் கலையின் முக்கியமான அம்சங்கள் இவ்வளவுதான். "ஆனால் இந்தச் சள்ளையை யெல்லாம் யாரால் படமுடியும்? இதற்கு ஏதாவது குறுக்கு வழி கிடையாதா?" என்று நீங்கள் கேட்கலாம்.

குறுக்கு வழியும் இருக்கிறது. கடைக்குப் போனால், "போனேன், வந்தேன்" என்று போய் வராதீர்கள். எங்கேயாவது சிநேகிதன் வீட்டில் ஒரு மணி நேரம் அரட்டை அடித்து விட்டு நேரங் கழித்து வாருங்கள். நீங்கள் சாமான் வாங்கிக் கொண்டு வந்த கெட்டிக்காரத் தனத்தை வீட்டில் புகழாவிட்டால், என்னைக் கேளுங்கோன்னு!



# தொட்டிற் பழக்கம்

ஏன் அப்படிப் பதுங்கிப் பதுங்கி மறைகிறார்? கடன் வாங்கினவன் கடன் கொடுத்தவனைக் கண்டு நடுங்குவது போலல்லவா இருக்கிறது அவர் செய்கை? அத்தனைக்கும் அந்த ரீதியின்படி பார்த்தால் அவரைக் கண்டு நானல்லவா பதுங்க வேண்டும்?

என் நண்பர் மணி அய்யரின் செய்கை இத்தனை சந்தேகங்களுக்கும் இடம் அளித்தது. இது விஷயத்தை ஆராயாமல் விடக்கூடாதென்று, "இரண்டு கால் பாய்ச்சலில்" பாய்ந்து மணி அய்யரை நெருங்கினேன். என்னைக் கண்டதும் அவர் 'மாடு திருடின கள்ள'னைப் போல் திரு திரு என்று விழித்தார். (என் அனுபவத்தில் நான் ஆடு திருடின கள்ளனைப் பார்த்ததில்லை.)

கையில் வைத்துக் கொண்டிருந்த ஏதோ ஒரு வஸ்துவை மறைக்க மிகவும் சிரமப்பட்டார். நானா அவரை விடுபவன்? வெடுக்கென்று கையைப் பிடித்து இழுத்தேன். 'படக்'கென்று கையில் இருந்த வஸ்து கீழே விழுந்தது. எடுத்துப் பார்த்தால் அது ஒரு காலண்டர்!

அட பாவமே! ஒரு காலண்டருக்காகவா இப்படி அவர் ஓடி ஒளிந்தார்! ஆனால் அவரைக் குற்றம் சொல்லியும் பிரயோசனமில்லை. எங்கே அவர் காலண்டரை நான் பிடுங்கிக் கொண்டு போய்விடப் போகிறேனோ என்று அவருக்கு அவ்வளவு பயம்!

ஏனெனில் காலண்டர் சம்பாதிப்பதற்குச் சிலர் மிகச் சுலபமான இம்முறையைத்தான் கைக் கொள்ளுகிறார்கள். தெருத் திண்ணையில் கூர்ச்சம் போல் உட்கார்ந்து கொள்ள வேண்டியது: தெரிந்தவன் எவனாவது காலண்டர் கொண்டு போனால் அதை மிகவும் சுவாதீனமாகப் பிடுங்கிக் கொள்ள வேண்டியது! அவன் அந்தக் காலண்டருக்காக எத்தனை நடை நடந்திருப்பான்? எத்தனை பல்லைக் காட்டிருப்பான்? இதையெல்லாம் அவர்கள் நினைத்துப் பார்ப்பதில்லை.

"பின் காலண்டர் சம்பாதிப்பது தான் எப்படி?"

இது சரியான கேள்வி தான். ஆனால் இதற்குப் பதில் தெரிய வேண்டுமென்றால் அதோ சமையல் அறையில் அட்டகாசம் செய்து கொண்டிருக்கும் அந்தப் பயலைக் கேளுங்கள். அவன் தான் என் மைத்துனன். போன டிசம்பர் மாதத்திலிருந்து என்னுடன் இருக்கிறான். அவன் கொண்டு வந்து சேர்த்த காலண்டர்கள்தான் என் வீட்டில் மாட்டப்பட்டிருப்பவையும், மாட்ட இடமில்லாமல் பெட்டியில் தூங்குபவையும்.

வெகு நாளாக என் மைத்துனன் காலண்டர் காலண்டராய்க் கொண்டு வந்ததன் மர்மம் எனக்கு விளங்கவில்லை. ஆனால் ஒரு நாளைப் பார்த்தாப்போல் ஒரு நாள் சரசு பணத்துக்கு நச்சரிக்க ஆரம்பிக்கவே, எனக்கும் சரசுவுக்கும் சண்டை மூண்டுவிட்டது.

“இப்படி என் கழுத்தை யறுத்துப் பணம் வாங்குகிறாயே, அதை என்னதான் செய்கிறாய்?” என்று ஒரு நாள் சீறினேன்.

சரசு இதற்கு அளித்த பதில், என்னை உக்கிராண அறைக்கு அழைத்துச் சென்றதுதான்.

அங்கு நான் கண்ட காட்சியை என்ன வென்று சொல்வேன்! அன்று மாத்திரம் ஆபீசுக்குப் போக வேண்டிய அவசியம் இல்லாமல், லீவு நாளாயிருந்திருந்தால் அப்படியே மூர்ச்சித்து விழுந்திருப்பேன் என்பதில் சந்தேகயில்லை.

தமிழ் நாட்டில் உள்ள எல்லாரையும் அழைத்துப் பத்து நாள் விருந்து வைக்கலாம், அத்தனை அரிசி ஒரு பக்கம். உலகத்தில் உள்ள பத்திரிகாசிரியர்களுக்கெல்லாம் ஒரு வருஷத்திற்காவது உபயோகப்படக்கூடிய தலைவலி மருந்து தினுசுகள் இன்னொரு பக்கம். ஓர் ஆயிரம் மாப்பிள்ளைகளுக்குத் தலை தீபாவளி நடத்தலாம், அத்தனை ஜவுளி தினுசுகள் ஒரு பக்கம். இன்னும் ஓர் ஆயிரம் மாப்பிள்ளைகள் காசி யாத்திரைக்குப் புறப்படலாம், அத்தனை குடை வகைகள் இன்னொரு பக்கம்.

ஒரு தலை முறைக்கு மைசூர்ப் பாகாகவே பண்ணிச் சாப்பிடலாம், அத்தனை சர்க்கரை ஒரு பக்கம். நான்கு தலைமுறைகளுக்குக் காப்பியாகவே போட்டுக் குடிக்கலாம், அத்தனை காப்பிக் கொட்டை இன்னொரு பக்கம்—இப்படிச் சாமான்களாக வாங்கிக் குவித்திருந்தது.

நம் மைத்துனனின் சாமர்த்தியமே சாமர்த்தியம்! ஒவ்வொருத்தர் காலண்டர் வாங்குவதற்காகக் கடைக்காரனின் முகத்தையே பார்த்துக் கொண்டு நிற்பார்கள், அல்லது மிகவும் அக்கரையோடு அவனைக் குசலப் பிரச்னம் விசாரிப்பார்கள். இதிலெல்லாம் அவனுக்கு நம்பிக்கையுமில்லை, மனதுக்குப் பிடித்ததாகவுமில்லை "சாமான் வாங்கினால் தன்னைப் போல் காலண்டர் கொடுக்கிறான்" என்று தீர்மானித்து, சாமானாகவே வாங்கிக் குவித்து விட்டான்!

இத்தனை சாமான்களையும் வைத்துக் கொண்டு நான் என்ன பண்ணுகிறது? அப்படியே வைத்திருந்தால் வீணாக அல்லவா போய் விடும்? பேசாமல் விற்பதற்கு ஏற்பாடு செய்ய வேண்டியது தான்! இதற்காக நானே ஒரு காலண்டர் போடும்படி நேரிடுமோ, என்னமோ!

ஆனால் இப்படிக் காலண்டராக வாங்கிச் சேர்க்கிறார்களே எதற்காக என்றுதான் தெரிய வில்லை. தேதி தெரிந்து கொள்வதற்கா?......ஊ ஹூம், நான் நம்பத் தயாராயில்லை. என்னைக் கேட்டால் சுவரில் எத்தனை காலண்டர்கள் தொங்கினாலும் அவற்றைக் கொண்டு தேதி கண்டு பிடிக்க முடியாது என்று கூறுவேன்.

கடியாரக் கடையில் எங்கே பார்த்தாலும் கடியாரமாக இருக்கும்; ஆனால் மணி மாத்திரம் கண்டு பிடிக்க முடியாது. அதைப் போலத்தான் இதுவும்.

இதனால் எனக்குத் தேதியே தெரியாது என்று நினைத்து விடாதீர்கள். நான் தேதி கண்டு பிடிக்கும் முறையே அலாதி.

சம்பளம் வந்தால் முதல் தேதி. ஊரிலிருந்து, 'பணம் அனுப்பு' என்று கடிதம் வந்தால் இரண்டாம் தேதி. வீட்டுக்காரச் செட்டியார் வாடகைக்கு வந்து நின்றால் மூன்றாம் தேதி. பையன் பள்ளிக்கூடச் சம்பளம் கேட்டால் நாலாம் தேதி. இன்ஷூரன்ஸ் கம்பெனியிலிருந்து 'ரிமைண்டர்' வந்தால் ஐந்தாம் தேதி—என்று இப்படித் தெரிந்து வைத்திருக்கிறேன்.

இல்லை, காலண்டர்கள் படத்துக்காக என்கிறீர்களோ? அதுவும் இல்லை. முதலில் காலண்டரில் காணப்படும் 'படத்'துக்குப் படம் என்றே பெயர் கொடுக்க நான் தயாராயில்லை. கிளியின் மூலம் தன் காதலனுக்குத் தூது விட்டுக் கொண்டிருக்கும் ஓர்

அழகியைக் கன்னத்தில் அறைந்தாற்போல், அவள் உடலின் மேல், "எருமை மாடு டிரேட் மார்க் பெருங்காயமே மணத்தில் சிறந்தது" என்று போடப்பட்டிருப்பதை ரஸிகத்தன்மை கடுகத்தனையாவது உள்ள யாரால்தான் ஸகிக்க முடியும்? இல்லை, இரண்டு சதிபதிகள் மிகவும் அந்தரங்கமாகப் பேசிக் கொண்டிருக்கும் பொழுது, நடுவே ஒரு குடையைப் போடுவதைத்தான் யாரால் பொறுக்க முடியும்?

ஆகவே இந்தக் 'காலண்டர் பித்து'க்கு வேறு ஏதாவது காரணம்தான் இருக்க வேண்டும். சிறுவர்கள், டிராமா நோட்டீஸ், சினிமா நோட்டீஸ் முதலியவற்றை விழுந்து விழுந்து சேகரிப்பார்கள். கவனித்திருக்கிறீர்களா? ஒரு டிராமா நோட்டீசுக்காக நோட்டீஸ் கொடுக்கும் வண்டியின் பின்னால் 'லொங்கு லொங்கு' என்று ஒரு மைல்கூட ஓடுவார்கள். அதே தொட்டிற் பழக்கம் தான் இப்பொழுது காலண்டர் பித்தாகப் பரிணமித்திருக்கிறது என்று நினைக்கிறேன். தெளிந்த புத்தியுள்ள எவனும் இப்படிப் பித்துப் பிடித்து அலையமாட்டான் என்றும் திடமாய்க்கூறுவேன்...

அது கிடக்கட்டும். உங்களிடம் நல்ல காலண்டராக இருந்தால் என்னை ஒரு வார்த்தை கேளுங்கோன்ன!



# குடும்ப ரகசியம்

“ என்னைக் கேளுங்கோன்னு! என்னைக் கேளுங்கோன்னு!” என்று எத்தனை தடவை எடுத்துச் சொல்லித்தான் என்ன பிர யோசனம்? என்னுடைய ஆப்த நண்பர் ‘தாசானுதாசர்’ அவர் களுக்கு என்னைக் கேட்க வேண்டுமென்று தோன்றவில்லை.

‘தாசானுதாசர்’ என்பது அவருடைய நிஜப்பெயர் அல்ல என்று நீங்களே தெரிந்து கொண்டிருப்பீர்கள். பின் நாங்கள் அவரைத் ‘தாசானு தாசர்’ என்று அழைத்ததற்கும், சில சமயம் அதையே தனித்தமிழ்ப்படுத்தி “அடியாருக்கு அடியார்” என்று கூப்பிட்டதற்கும் காரணம் என்ன? அப்படி அவர் செய்த தப்பிதம்தான் என்ன?

ஒன்றுமில்லை. நீங்களும் நானும் செய்துகொண்டு வரும் ஒரு பெரிய ‘குற்ற’த்தைத்தான் அவரும் செய்து விட்டார். அதாவது, தமது மனைவிக்குத் தாசானுதாசர் ஆகிவிட்டார்.

இதில் தப்பு ஒன்றும் இல்லை என்பது உங்களுக்கும் தெரியும், எனக்கும் தெரியும். “இல்லாள் அகத்திருக்க இல்லாத தொன் றில்லை” என்னும் பழமொழி பொய்யாகலாமா? ஆகவே தங்கள் மனைவி தங்கள் வீட்டுக்கு வரும்பொழுது கொஞ்சம் அதிகாரத் தையும் கையுடன் கொண்டு வருகிறாள்.

அப்படியென்றால் நம் நண்பர் செய்த பிசகுதான் என்ன? அது எந்தக் காரியத்தையும் செய்வதற்கு ஒரு வழி இருக்கிறது என்று தனக்காகவும் தெரியாமல், என்னைப் போன்ற தெரிந்தவர் களையும் கேட்காததுதான்.

முதலில் நாம் நம் மனைவிக்குப் பயந்து கொண்டிருக்கிறோம், நம்மை ஆட்டி வைப்பது எல்லாம் அவள்தான் என்று வெட்ட வெளிச்சமாக நம்மைக் காட்டிக்கொடுத்து விடுவது இந்தப் பாழும் பணம்தான். நண்பர் ஒருவர் அவசரம் அவசரமாக வருகிறார். ஒரு நல்ல சினிமாப் படத்தைக் குறிப்பிட்டு அதற்கு உங்களை அழைக்கிறார். உங்களுக்குப் போகவேண்டுமென்றுதான் ஆசை. ஆனால் மணிபாக்ஸ் தங்கள் ‘மிஸ்ஸஸ்’ கையில் அல்லவா இருக்கிறது?

நான் சொல்லப்போகும் கலையின் தத்துவம் அறியாதவர்கள் என்ன செய்கிறார்கள்? ஓர் அசட்டுச் சிரிப்பு சிரித்துவிட்டு, "இதோ வந்துட்டேன்" என்று அங்கிருந்து சமையல் அறைக்குள் நுழைகிறார்கள்—மனைவியிடமிருந்து சினிமாவுக்குப்போக உத்தரவும் பணமும் பெறுவதற்காக. இந்த மர்மம் வந்திருக்கும் நண்பருக்குத் தெரியாதா? அவரும் எத்தனையோ தடவைகளில் இந்த மாதிரி நடந்து கொண்டவர்தானே? ஆகவே தன் நண்பரைக் கையுங் களவுமாய்ப் பிடித்து விட்டவர் போல, "என்னப்பா! கஜானா சாவி அங்கேதான் இருக்கோ? ஊம், நடக்கட்டும்" என்று இடித்துக் காட்டுகிறார். அந்த அசட்டு மனிதரும் குற்றத்தை ஒப்புக்கொண்டவர்போல், 'ஈ ஹி' என்று பல்லைக் காட்டுகிறார். சில சமயம் "என்ன ஸார் பண்ணலாம்?" என்று சொல்லி, 'குற்ற'த்தையும் ஒப்புக்கொண்டு விடுகிறார்.

என்னைக் கேட்டால், அவர்கள் நடந்துகொள்ள வேண்டிய விதமே வேறு. அந்த விதமாக மட்டும் அவர்கள் நடந்து கொண்டிருந்தால் அவர்கள் 'தாசானுதாசர்'கள் என்கிற விஷயமே வெளியில் வந்திருக்காது.

நண்பர் சினிமாவுக்குக் கூப்பிடுகிறாரா? சரி, உடனேயே தங்களுக்கு உடம்பு சரியில்லையென்றோ, அல்லது தங்களுக்கு வேறு ஏதாவது வேலை இருக்கிறதென்றோ, அல்லது அவர் கூப்பிடும் படம் நன்றாயிருக்காது என்பதாக யாரோ சொல்லிக்கொண்டார்கள் என்றோ சொல்லிவிட வேண்டியது. இல்லை, அவர்களுக்காகவே போகவேண்டும் என்று ரொம்ப ஆசையாய் இருந்தால், அப்பொழுது பின் கண்ட மாதிரி நடந்துகொள்ள வேண்டியது:—

நண்பரிடம் இப்படிக் கூறிவிட வேண்டியது: "ஒரு நிமிஷம் இருங்கோ, ஸார்! நம்ப காஷியரைக் கேட்டுப் பணம் வாங்கிக் கொண்டு வருகிறேன். நானெல்லாம் ஒவ்வொருத்தரைப்போல் பெண்டாட்டியைத் தலையில் வைத்துக்கொண்டு கூத்தாடுவது இல்லை, ஸார்! ஆபீஸில்தான் பணத்தைக் கணக்குப் பார்க்கிறதும், எடுக்கிறதும், வைக்கிறதுமாக இருக்கு. வீட்டிலேயும் எதற்கு ஸார், அந்தத் தொல்லை? ஒரு வேலையும் இல்லாமல் உட்கார்ந்திருக்காளே, அவள் தான் கொஞ்சம் கணக்குப் பார்த்து வச்சுக்கிட்டுமே என்று அவளிடம் ஒப்பித்து விடுகிறேன்."

இதைக் கேட்டதும் நண்பர்கள் உங்கள் சூரத்தனத்தைப் புகழாவிட்டால் என்னைக் கேளுங்கோன்னு! மனைவியை மிகவும் கண்டிப்பாய் நடத்துவது போலவும், அவளைக் கட்டாயப்படுத்திப் பணம் வைத்துக்கொள்ளும் வேலையை இட்டது போலவும் அல்லவா விஷயத்தை எடுத்துச் சொல்லியிருக்கிறீர்கள்!

அடுத்தபடியாக, ஒருவர் ஒரு "தாசானு தாசர்" என்று எடுத்துக்காட்டுவது குழந்தைகள். எத்தனையோ குடும்பங்களில் குழந்தைகளைக் குளிப்பாட்டுவது, சாதம் ஊட்டுவது, இடுப்பில் தூக்கி வைத்துக்கொண்டு விளையாட்டுக் காட்டுவது, தலை வாரி நெற்றிக்கு இடுவது முதலான காரியங்களைப் புருஷர்கள்தான் செய்யவேண்டி வருகிறது. ஆனால் நம் பாட்டி காலத்துக்கு முந்தி இதெல்லாம் பெண்கள் செய்கிற காரியங்களாயிருந்தனவாம்.

இதிலும் நீங்களே உங்களுக்குச் சத்ருவாய் விளங்குகிறீர்கள் என்றுதான் கூறுவேன். முதலில் இந்தக் காரியமெல்லாம் உங்கள் மனைவியின் தொந்தரவுக்குப் பயந்து கொண்டு செய்கிறதாகத் தான் நீங்களும் உணர்கிறீர்கள். அப்பொழுது உங்கள் முகத்தில் உங்களுக்குத் தெரியாமலே ஒரு கோணல் கண்டு விடுகிறது. அந்தக் கோணலைக் கொண்டு விஷயத்தை ஊகித்து விடுகிறார் நண்பர்.

இப்படி இருப்பதற்குப் பதிலாக, இந்தக் காரியங்களை யெல்லாம் சிரித்துக் கொண்டே செய்தால் எவ்வளவு நன்றாயிருக்கும்? "ஒரு குழந்தையைக் குளிப்பாட்டத் தெரிகிறதா? குளிப்பாட்டிக் காட்டுகிறேன், பார்!" "குழந்தைக்கு வேளா வேளை அறிந்து சாதம் ஊட்டத் தெரிகிறதா, சாதம் ஊட்டிக் காண்பிக்கிறேன், பார்!" என்று இந்த மாதிரி சற்று நண்பர் காதில் படும்படியாக இரைந்தே சொல்லிக்கொண்டு வந்தால் இன்னும் எவ்வளவு நன்றாயிருக்கும்?

இதுதான் போனால் போகிறது; நம் மனைவிக்கு அலுப்பா யிருக்கிறதே என்று கொஞ்சம் அவளுக்கு முன்னாலேயே எழுந்து காப்பி முதலியவற்றைப் போட்டு வைக்கிறோம். இல்லை, ஆபீசுக்கு நாழியாகிறதே என்று கறிகாய் முதலியன நறுக்கிக் கொடுக்கிறோம். இதற்காக, நம் நண்பர் நம்மைப் பார்த்துப் பரிகசிப்பதா? 'தாசானு தாசர்' என்று பெயர் கொடுப்பதா?

ஆனல் திரும்பவும் கேட்கிறேன். தப்பு யார் மேல்? முன் கூறியது போலவே நீங்கள் மனைவிக்கு மக்குப்பட்டம் கட்டாதது உங்கள் மக்குத்தனத்தை யல்லவா வெளிப்படுத்துகிறது?

"அவளுக்குக் காப்பியே போடத்தெரிகிறதில்லை, ஸார். நான் போட்டாலே அதற்கு ஒரு ஸ்பெஷல் ருசிதான். அதற்குத்தான் சிரமத்தைப் பார்க்காமல் நானே போட்டு விடுகிறது!" என்று இப்படி முன் கூட்டியே சொல்லி விட்டால் தங்கள் நண்பர் ஏன் வாயைத் திறக்கிறார்?

ஆனல் இப்படி அடிக்கடி மக்குப்பட்டம் கட்டுவதால் குடும்பத்திலே மனஸ்தாபம் உண்டாகலாம் என்று உங்களுக்குத் தோன்றலாம். புருஷனும் மனைவியும் கலந்து பேசிக் கொண்டு, "யாராவது மூன்ருவது மனுஷர் இருக்கும் போது மாத்திரம் மிகவும் பயத்துடன் நடந்து கொள்வது போல நடி. நான் அடிக்கிருப் போல் அடிக்கிறேன்; நீ அழுகிருப் போல் அழு" என்று புருஷன் மனைவியுடன் சொல்லி வைக்கலாமே என்று நீங்கள் கேட்கலாம். ஆனல் இது அனுபவத்துக்கு ஒவ்வாதது என்று முன் கூட்டியே தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்.

ஆகவே இனிமேலாவது உங்களுக்கு என்ன வேண்டுமானலும் என்னைக் கேளுங்கோன்னு!

அதோ, நம் வீட்டு எஜமானி அம்மாள் படுக்கையிலிருந்து எழுந்தாச்சு! அம்மாள் பல்தேய்த்து முடிப்பதற்குள் காப்பி போட்டுத் தயாராக யிருக்க வேண்டும். சனியன் பிடித்த அடுப்பு சரியாக எரிந்தால்தானே? அடேடே! குழந்தைக்கு வேறு தலை வாரிப் பின்ன மறந்து போய் விட்டேனே!



# "பேஷ்! பலே பேஷ்!"

அடுத்த வீட்டு அண்ணுசாமி அய்யர் அவசரம் அவசரமாக வந்தார்.

"என்ன ஸார்! ஊருக் கெல்லாம் உபதேசம் பண்ணுகிறீர்களே யொழிய, நம்மைக் கவனிக்கிறீர்களா?" என்று மிகவும் இரக்கமாகக் கேட்டார்.

"ஏன், கவனிக்காமல் என்ன? உம் வீட்டில் நடக்கும் எல்லா விஷயங்களையும் நான் கவனித்துக் கொண்டிருக்கிறேனே! கொஞ்ச நாளாகப் பையனுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கிருப்போல் இருக்கிறது. அது தான்......"

"அதுதான், ஸார், பெரிய கழுத்தறுப்பாகப் போய்விட்டது. இதற்கு முன் நானும் 'அவளு'ம் எவ்வளவு அன்னியோன்யமாக இருந்தோம் என்கிறீர்கள்! இப்பொழுது என்னடா என்ருல் எலியும் பூனையும் கூட அப்படிச் சண்டை போட்டுக் கொள்ளாது கள்" என்று கொஞ்சம் வருத்தமாகச் சொன்னுர்.

அண்ணுசாமி அய்யர் சில நாட்களாக முதல் வகுப்பில் வாசிக்கும் அவரது அம்பிப் பயலுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்க ஆரம்பித்திருந்தார்.

இவருடைய தொண்டையோ சொல்ல வேண்டியதில்லை. பெரிய பெரிய ஹோட்டல்களில் வீறிட்டலறும் ரேடியோ கூட இவரிடம் புறமுதுகு காட்ட வேண்டியதுதான். அம்மாவும் இது விஷயத்தில் அய்யருக்குத் துளிக்கூடச் சளைத்தவள் அல்ல. அம்பிப் பயலோ கேட்க வேண்டியதில்லை. "தாய் எட்டடி பாய்ந்தால் குட்டி பதினுறடி பாயும்" என்பார்களே, அந்தப் பழமொழியை மெய்ப்பிக்க வந்தவன் போல் விளங்கினுன். ஆகவே அடுத்த வீட்டில் நடக்கும் எல்லா சமாசாரமும் நமக்குக் கணீர் கணீர் என்று காதில் விழும்.

காலை ஆறு மணிக்கே அண்ணுசாமி அய்யர் ஆரம்பித்து விடுவார்.

"டேய், அம்பிப்பயலே! பலகையையும் புஸ்தகத்தையும் எடுத்துண்டு வாடா. பாடம் சொல்லிக் கொடுக்கிறேன்."

"போ, அப்பா! நான் ஒண்ணும் மாட்டேம்ப்பா."

"அட, தடியா! எடுத்துண்டு வரயா, உதைக்கட்டுமா?"

இப்பொழுது அம்மாள் குறுக்கிடுவாள்.

"எதற்காகக் காலங் காத்தாலே எழுந்ததும் எழாததுமாகக் குழந்தையைப் பார்த்துச் சிடு சிடு என்கிறேள்? அன்பாய், பிரியமாய்க் கூப்பிடக் கூடாதோ?"

"அப்படியே கூப்பிடுகிறேனடி, அம்மா......அம்பிப்பயலே! பாடம் சொல்லிக்க வாடாப்பா! என் கண்ணோல்யோ, மூக்கோல்யோ, காதோல்யோ!"

"போப்பா, நான் மாட்டேன்."

"போய், வாசியேண்டா, கண்ணு" என்று அம்மா உத்தரவு கொடுத்த பிறகுதான் அம்பிப்பயல் வாசிக்கப் போவான்.

இதற்குமேல் தான் அம்பிப் பயலுக்கு அண்ணுசாமி அய்யர் பாடம் சொல்லிக் கொடுக்கும் சுவாரஸ்யமான கட்டம் ஆரம்பிக்கும்.

"டேய், கணக்குப் போடு, பார்க்கலாம். நாலும் அஞ்சும் என்னடா?"

"மூணு, அப்பா!"

"மூணு! தடிக் கழுதை! அஞ்சுக்கு எத்தனை விரல்டா விடணும்?"

"இரண்டு."

"இரண்டா?" டப், டப், டப்.

இது அண்ணுசாமி அய்யர் அம்பிப்பயலுக்குக் கொடுக்கும் பூசைகள். அவ்வளவுதான். அம்பிப்பயல் முகாரி ராகத்தில் ஆலாபனம் பண்ண ஆரம்பித்து விடுவான்; தொண்டையின் முழுப் பலத்தையும் பிரயோகிக்காமல் விடமாட்டான்.

"எதற்காகக் குழந்தையைப் போட்டுக் கொல்றேள்? நன்னு இருக்கு, நீங்க பாடம் சொல்லிக் கொடுக்கிற லட்சணம்! நீங்க அடிச்சு அடிச்சுத்தான் அவன் துரும்பாய்ப் போய் விட்டான்" என்று அம்மாள் குறுக்கிடுவாள்.

"ஆமாண்டி அம்மா, நான் அடிச்சு அடிச்சுத்தான் அவன் துரும்பாய்ப் போய்விட்டான். நீ அடிக்காதே சொல்லித் தறதுதானே ?"

"இந்தாங்கோ, நீங்க அவனே அடிக்கவும் வேண்டாம், பாடம் சொல்லித்தரவும் வேண்டாம். இங்கே வாடா, குழந்தே!"

"சரி, நன்னு மாடு மேய்க்கட்டுமே, எனக்கு என்ன வந்தது



ஊரிலே உன் தம்பி மேய்க்கிருனே, இல்லேயோ, அவனேடு சேர்ந்து இவனும் மேய்க்கட்டும்" என்று அய்யர் கோபத்தில் சொல்லி விடுவார்.

வந்தது அனர்த்தம்! இதுதான் சமயமென்று அம்பிப்பயல் கோலி விளேயாடப் போய் விடுவான். இங்கே அப்பாவுக்கும் அம்மாவுக்கும் ராம–ராவண யுத்தம் ஆரம்பித்துவிடும்.

அவர் முதலில் கல்யாணமே வேண்டாமென்று ஒற்றைக் காலில் நின்றதைப் பற்றியும், "உன் கல்யாணத்தைப் பார்த்து விட்டுத்தான் சாவேன்" என்று அவருக்குக் கல்யாணத்தைப் பண்ணி வைத்துவிட்டு, இன்னும் சாகாமல் இருக்கும் தாத்தாவைப்

பற்றியும், அண்ணுசாமி அய்யருக்கு ஞாபகம் வரும். தனக்கு முதலில் மிகவும் பணக்கார இடத்தில் கல்யாணம் நிச்சயமானதும், உறவு விட்டுப் போகக்கூடாது என்று அவள் பாட்டி இந்த இடத்தில் நிச்சயம் பண்ணினதும் அம்மாளுக்கு ஞாபகம் வரும்.

மாமனும் மாமியாரும் தமக்கு இழைத்துவிட்ட அவமானங்களைப் பற்றி ஒரு ராமாயணம் ஒப்பிப்பார் அய்யர். அவளுக்கு அவளது மாமியாரும் மாமனும் செய்த கொடுமைகளை யெல்லாம் ஒரு பாரதம் ஒப்பிப்பாள் அம்மாள். மனைவியின் ரூபலாவண்யங்களைப் பற்றி நீண்டதொரு பிரசங்கம் செய்வார் அய்யர்; புருஷன் சம்பாத்தியத்தைப் பற்றிப் பெரியதோர் உபன்யாசம் செய்வாள் அம்மாள். இப்படியாகத்தானே சண்டை வளர்ந்து கொண்டே வந்து, கடைசியில் அய்யர் கோபித்துக் கொண்டு, பட்டினியாக ஆபீசுக்குப் புறப்படுவதில் வந்து நிற்கும்.

இன்றைக்கும் அப்படித்தான் வந்து நின்று விட்டது; அய்யரும் என் எதிரே வந்து நின்றார். அவரைப் பார்ப்பதற்கு மிகவும் பரிதாபமாக இருந்தது. ஆகவே இது விஷயத்தில் அவர் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பதைப்பற்றி எனக்குத் தெரிந்ததை எடுத்துக் கூறினேன். அதை நீங்களும் தெரிந்து கொள்ளுங்கள்.

பையன்களுக்குப் பாடம் சொல்லிக் கொடுப்பது மிகவும் தொல்லையான சமாசாரம். இது எத்தனையோ குடும்பங்களில் புருஷன்-மனைவி ஒற்றுமையைக் குலைத்திருப்பதைப் பார்த்திருக்கிறோம். இதற்குக் காரணம் இந்தக் கலையை ஜனங்கள் சரியாக அப்யசிக்கத் தெரிந்து கொள்ளாததுதான்.

அண்ணுசாமி அய்யர் விஷயத்தையே எடுத்துக் கொள்வோம். சண்டை ஏன் ஆரம்பித்தது? அம்மாள் குறுக்கிட்டதால். அம்மாள் ஏன் குறுக்கிட்டாள்? பையன் அழுததால். பையன் ஏன் அழுதான்? அய்யர் அடித்ததால். அய்யர் ஏன் அடித்தார்? பையனுக்குக் கணக்குத் தெரியாததால். சரி, பையனுக்குக் கணக்குத் தெரியவில்லை என்னும் விஷயத்தை அடிப் படையாக வைத்துக்கொண்டு கொஞ்சம் ஆராய்ச்சி செய்து பார்ப்போம்.

[" பையனுக்குக் கணக்குத் தெரிந்திருந்தால் " என்பது வேறு விஷயம். அப்படி யிருந்தால் அவனுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்க வேண்டிய அவசியமே நேர்ந்திராதே.]

பையனுக்குக் கணக்குத் தெரியவில்லையென்றால் அண்ணாசாமி அய்யர் செய்யக் கூடிய காரியம் பையனை அடிப்பதுதானா? அதைத் தவிர வேறு ஒன்றும் கிடையாதா? இதுதான் கேள்வி.

அண்ணாசாமி அய்யர் இன்னும் எத்தனையோ விதமாக நடந்து கொண்டிருக்கலாம்.

1. இப்பேர்ப்பட்ட மக்குப் பிள்ளையைப் பெற்றதற்காகத் தம்மை நொந்து கொண்டிருக்கலாம்; அல்லது, தம் தலையில் நான்கு அடி போட்டுக் கொண்டிருக்கலாம்.

2. இப்படித் தம்மைச் சம்சார வாழ்க்கையில் புகுத்தியதற்காகப் பகவானை நிந்தித்திருக்கலாம்.

3. அல்லது பள்ளிக்கூட வாத்தியார்களை மனதார வைதிருக்கலாம்.

4. பையனுக்குப் பாடமே சொல்லிக் கொடுக்காதிருந்திருக்கலாம்.

அவ்வளவுதானா, வேறொன்றுமில்லையா? 'வேறொன்றுமில்லை' என்றுதான் நீங்கள் பதில் சொல்வீர்கள். ஆனால் என்னைக் கேட்டால் இன்னும் ஒரு வழி இருக்கிறது. அதுதான் மிகவும் சரியான வழி. அதுதான் இந்தப் பாடம் சொல்லிக் கொடுக்கும் விஷயத்தையே கலை ஸ்தானத்துக்கு உயர்த்துவது. அது என்ன?

அதுதான் பையன் முதுகில் நான்கு போடுவது. அடி அல்ல; ஷொட்டு!

ஐந்தும் நான்கும் இருபது என்று அவன் கணக்குப் போட்டாலும் சரி; அல்லது, சென்னைப் பட்டணம் ஜெர்மன் தேசத்திலிருக்கிறது என்று அவன் தன்னுடைய பூகோள சாஸ்திர ஞானத்தை வெளிப் படுத்தினாலும் சரி; அல்லது 'ஆர். ஏ. டி, (Cat) பாய்' என்று அவன் புதிதாக இங்கிலீஷ் கண்டு பிடித்துச் சொன்னாலும் சரி, உடனே எண்ணி நாலு ஷொட்டு அவன் முதுகில் கொடுத்து விட வேண்டியது. அத்துடன் "பேஷ்! பலே பேஷ்! சொம்ப சரி, ரைட்! ரைட்!" என்று சொல்ல வேண்டியது.

இதைக் கொஞ்சம் உச்ச ஸ்தாயியிலேயே சொல்ல வேண்டும். சமையல் அறையில் இருக்கும் உம் மனைவியின் காதில் விழ வேண்டியது அவசியம்.

நீங்கள் பாடம் சொல்லிக் கொடுக்கும் லட்சணமோ, அல்லது பையன் பாடம் படிக்கும் அவலட்சணமோ, தங்கள் மனைவியின் கவனத்தைக் கவர்வதில்லை. ஆனால் நீங்கள் பையனைக் கண்டிப் பதோ, அல்லது மெச்சுவதோதான் அவளுக்குத் தெரியப் போகிறது. கண்டித்தால் நீங்கள் பட்டினியாக ஆபீசுக்குப் போகும்படி நேரிடுகிறது. மெச்சினால் உங்கள் சாமர்த்தியத்தையும் மனைவி மெச்ச ஆரம்பித்து விடுகிறாள்.

ஆகவே நீங்கள் பையனுக்குப் பாடமும் சொல்லிக் கொடுக்க வேண்டாம், கீடமும் சொல்லிக் கொடுக்க வேண்டாம்; பேசாமல் அவனை எதிரே உட்கார வைத்து, இரண்டு நிமிஷத்துக் கொரு தடவை அவன் முதுகில் நான்கு ஷொட்டு போடுங்கள். அத்துடன் "பேஷ்! பலே பேஷ்! ரொம்ப சரி, ரைட், ரைட்" என்று உச்ச ஸ்தாயியில் சொல்லுங்கள். இதற்கு மேல் உங்களுக்கும் உங்கள் மனைவிக்கும் சண்டை வந்தால், என்னைக் கேளுங்கோன்னு!

இப்படி நடந்தால் பையனுக்குப் படிப்பு வராதே என்று கேட்கலாம். ஆமாம், யார் இல்லை யென்று சொன்னது? முன் சொன்ன வழியில் மாத்திரம் பையனுக்குப் படிப்பு வந்ததோ? பையனுக்குப் படிப்பு வர வேண்டுமென்றால், எத்தனையோ பேர் 'டியூஷன்' சொல்லிக் கொடுக்கக் காத்துக் கொண்டிருக்கிறார்களே, அவர்களை வைத்துவிட்டுப் போங்களேன்! உங்களை யார் சொல்லிக் கொடுக்கச் சொன்னது?



# உத்தியோகம் புருஷ லட்சணம்

"உத்தியோகம் புருஷ லட்சணம்" என்று முதல் முதலில் சொன்னது ஒரு ஸ்திரீயாகத்தான் இருக்க வேண்டும் என்று தோன்றுகிறது. அந்த ஸ்திரீயும் புருஷ வர்க்கத்தின் மீது மிகவும் வெறுப்புக் கொண்டவளாகவும் இருக்க வேண்டும். "இப்படிச் சொல்லி வைத்தால் எல்லாரும் தொழில், விவசாயம் முதலிய தொன்று தொட்ட துறைகளை விட்டு விட்டு, உத்தியோகத்துக்காக உழல்வார்கள், பிறகு போட்டி அதிகரிக்கும், கடைசியில் உத்தியோகத்துக்காக அலைந்து காலை ஒடித்துக் கொள்வார்கள்" என்பது தான் அந்த அம்மாளின் நோக்கமாய் இருந்திருக்க வேண்டும்.

அது மாதிரியே இன்று 'உத்தியோகம், உத்தியோகம்' என்று எல்லாரும் உத்தியோகத்தை நாடிப் போக, வேலை யில்லாத் திண்டாட்டம் மிகவும் அதிகரித்து விட்டது.

"ஒரு உத்தியோகம் சம்பாதித்துக் கொள்ளக் கூடத் துப்பில்லை!" என்று ஸ்திரீகள் புருஷர்களைப் பார்த்து நகைக்கலாச்சு!

உத்தியோகம் இல்லாமல் உயிரை விட்டாலும் விடலாம், ஆனால் ஸ்திரீகள் புருஷர்களாகிய நம்மைப் பார்த்துச் சிரிக்க விடக் கூடாதல்லவா? அதற்காக "உத்தியோக வேட்டை ஆடுவது எப்படி?" என்னும் ரகசியத்தை வெளியிடத் தீர்மானித்து விட்டேன்.

எங்கேயாவது உத்தியோகம் காலியாய் இருக்கிறது என்றால் தற்கால வேலையில்லாப் பட்டதாரி என்ன பண்ணுகிறார்?

உடனே பெட்டியில் பத்திரமாய்ப் பூட்டி வைத்திருக்கும் சூட்டையும் கோட்டையும் எடுத்து மாட்டிக் கொள்கிறார். (கல்யாணத்தின் போது மாமனார் மாப்பிள்ளை அழைப்பதற்காக வாங்கிக் கொடுத்த சூட்டும் கோட்டும் இந்தச் சமயம் உபயோகப்படப் போகிறதில்லை யென்றால் பின் எப்பொழுதுதான் உபயோகப் படப் போகிறது?)

பூட்ஸ் போட்டு வழக்கம் அதிகம் இல்லையாதலால் சனியன் பிடித்த பூட்ஸ், இவர் வீட்டு வாசற்படியைத் தாண்டுவதற்குள் நறுக்கென்று கடித்துவிடுகிறது. பூட்ஸ் வலி ஒரு பக்கம்; அது வெளியே தெரிந்து, "வழக்கமாக சூட்டு போடாதவன்" என்று தன்னைப் பற்றிப் பிறர் நினைத்துக்கொள்ளப் போகிறார்களே என்ற பயம் இன்னொரு பக்கம். இப்படியாக நொண்டவும் முடியாமல், நடக்கவும் முடியாமல் தள்ளாடித் தள்ளாடி நடக்கிறார்.

நடந்தால் நடந்து விட்டுப் போகிறார். அதைப்பற்றி நான் ஒன்றும் குற்றம் சொல்லவில்லை. ஆனால் இவ்வளவு தூரம் பி. ஏ. வரையிலும் படித்தவருக்கு எங்கே போகவேண்டும் என்று தெரிய வேண்டாமோ? யாராவது உத்தியோகம் வேண்டுமென்றால் நேரே, உத்தியோகம் கொடுக்கும் அதிகாரியிடமே போய், "உத்தியோகம் கொடுங்கள்" என்று கேட்பார்கள்?

நம்முடைய தற்கால வாலிபர்கள் இப்படிப்பட்ட ஒரு தப்புப் பண்ணுவதால்தான் உத்தியோகம் கிடைக்காமல் திண்டாடுகிறார்கள் என்று நினைக்கிறேன். என்னை ஒரு வார்த்தை கேட்டால்தானே? உங்களுக்குத் தெரியாவிட்டால் என்னைக் கேளுங்கோன்ன!

பாக்கி எல்லாக் காரியங்களுக்கும் படிகள் இருப்பதுபோல் இதற்கும் படிகள் இருக்கின்றன. முப்பது ரூபாய் சம்பள வேலைக்கு நேரே மூவாயிரம் ரூபாய் சம்பளம் வாங்கும் அதிகாரியைப் போய்ப் பார்க்கக் கூடாது. மூவாயிரம் ரூபாய்ச் சம்பள உத்தியோகஸ்தருக்கு வேண்டிய ஆயிரம் ரூபாய் சம்பள அதிகாரி யார் என்று தெரிந்து கொள்ளவேண்டும். பிறகு ஆயிரம் ரூபாய் சம்பள அதிகாரிக்கு வேண்டிய ஐநூறு ரூபாய் சம்பள அதிகாரியைத் தெரிந்து கொள்ள வேண்டும். பிறகு இதே மாதிரி ஐந்நூறு ரூபாய் சம்பள அதிகாரிக்கு வேண்டிய முந்நூறு ரூபாய் சம்பள மானேஜர், முந்நூறு ரூபாய் சம்பள மானேஜருக்கு வேண்டிய இருநூறு ரூபாய் சம்பள உதவி மானேஜர், இருநூறு ரூபாய் சம்பள உதவி மானேஜருக்கு வேண்டிய நூறு ரூபாய் சம்பள ஹெட்கிளார்க், பிறகு இவருக்கு மிகவும் ஆப்தமான எண்பது ரூபாய் கிளார்க், பிறகு இவருக்கு மிகவும் தெரிந்த ஐம்பது ரூபாய் குட்டி கிளார்க் யார் என்று தெரிந்து கொள்ள வேண்டும். இப்படி படிப் படியாகக் கீழே இறங்கி வந்து விட்டீர்களோ, பாதிக் காரியம் ஆனமாதிரிதான்.

இனிமேல் தங்கள் முழு சாமர்த்தியமும் இந்த ஐம்பது ரூபாய் குமாஸ்தாவைத் தங்கள் வலையில் சிக்க வைப்பதில்தான் இருக்கிறது.

வலை வீசுவதற்கு மிகவும் சரியான இடம் காப்பி ஹோட்டல் தான் என்பதில் சந்தேகமில்லை. நான்கு நாளைக்கு அந்த ஐம்பது ரூபாய் சம்பளக் குமாஸ்தா சாப்பிடும் மேஜையிலேயே நீங்களும் போய் உட்கார்ந்து அவர் 'பில்'லையும் நீங்களே கொடுக்க முன் வந்தால் அவர் தன்னைப் போல் சிநேகிதராகி விடுகிறார்!

இதற்குப் பிறகுதான் இருக்கிறது அவரை அவர் 'வீட்டு அண்டை' பார்ப்பது. "இந்தப் பக்கம் வந்தேன். இப்படியே பார்த்து விட்டுப் போகலாம்னு வந்தேன்," "அந்தப் பக்கம் வந் தேன். அப்படியே பார்த்து விட்டுப் போகலாம்னு வந்தேன்" என்று அந்தப் பக்கத்தின் மீதும் இந்தப் பக்கத்தின் மீதும் பழியைப் போட்டு, அடிக்கடி அவரைப் போய் பார்க்க வேண்டி யது. அப்படி பார்க்கும்போதெல்லாம் மார்க்கெட்டில் வாங்கின கறிகாய்களைக் கொண்டு போய்க் கொடுத்து, "எங்கள் வீட்டுக் கொல்லையில் முளைத்தது; உங்களுக்கு ரொம்பவும் பிடிக்குமே என்று கொண்டு வந்தேன்" என்று சொல்லிக் கொடுக்க வேண்டியது.

என்னுடைய அனுபவத்தில் இந்த கறிகாய்க்கு இருக்கும் மோகன சக்தி வேறு எதற்கும் இல்லை யென்று கூறுவேன். இத னால் குமாஸ்தா மனைவிக்குக் கறிகாய்த் தொல்லை நீங்குகிறது. இத னால் அவளுக்கு நம்மீது அனுதாபம் உண்டாக, நம்மைப்பற்றி அந்த அம்மாளே புருஷனிடம் சிபார்சு செய்ய ஆரம்பித்து விடுகிறாள்.

இப்படிக் கொஞ்ச நாள் சென்ற பிறகு தான் நீங்கள் விஷ யத்தை எடுத்துச் சொல்ல வேண்டியது. அதுவும் போனதும் போகாததுமாகச் சொன்னீர்களோ, பிரயோசனமில்லை. ஒரு நல்ல ஞாயிற்றுக்கிழமை, அவர் ஒழிவாயிருக்கும் சமயம் பார்த்துப் போக வேண்டியது. அவர் வீட்டு எருமைக் கன்றுக்குட்டியின் சௌக் கியத்தைப் பற்றி ஆரம்பித்து (அவர் வீட்டில் எருமைக் கன்றுக் குட்டி இல்லாவிட்டால், அவருடைய மைத்துனன் மைத்துனிகளைப் பற்றி விசாரித்தால் போச்சு!) காங்கிரஸ் மந்திரிகள் வரையில்

உள்ள எல்லா விஷயங்களைப் பற்றிப் பேச வேண்டியது. அதிலும் அவரையே கொஞ்சம் அதிகமாகப் பேசச் சொல்லி அவர் தொண்டைத்தண்ணீரை வற்ற அடித்து விட்டீர்களோ, நீங்கள் கெட்டிக்காரர்கள்தான். இனிமேல் நீங்கள் உத்தரவு வாங்கிக் கொண்டு புறப்படலாம்.

அப்படிப் புறப்படும்பொழுது ஞாபகமாய்ச் செருப்பை மறந்துவிட வேண்டும். பத்தடி சென்றதும் ஞாபகம் வந்ததுபோல் திரும்ப வேண்டும். இதுதான் நீங்கள் வந்த காரியத்தைத் தெரிவிப்பதற்குச் சரியான வேளை.

"ஒரு காரியம்ணு. அதற்காகத்தான் வந்தேன், மறந்தே போய் விட்டேன்" என்ற பீடிகையுடன் ஆரம்பித்து, "நீங்கள் மட்டும் மனசு வைத்தால் ஊரில் இருக்கிற எல்லாருக்குமே உத்தியோகம் பண்ணி வைத்துவிடலாம்" என்று எடுத்துச் சொல்லவேண்டும். இந்தச் சமயத்தில் அவர் 'சரி' என்று கட்டாயம் தலை ஆட்டுவார் என்பதில் சந்தேகமில்லை. பேச முடியாமல் தான் தொண்டை வறண்டு போய்விட்டது! அவர் தலை ஆட்டாமல் வேறு என்ன செய்வார்!

இனிமேல் தாங்கள் செய்ய வேண்டிய காரியம் ஒன்றும் இல்லை. இந்த ஐம்பது ரூபாய் குட்டிக் குமாஸ்தா தங்களைப்பற்றி எண்பது ரூபாய்க் குமாஸ்தாவிடம் சிபார்சு செய்வார், எண்பது ரூபாய் குமாஸ்தா நூறு ரூபாய் ஹெட் கிளார்க்கிடம் சிபார்சு செய்வார். நூறு ரூபாய் ஹெட்கிளார்க் இருநூறு ரூபாய் உதவி மானேஜரிடம் சொல்வார். இப்படியாக அது படிப்படியாக மேலே போய், கடைசியில் மூவாயிரம் ரூபாய்த் தலைமை உத்தியோகஸ்தர் காதில் போய் விழும். உங்களுக்கும் வேலை கிடைக்கும்.

அப்படிக் கிடைக்காவிட்டால் அது தங்கள் பிசகில்லை. நடுவில் யாரோ ஒருவருக்குத் தமக்கு மேலுள்ள அதிகாரியிடம் சரியான படி எடுத்துச் சொல்வதற்குச் சாமர்த்தியமோ தைரியமோ இல்லையென்றுதான் அர்த்தம்! அதற்கு மட்டும் என்னைக் கேட்க வேண்டாம்!



# பரீட்சையா? பயப்படாதீர்கள்!

உங்களைத்தான் ஸார்! யார் யாரையோ கேட்டுக் கொண்டு நிற்கிறேனே, நம்மை ஒரு வார்த்தை கேட்டால் சொல்லுகிறேன். என்னைக் கேளுங்கோன்னு!

உங்களுக்கு என்ன வேண்டும்? ஏன் அப்படிக் கையைப் பிசைகிறீர்கள்? பரீட்சைக்கு இன்னும் பத்து நாள்கூட இல்லையே, என்ன பண்ணுவது என்று யோசனை பண்ணுகிறீர்களோ? பயப்படாதீர்கள்! நான் இருக்கிறேன், உங்களுக்குச் சொல்லிக் கொடுக்க.

நீங்கள் போவது என்ன பரீட்சை? பி. ஏயா, இண்டர்மீடியட்டா? அது எதுவா யிருந்தால் என்ன? காலேஜ் பரீட்சை தானே? அது போதும். போனால் காலேஜ் பரீட்சைகளுக்குத் தான் போகணும்! வேறு எதில் நம் சௌக்கியத்தை உத்தேசித்துப் பாகம் பாகமாகப் போகலாம் என்று வைத்திருக்கிறார்கள்? ஆகவே இந்தத் தடவை ஒரே ஒரு பாகத்துக்கு மாத்திரம் போவது என்று தீர்மானித்துக் கொள்ளுங்கள்....என்ன? இப்படித்தான் நான்கு வருஷங்களாகச் செய்து கொண்டு வருகிறீர்களா? ரொம்ப நல்லதாய்ப் போச்சு!

முதலில் கொஞ்சம் சிரமத்தைப் பார்க்காமல் பாட புஸ்தகங்கள் எல்லாம் எங்கே இருக்கின்றன என்று கண்டு பிடியுங்கள். அதோ அந்தப் பீரோவுக்குப் பின்னாலேயும் சற்றுப் பாருங்கள். சரி...எல்லாப் புஸ்தகங்களும் கிடைக்கவில்லை போலிருக்கிறது. பரவா யில்லை. எல்லாப் புஸ்தகங்களும் கிடைத்தாலும் எங்கே ஒழிவு? இந்தப் புஸ்தகங்களை மட்டும் பார்த்தால் போதாதா?

ஆமாம், இதே பாடத்தில் வருஷா வருஷம் கேள்விகள் கேட்டுக் கொண்டு வருகிறார்களே, அந்தக் கேள்விப் பேப்பர்களைப் பார்த்து எழுதி வைத்துக் கொண்டிருக்கிறீர்களா?...ஓஹோ! புஸ்தகசாலைக்குப் போக ஒழியவில்லையா? பரவா யில்லை. நீங்கள் நான்கு வருஷங்களாகப் போய்க் கொண்டிருக்கிறீர்களே, அந்தக்

கேள்விப் பேப்பர்களையாவது வைத்துக் கொண்டிருக்கிறீர்களா? அதுவும் இல்லையா? ஒவ்வொரு தடவையும் "நாம்தான் தேறி விடப்போகிறோமே" என்ற நம்பிக்கையினால் வைத்துக் கொள்ள வில்லையா? அதுதான் சரி. மனுஷனுக்குத் தன்னைப் பற்றி இத்தனை நம்பிக்கைகூட வேண்டாமா?

சரி, இவனுக்கு என்று யாரோ உத்தியோகம் வைத்துக் கொண்டிருக்கிற மாதிரி, விழுந்து விழுந்து வாசித்துக் கொண்டிருக்கிறானே, அந்த சங்கரனைக் கேட்டுத்தான் வாங்கிக் கொண்டு வாருங்கள்.

ஒரு ஐந்து வருஷக் கேள்விகளை வாசித்துப் பார்த்து அந்தக் கேள்விகளுக்குரிய பாடங்களை விட்டு விடுங்கள். புத்தியுள்ள எந்தப் பரீட்சை அதிகாரியும் ஒரு தடவை கேட்ட கேள்வியை ஐந்து வருஷத்துக்காவது திருப்பிக் கேட்க மாட்டார். ஆகவே உங்கள் பரீட்சை அதிகாரிகள் புத்திசாலிகள் என்றே வைத்துக் கொண்டு பார்த்தால், தாங்கள் படிப்பதற்கு மிகவும் குறைந்த பாடங்கள் தான் மிஞ்சும். அப்படிக் கேட்ட கேள்வியே திரும்பி வந்து நீங்கள் 'பெயில்' ஆனாலும் பரவாயில்லை. இதன் மூலமாகப் பரீட்சை அதிகாரியின் புத்திசாலித்தனமாவது வெளிப்படுமா, இல்லையா?

இப்படி மிஞ்சின கொஞ்ச நஞ்ச பாடத்தையும் படிப்பதற்குத் தடையாக இந்தப் பாழும் தூக்கம் வந்து சேருகிறது. நீங்கள் எவ்வளவு டீ குடித்துப் பார்த்தாலும்—அதைச் சில சமயம் சர்க்கரை இல்லாமலும், சில சமயம் பால் இல்லாமலும், இன்னும் பல சமயம் தேயிலை இல்லாமலும் போட்டுக் குடித்தாலும் சரி—இந்தத் தூக்கம் விடேன், தொடேன் என்று வந்துதான் தொலைகிறது. இத் தூக்கத்தை விரட்டுவதற்கு ஒரு வழி கண்டு பிடித்துத்தானாக வேண்டும்.

தூக்கம் ஏன் வருகிறது? இதைச் சற்று விஞ்ஞான திருஷ்டியுடனே ஆராய்ந்து பார்ப்போம். சாதாரணமாக நமக்குப் பகலில் தூக்கம் வருவதில்லை; இரவில்தான் வருகிறது. இதை அடிப்படையாக வைத்துக் கொண்டு ஆராய்ச்சி செய்தால் பகலில் தூக்கம் வராததற்குக் காரணம் இரவில் தூங்கி விடுவதுதான் என்று தெரிகிறது. ஆகவே இரவில் தூங்காமல் இருக்க வேண்டுமானால் பகலில் தூங்கி விடவேண்டும்.

அப்படியும் தூக்கம் வந்துவிட்டால்? நம்முடைய பெரிய வர்களைப் பின்பற்ற வேண்டியதுதான். அவர்கள் இரவில் தூங் காமல் இருப்பதற்குக் காரணம் அவர்கள் கொண்டிருக்கும் கவலைகள்தான். பெண்ணுக்கு வரன் தேடணுமே என்ற கவலை; பிள்ளையாண்டான் (சாட்சாத் தாங்கள்தான்) திரும்பத் திரும்ப பி. ஏ. பரீட்சைக்குப் போய்க்கொண்டிருக்கிறனே என்று கவலை; செலவுக்கும் வரவுக்கும் சரிக்கட்டமாட்டேன் என்கிறதே என்று கவலை.

ஆகவே, நீங்கள் தூக்கம் இல்லாமல் விழித்துக் கொண்டிருப் பதற்கு முதலில் கற்பனு சக்தி மிகவும் அவசியம். பிறகு அதை உபயோகித்து உங்களுக்குக் கல்யாணத்துக்கு நிற்கும் ஒரு பெண் இருப்பது போலவும், பி. ஏ. பரீட்சைக் கோட்டையை முற்றுகை போட்டுக் கொண்டிருக்கும் ஒரு பையன் இருப்பது போலவும், வரவுக்கு மிஞ்சின செலவாய் இருப்பது போலவும் நினைத்துக் கவலைப்பட வேண்டும்.

ஆனால் நீங்கள் கற்பனு சக்தியை யெல்லாம் இது விஷயத்தில் செலவிடத் தயாராயில்லாவிட்டால் வேறுவழி சொல்லுகிறேன்.

சித்திரமும் கைப்பழக்கம், செந்தமிழும் நாப்பழக்கம் அல் லவா? அதைப் போலவே கண் விழிப்பதையும் பழக்கத்துக்குக் கொண்டுவந்து விடலாம். அடிக்கடி கண் விழிக்கப் பழகிக் கொள்வதற்கு சினிமாவையும், டிராமாவையும் தவிர நல்ல சாதனம் வேறு எங்கே கிடைக்கப் போகின்றது? ஆனல் இவை பன்னிரண்டு மணி, ஒரு மணிக்குள் முடிந்து விடுவதால் அதற்குமேல் விழித்துக் கொண்டிருக்க அந்தச் சீட்டாட்டத்தின் தயவைத்தான் நாட வேண்டும்.

ஆனல் ஆழ்ந்து யோசித்துப் பார்க்கும் போது இதுவும் பயன் படாது என்றுதான் தோன்றுகிறது. டிராமா, சினிமா, சீட்டாட்டம் முதலிய வற்றுல் டிராமா பார்ப்பதற்கும், சினிமாவுக்குப் போவ தற்கும், சீட்டாட்டம் ஆடுவதற்கும்தான் பழக்கம் உண்டாகிறதே யொழிய, கண் விழிக்கும் பழக்கம் ஏற்படுகிறதில்லை. அப்படி முடிந்தாலும், இந்தக் காரியங்களுக்கு மாத்திரம் தான் விழித்துக் கொண்டிருக்க முடிகிறதே யொழிய, பாக்கிக் காரியங் களுக்கு முடிகிறதில்லை.

"பின் என்னதான் பண்ணுகிறது?"

அதைரியப்படாதீர்கள். ஒரு நல்ல வழி இருக்கிறது. ஆனல் இந்தக் காலத்து மாணக்கர்களுக்கு அது உபயோகப் படாதே

என்றுதான் அதைச் சொல்லவில்லை. முன் காலத்து மாணவர்களா யிருந்தால்.....,

"முன் காலத்து மாணவர்கள் என்றால் என்ன ஒஸ்தி, ஸார்?"

சொல்லுவதற்குள் அவசரப் படுகிறீர்களே, முன் காலத்து மாணவர்களாயிருந்தால்......

"முன் காலத்து மாணவர்களாயிருந்தால்......"

பொறுங்கள்! அவசரம் வேண்டாம்! சொல்லுகிறேன். முன் காலத்து மாணவர்களாயிருந்தால் குடுமி வைத்திருப்பார்கள். ஒரு கயிற்றைக் கொண்டு குடுமியை உத்தரத்துக்குக் கட்டி விட்டால்... ஆனால் இதை யெல்லாம் உங்களுக்குச் சொல்லி என்ன பிரயோசனம்! நீங்கள்தான் கிருப்புத் தலையர்களாச்சே!

இதோ பரீட்சைப் பேப்பர் 'ஆன்ஸர்' பண்ண வேண்டிய விதத்தையும் சொல்லி விடுகிறேன், அதற்குள் தூங்கி விழாதீர்கள்.

பரீட்சைப் பேப்பர் 'ஆன்ஸர்' பண்ணுவதில் ஒரு பெரிய ரகசியம் இருக்கிறது. அதாவது, தெரிந்த கேள்விகள், தெரியாத கேள்விகள், என்று அதை இரண்டு பாகமாகப் பிரித்துக்கொள்ள வேண்டியது. தெரிந்த கேள்விகள் ஒன்றிரண்டுகூட இல்லாமலா போய்விடும்? அவற்றுக்கு உங்களுக்குத் தெரிந்த பதிலைக் கொட்டை கொட்டை எழுத்தில் தெளிவாக எழுத வேண்டும். இந்தப் பதிலைத் திருப்பித் திருப்பிப் பரீட்சைப் பேப்பரில் நாலைந்து இடங்களிலாவது மிகவும் நாசூக்காக எழுதி வைக்க வேண்டும். உங்கள் அதிர்ஷ்டம், பேப்பர் திருத்துகிறவர் அவற்றுக்குத் திருப்பித் திருப்பி மார்க் போட்டு விட்டால் ரொம்ப நல்லதாய்ப் போச்சு; இல்லை, அதனால் ஒன்று குடி முழுகிவிடப் போகிறதில்லை.

தெரியாத கேள்விகளுக்கும் பதில் எழுதுவதற்கு ஒரு வழி இருக்கிறது. யாருக்கும் புரியாத கையெழுத்தில் பக்கம் பக்கமாய் வரைந்து தள்ளுங்கள். பரீட்சைப் பேப்பர் திருத்துகிறவர் அதை வைத்துக் கொண்டு முட்டிக் கொள்வார். பிறகு அதனால் உண்டாகும் மூளைக் குழப்பத்தில் கட்டாயம் பாஸ் மார்க்காவது கொடுத்து விடுவார் என்பதில் தடையில்லை.

இத்தனை செய்தும் அந்தப் பரீட்சை அதிகாரிகளுக்கு உங்களிடம் மறைந்திருக்கும் கெட்டிக்காரத்தனத்தைக் கண்டு பிடிக்க முடியவில்லையானால் அடுத்த செப்டம்பர் பரீட்சை இருக்கவே இருக்கிறது. அப்பொழுது என்னைக் கேளுங்கோன்னு! அதற்குள் வேறு ஏதாவது வழி யோசனை பண்ணி வைக்கிறேன்.

# "டிக்கட் பிளீஸ்!"

பக்கத்தில் இருந்த ஒரு சினிமாக் கொட்டகைக்கு அன்றொரு நாள் போக வேண்டியிருந்தது. நடந்து போனால் ஐந்து நிமிஷத்தில் போயிருக்கலாம். படம் ஆரம்பிப்பதற்கு அரை மணி நேரம் இருந்ததால் முன்னாலேயே போய் அங்கே காத்துக் கொண்டிருக்க இஷ்டப்படாமல் டிராமில் ஏறினேன்.

முன்னாலேயே ஒரு வார்த்தை சொல்லி விடுகிறேன். நான் இது வரையில் அதிகமாக டிராமில் போனது கிடையாது. எங்கேயாவது வேணுமென்றே நாழி கழித்துப் போக வேண்டியிருந்தாலொழிய நடந்தே போய் விடுவேன்.

ஆகவே அன்று டிராம் ஏறினதும் நான் கண்ட காட்சி என்னைத் திக்பிரமை யடையச் செய்து விட்டது. டிக்கட் பரிசோதகருக்கும் ஒரு நாசூக்குப் பேர்வழிக்கும் ஒரு பெரிய வாய்ச் சண்டை நடந்து கொண்டிருந்தது. கழுதையின் காதில் கட்டெறும்பை விட்டால் என்ன சத்தம் வருமோ, அதையும் தோற்கடிக்கக்கூடிய குரலில், "போய்யா! முடியாதுன்னா, முடியாதுதான். உன்னால் ஆனதைப் பண்ணிக்கோய்யா!" என்று மிகவும் அலுப்பாகவும் கோபமாகவும் சொல்லிக் கொண்டிருந்தார் அந்தப் பேர்வழி.

எனக்கு விஷயம் இன்னதென்று விளங்கவில்லை. அதனால் அவர் பக்கம் பார்த்தேன்.

பார்த்ததுதான் தாமதம், மடை திறந்தது போல் தோன்றிற்று. அவரிடமிருந்து ஒரு பேச்சு வெள்ளம் வெளிப்பட்டது. அதில் நான் மூழ்கி திக்குத் திசை தெரியாமல் திக்கு முக்காடித் திணறிப் போனேன். கடைசியில் ஒருவாறு சமாளித்துக் கொண்டு தலையை நீட்டிப் பார்த்தேன். விஷயம் கொஞ்சம் புரிந்தது. அந்த நாசூக்குக்காரரின் கோபத்துக்குக் காரணம், இந்த டிக்கட் பரிசோதகர்கள் அடிக்கடி, "டிக்கட்டைக் காண்பி, டிக்கட்டைக் காண்பி" என்று தொந்திரவு படுத்தியது தானாம்!

இந்த டிக்கட் பரிசோதகர்கள் நம்மை இம்மாதிரி நச்சரிக்கிறார்கள் என்பதில் சந்தேகமில்லை. ஆனால் இதில் என்ன தப்பு இருக்கிறது என்று எனக்கு இன்னும் தெரியவில்லை. இந்தப் பரந்த உலகில் ஒரு சின்ன விஷயத்தைக் கொண்டே பரமானந்தம் அடையத் தயாரா யிருப்பவர்கள் யாராவது உண்டா என்றால் அவர்கள் டிக்கட் பரிசோதகர்கள் தான் என்று திட்டமாகச் சொல்வேன்.

இந்த டிக்கட்டைக் கண்டதும் தான் இவர்களின் முகத்தில் எவ்வளவு ஆனந்தம் தென்படுகிறது என்கிறீர்கள்! ஒன்று இரண்டு பரிசோதகர்கள் தங்கள் சந்தோஷம் பிறருக்குத் தெரியக் கூடா தென்று தாடியும் மீசையும் வளர்த்துக் கொண்டிருக்கிறார்கள். இருந்தாலும் அவர்கள் கண்களைக் கொண்டே அவர்கள் உள்ளத்தில் குமுறிக் கொண்டிருக்கும் ஆனந்தத்தை அறிந்து கொள்ளலாம். காசு, பணம் செலவில்லாமல் கிடைக்கும் இச் சந்தோஷத்தை இவர்கள் முழுக்க முழுக்க அனுபவிக்கத் தீர்மானித்திருக்கிறார்கள் என்பதில் சந்தேகமில்லை. அதற்காகத் தான் அப்படி நிமிஷத்துக்கொரு பரிசோதகர் நம் முன் வந்து நின்று "டிக்கட் பிளீஸ்" என்று கை நீட்டுகிறார்.

டிராமில் அடிக்கடி பிரயாணம் செய்திருப்பவர்களுக்கு இது தெரியும். அதற்காகத்தான் அவர்கள் டிக்கட்டைக் கையில் பிடித்தபடி தான் இருக்கிறார்கள். சிலர் அதை மோதிரம்போல் கை விரலுக்குள் சொருகிக் கொண்டிருக்கிறார்கள். இன்னும் சிலர் தம்முடைய குடையின் நுனியிலோ, அல்லது கைத்தடியின் பிடியிலோ சொருகி வைக்கிறார்கள். ஆனால் இதெல்லாம் அந்தப் பரிசோதருக்குப் போதாது. டிக்கட்டை தம் கையில் வாங்கித் தடவிப் பார்த்தால் தான் அவருக்குத் திருப்தி.

அத்துடனாவது திருப்தி யடைவாரா? மாட்டார். அதைத் தம் கண்ணுக்கு அருகிலும், மூக்குக்கு அருகிலும் கொண்டு போனால் தான் திருப்தி.

சரி, அத்துடனாவது விட்டு விடுகிறாரா? ஊஹூம், கிடையாது. டிக்கட்டை நடுவில் கொஞ்சம் கிழிக்க வேண்டும். இந்த மாதிரி டிக்கட்டைக் கிழிக்கும்போது இந்தப் பரிசோதகரின் முகத்தைக் கவனித்திருக்கிறீரா? லட்சம் ரூபாய் கொடுத்தால்கூட அவருக்கு

அத்தனை சந்தோஷம் ஏற்படாது என்று சொல்ல வேண்டும். நாம் முக்கிய தஸ்தவேஜ் அல்லது ஆபீஸ் கட்டுகள் மேஜை மீது வைத்திருந்து, அதை நம் அம்பிப் பயல் கிழிக்கிறனே, அவன் சந்தோஷத்தைக்கூட இவர்கள் கொள்ளும் சந்தோஷத்தின் காலில்



கட்டித்தான் அடிக்க வேண்டும். அப்படித்தான் கிழிக்கிறரே ஒரே யடியாக இரண்டாகக் கிழித்து, "விட்டது சனி" என்று நம் கையில் கொடுத்து விடுவார் என்று நினைக்கிறீர்களோ? அதுவும் கிடையாது. ஒரு கடுகத்தனை கிழிப்பதுடன் திருப்தி யடைந்து விடுவார்.

இதைப் பார்த்த ஒன்றிரண்டு தடவைகளில் என்மனம் மிகவும் வருத்தப்பட்டிருக்கிறது. அப்பொழுது இந்த டிராம் கம்பெனி அதிகாரிகள் மீது நான் கொண்ட கோபத்திற்கு அளவில்லை. இந்தப் பரிசோதகர்களின் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொள்வதற்கென்றே கம்பெனியார் இவ்வளவு சின்ன டிக்கட் தயாரித்திருக்கிறர்கள். அவர்கள் மாத்திரம் டிராமா நோட்டீஸ் அத்தனை

பெரிதாகக் கொடுத்தால் எவ்வளவு சௌகரியமா யிருக்கும்? ஒவ்வொரு டிக்கட் பரிசோதகரும் தம் ஆசை தீரக் கிழிக்கலாம் அல்லவா? ஆகவே சீக்கிரம் இந்த யோசனையை அதிகாரிகள் ஏற்றுக் கொள்ளுவார்கள் என்று நம்புகிறேன்.

இந்த மாதிரி நிமிஷத்துக் கொருதடவை டிக்கட் காண்பிக்க வேண்டி யிருப்பதால் கொஞ்சம் சிரமம் ஏற்படுகிறது என்று ஒப்புக்கொள்கிறேன். ஆனல் அதனுல் ஏற்படும் அனுகூலங்கள் எத்தனை என்று யோசித்துப் பார்த்திருக்கிறீர்களா?

முதலாவதாக நம் கைக்கு நல்ல தேகப் பயிற்சி கிடைக்கிறது. இடது கையோ டிராம் வளையத்தைப் பிடித்துக்கொண்டு, உயர்த்தியபடியே இருக்கிறது. வலது கையை டிக்கட்டைக் காண்பிப்பதற்காக அடிக்கடி மடக்கவும் நிமிர்த்தவும் நேரிடுகின்றது. இன்னும் இட நெருக்கடியின் காரணமாக நிற்பதற்கும் போதுமான இடமின்றி ஒற்றைக்காலில் தபசு புரிகிருேம்.

என்னைக் கேட்டால், 'பஸ்சிமோத்தாஞசனம்,' 'அர்த்தமத்யேந்த்ராசனம்' என்று என்னென்னமோ சொல்லுகிருர்களே அவை யெல்லாவற்றையும் தூக்கி யடிக்கக்கூடிய ஆசனம் இது என்று கூறுவேன். இதற்கு "டிராம் - டிக்கட் ஆசனம்" என்று ஒரு தனிப் பெயர் கொடுத்தாலும் தகும்.

இன்னும் டிக்கட்டைப் 'பர்ஸில்' வைக்கிருேம், அல்லது குடையின் நுனியில் சொருகி வைக்கிருேம். அடிக்கடி பரிசோதகர் வருவதால் நாம் 'பர்ஸோ', குடையோ பத்திரமாக இருக்கிறதா என்று பார்த்துக்கொள்ள முடிகிறது.

ஆனல் இதெல்லாம் அந்த நாசூக்கு ஆசாமிக்குப் பிடிக்கவில்லை என்று தெரிகிறது. எல்லாராலுமே ஹாஸ்ய ரஸத்தை அனுபவிக்க முடியுமா, என்ன? ஆகவே இப்படி இருக்கும் ஒன்றிரண்டு அலாதிப் பிரகிருதிகளை உத்தேசித்து நான் ஒரு வழி சொல்லக்கூடும்.

அதாவது, டிக்கட்டைக் கையில் கொடுக்கக் கூடாது. அதற்குப் பதில் பிரயாணிகளின் நெற்றியில் ஒட்டிவிட வேண்டியது. டிக்கட்டைக் கிழிப்பதற்குச் சௌகரியம் வேண்டுமாதலால் டிக்கட்டை மேல் பக்கத்தில் ஒட்டிவிட்டு கீழ்ப்பக்கத்தைக் கிழிப்பதற்காக விட்டுவைக்க வேண்டியது.

இந்த முறையில் டிக்கட் பரிசோதகர் அந்தண்டை வரும் போதே இந்தண்டை நாம் டிக்கட்டைத் தயாராய் வைத்துக் கொண்டு முஸ்தீப்புகள் செய்து கொள்ள வேண்டியதில்லை. நாம் மாட்டில் பக்கத்தில் இருக்கும் நண்பருடனோ அல்லது எதிரே உட்கார்ந்து கொண்டிருக்கும் சிநேகிதரிடமோ பேசிக்கொண்டிருக்கலாம். இல்லை, வெளியில் நடக்கும் வேடிக்கைகளைக் கண்டு களித்துக்கொண்டிருக்கலாம். டிக்கட் பரிசோதகர் மாட்டில் நமக்குத் தொந்தரவு கொடுக்காமல் அவர் வேலையை அவர் பார்த்துக் கொண்டு போய்விடுவார்.

இன்னும் டிராமில் இடமில்லாமல் வௌவாலைப் போல் வளையத்தைப் பிடித்துத் தொங்கிக் கொண்டிருப்பவர்களுக்கும் இந்த முறையால் மிக்க அனுகூலமுண்டு. நெற்றியில் ஒட்டியிருக்கும் சீட்டைக் கொண்டு, பக்கத்தில் யார் இறங்கப் போகிறார்கள் என்று அந்த இடத்தைப் பிடிப்பதற்காக அவர்கள் பக்கத்தில் போய் நிற்கலாம்.

இன்னும்.........அதோ, சினிமாக் கொட்டகை வந்து விட்டது. நான் இறங்கி டிக்கெட் வாங்க வேண்டும்.



# நல்லதுக்குக் காலம் இல்லை

நான் போன சமயம் பேனாவையும் பேப்பரையும் வைத்துக் கொண்டு அவஸ்தைப்பட்டுக் கொண்டிருந்தார் அடுத்த வீட்டு அண்ணாசாமி அய்யர். ஏதோ ஒரு பெரிய உலகப் பிரச்னையைத் தீர்க்க முடியாமல் திணறிக்கொண்டிருந்தவர் போல் காணப்பட்டார்.

விஷயம் புரியாமல் அவர் கையில் இருந்த கடிதத்தை வாங்கிப் படித்துப் பார்த்தேன். அதில் காலரா, பிளேக், டபிள் நிமோனியா, வயிற்றுவலி, தலைவலி முதலிய உலகத்திலுள்ள சகல வியாதிகளுக்கும் ஜாப்தா போட்டு, ஒரு நாள் நீடிக்கும் வியாதிகள், இரண்டு நாள் நீடிக்கும் வியாதிகள் என்று வேறு வகுப்புவாரியாகப் பிரிக்கப்பட்டிருந்தன. "என்ன ஐயா, சமாசாரம்?" என்று விசாரித்த பொழுது அன்று லீவு போடுவதற்கு எந்த வியாதியின் மீது பழியைப் போடலாம் என்று அவர் திண்டாடிக் கொண்டிருந்தார் என்று தெரிந்தது.

லீவு வாங்கிக் கொள்ள ஜனங்கள் ஏன் இப்படிப் பொய் சொல்ல வேண்டும் என்று எனக்குத் தெரியவில்லை. அவர்களைக் கேட்டால், "நல்லதுக்குக் காலம் இல்லை, ஸார்! பொய் சொன்னால் தான் லீவு கிடைக்கிறது" என்பார்கள்.

என்னைக் கேட்டால் அவர்கள் இப்படிப் பொய் சொல்லுவதற்குக் காரணம் சில சமயங்களில் அந்த உண்மைக் காரணத்தைச் சொல்ல முடியாமல் இருப்பதுதான் என்று கூறுவேன்.

திடீரென்று ஆபீசுக்குப் புறப்படுகிற சமயம் பார்த்து உங்களுக்கும் உங்கள் மனைவிக்கும் சண்டை மூண்டு விடுகிறது என்று வைத்துக் கொள்வோம். அவளைச் சமாதானப் படுத்தாமல் ஆபீசுக்குப் போனால் அங்கு வேலை ஓடாது என்று தெரியும். அப்பொழுது யாரிடமாவது ஒரு 'கால் கடுதாசி'யில் லீவு எழுதித்தான் அனுப்ப வேண்டியிருக்கிறது. அந்தத் தலை வலி மீதோ, வயிற்று வலி மீதோ தான் பழியைப் போட வேண்டியிருக்கிறது!

இல்லை, பழைய பள்ளிக்கூட சிநேகிதர்கள் தான் வந்து சேர் கிறார்கள். அவர்களுடன் ஹாய்யாக இரண்டு நாள் சீட்டாட்டம்

நடத்தலாம் என்று தோன்றுகிறது. "ஐயா, பழைய நண்பர்களுடன் சீட்டாட்டம் ஆட ஆசையாயிருக்கிறது. இரண்டு நாள் லீவு கொடுங்கள்" என்ருல் ஆபீசில் கொடுப்பார்களா? ஆகவே அப்பொழுதும் அந்த வியாதிதான் வந்து துணை செய்யவேண்டியிருக்கிறது.

எப்பொழுதாவது இரண்டு மூன்று, அல்லது நான்கு ஐந்து நாட்கள் லீவு வேண்டியிருந்தால் இந்த வழியைத்தான் கைக்கொள்ளுகிருேம். ஆனால் இதில் ஆபீஸ் அதிகாரிகளுக்கு நம் மீது சந்தேகம் விழாமல் இருப்பதற்காக ஒரு காரியம் செய்யவேண்டியிருக்கிறது. நாலு நாளைக்கு அந்த 'ஸேப்டி ரேஸர்' முகத்தில் விழிக்காமலும் க்ஷவரஞ் செய்துகொள்ளாமலும் இருந்து, ஐந்தாம் நாள் தாடியுடனும் கலைந்த கிருப்புத் தலையுடனும் ஆபீசுக்குப் போனுதான் நீங்கள் வியாதியால் பீடிக்கப்பட்டிருப்பதாக ஆபீஸ் அதிகாரி நம்புவார்.

'ஸேப்டி ரேஸர்' வந்துவிட்ட இந்த நாகரிகக் காலத்திலும் இந்த மூட ஐதிகம் ஏன் இருக்கிறது என்று தெரியவில்லை. பழைய காலம் என்ருல், நாவிதனைத் தீண்டினுல் ஸ்நானம் பண்ண வேண்டும்; வியாதியஸ்தன் ஸ்நானம் பண்ணக்கூடாதாகையால் க்ஷவரம் செய்து கொள்வதில்லை.

சில நாசூக்கான ஆசாமிகள் இந்த மாதிரி தாடியும் மீசையும் வளர்ப்பதற்குப் பயந்துகொண்டு, நிஜமாகவே உடம்பு சரியாயில்லாவிட்டாலும், லீவு எடுத்துக் கொள்வதில்லை என்று கேள்வி.

சிலர், "வியாதி என்று சொன்னுல்தானே இந்த வம்பெல்லாம் உண்டாகிறது" என்று வேறு வழிகளைக் கைக்கொள்ளுகிருர்கள்.

இனிமேல் பிறக்கப் போகும் மருமான், மருமகள் முதலியவர்களுக்கு இப்பொழுதே கல்யாணத்தை நடத்தி வைக்கிருர்கள். இன்னும் பிறக்காத பிள்ளையைப் பள்ளிக்கூடத்தில் சேர்த்து விடுகிருர்கள். இவர்கள் தாத்தா காலத்திலேயே குடும்பத்தை விட்டுப் பராதீனமான நில புலன்களைப் பார்க்கப் போகிருர்கள். இன்னும் கட்டப்படாத வீட்டை இடித்துப் புதிதாகக் கட்டுகிருர்கள்; இல்லாவிடில் ரிப்பேராவது செய்கிருர்கள். இதெல்லாம் ஒன்றும் சௌகரியப்படாவிட்டால் பேசாமல் 'கஸின் விவாக'த்துக்குப் புறப்பட்டுப் போய்விடுகிருர்கள்.

'கஸின்' என்கிற இங்கிலீஷ் வார்த்தை இவர்களின் சௌகரியத்தை உத்தேசித்துத்தான் கண்டு பிடிக்கப்பட்டது என்று தோன்றுகிறது. தமிழில் உறவு சொல்ல முடியாதவர்களை யெல்லாம் 'கஸின்' என்கிற இங்கிலீஷ் பதத்தால் சுலபமாகக் குறித்து விடலாம். இன்னும் 'கஸின்' இரு பாலாரையும் குறிக்குமாதலால் இந்த வருஷம் பூணூல் போட்டுக்கொண்ட 'கஸினை'யே அடுத்த வருஷம் பிரசவ ஆஸ்பத்திரிக்கு அனுப்பிவிடலாம்.

ஆனால் இதனாலும் சில சமயங்களில் விபரீதம் நேர்ந்து விடலாம். எனக்குத் தெரிந்த ஒருவர் இப்படித்தான் ஒரு வார லீவுக்காகத் தமக்குக் கல்யாணம் என்று சொல்லி லீவு வாங்கிக்கொண்டு போய்விட்டார். இதனால் இவருக்குக் கல்யாணம் ஆனபோது சீமந்தம் என்று சொல்லி லீவு வாங்கிக்கொள்ள நேர்ந்தது. சீமந்தம் வந்தபொழுது பையனுக்குப் புண்ணியாக வாசகம் என்று சொன்னார். இப்பொழுது பையன் பிறந்திருக்கிறான்; அதற்குப் பையனைப் பள்ளிக்கூடத்தில் வைக்கப் போவதாகச் சொல்லி லீவு வாங்கிக் கொண்டிருக்கிறார்!

ஐந்தாறு நாட்களுக்கு உட்பட்டு லீவு வேண்டியிருந்தால் இப்படி. ஆனால் நீண்ட நாள் லீவு, ஒரு மாதம், இரண்டு மாதம் என்று வேண்டுமானால் அதற்கு அந்த சர்க்கார் உத்தியோகஸ்தர்கள்தான் கொடுத்து வைத்தவர்கள். டாக்டரைக் கண்டு அவருக்குரிய 'தட்சணை'யை 'அழுது' விட்டால் அவர் தன்னைப் போல் ஒரு வாயில் நுழையாத வியாதியின் பெயரைப் பார்த்து எழுதிக்கொடுத்து விடுவார்.

ஆனால் பாக்கி ஆபீஸ்களில் வேலை செய்பவர்கள் தங்கள் சாமர்த்தியத்தினால்தான் காரியத்தைச் சாதிக்க வேண்டும். ஒரு மாதம் முதற்கொண்டே அடிகோல வேண்டும். தாடியும் மீசையும் வளர்க்க ஆரம்பிக்க வேண்டும். ஐந்து நிமிஷத்துக்கொரு தடவை 'லொக்கு லொக்கு' என்று இருமவேண்டும். இன்னும் ஆபீஸ் கணக்குகளில் தப்புவிட வேண்டும். இந்த மாதிரி செய்தால் உடம்பு சரியாயில்லை என்று ஒரு மாத லீவு கிடைக்கலாம். ஆனால் இதில் ஒரே ஒரு இடைஞ்சல் என்னவென்றால், ஒரு மாதம் இப்படி வியாதியஸ்தன் போல் நடிப்பதால், மாத முடிவில் நிஜமாகவே வியாதி வந்தாலும் வந்து விடலாம்!

கடைசியாக ஒரு வார்த்தை. என்ன காரணம் சொல்லி லீவு கேட்டாலும் கேளுங்கள், பாட்டியை மாத்திரம் சாக அடிக்காதீர்கள். இப்படிப் பாட்டியைச் சாக அடிக்கும் வழி எல்லாருக்கும் தெரிந்த பழைய வழியாதலால் நிஜமாகப் பாட்டி செத்தால் கூட ஆபீஸில் நம்ப மாட்டார்கள்.

எங்கள் ஆபீஸ் பையன் இப்படித்தான் இது தெரியாமல் தனக்கு அவ்வப்பொழுது லீவு வேண்டும்போதெல்லாம் பாட்டியைச் சாக அடித்துக்கொண்டே வந்தான். ஒரு மாதத்துக்குள் ஒரே பாட்டி பத்துத் தடவைக்கு மேல் சாக ஆரம்பிக்கவே நிலைமை மிகவும் மோசமாகி விடும் போலாகி விட்டது. நேற்று அவன் பாட்டி நிஜமாகவே இறந்து விட்டாள். பையனும் 'மாமனுக்குக் கல்யாணம்' என்று சொல்லி லீவு வாங்கிக் கொண்டு போயிருக்கிறான்!

என்ன பண்ணலாம், ஸார்? நல்லதுக்குக் காலம் இல்லை!



# "சாமி! சாமி! இங்க வாங்க சாமி!"

அட நாராயணு! மூட்டைப் பூச்சிக்குப் பயந்துகொண்டு வீட்டைக் கொளுத்தினது போல் அல்லவோ இருக்கிறது உங்கள் காரியம்? யாராவது இந்த ஜட்கா வண்டிக்காரனுக்குப் பயந்து கொண்டு, மூட்டையைத் தூக்கிக்கொண்டு, லொங்கு லொங்கு என்று நடப்பார்களோ?

இந்த ஜட்கா வண்டிக்காரர்களைக் கண்டாலே யமகிங்கரர்களைக் கண்டாற் போலிருக்கிறது என்று நீங்கள் சொல்லுவதை நான் ஒப்புக் கொள்கிறேன். இருந்தாலும், அதற்காக நம்மை அவன் மிரட்டுவதை நாம் பார்த்துக்கொண்டு இருக்க முடியுமா? இல்லை, அவனுக்குப் பயந்துகொண்டு வண்டியில் ஏருமல் நடந்து தான் போக முடியுமா?

ஜட்கா வண்டியில் சவாரி செய்வதற்கு முதலில் கொஞ்சம் குஸ்திப் பயிற்சி தேவை. அத்துடன் கொஞ்சம் அஷ்டாவதானமும் தெரிந்திருந்தால் நல்லது.

நீங்கள் ரயிலை விட்டு இறங்கினதும் இந்த ஜட்கா வண்டிக்காரர்கள் உங்களுக்கு அளிக்கும் வரவேற்பை உங்களால் சகிக்க முடியாது என்பதில் சந்தேகமில்லை. "சாமி! சாமி! நம்ப வண்டியிலே ஏறுங்க!" என்று முப்பது குரல்கள் கேட்கும். எந்த வண்டியில் ஏறுவது என்று உங்களுக்குப் பெரிய சந்தேகம் வரும். "நம்ப வண்டியிலே ஏறுங்க, சாமி!" என்று உங்கள் சட்டையைப் பிடித்து இழுத்துக் கொண்டிருக்கிறுனே, அவன் வண்டியில் ஏறுவதா, அல்லது "நம்ப வண்டிக்கு வாங்க சாமி" என்று உங்கள் விசிறி மடிப்பு அங்க வஸ்திரத்தைப் பிடித்து இழுத்துக் கொண்டிருக்கிறுனே, அவன் வண்டியில் ஏறுவதா? இந்தப் பிரச்னையைத் தீர்த்து முடிவு கட்டுவதற்குள் இன்னும் பல பிரச்னைகள் தோன்றும்.

அதோ உங்கள் பெட்டியைத் தூக்கித் தன் வண்டிக்குள் வைத்துக்கொண்டு விட்டானே அந்த வண்டியில் ஏறுவதா, அல்லது உங்கள் படுக்கையைத் தூக்கித் தன் வண்டிக்குள் வைத்து

விட்டானே, அவன் வண்டியில் ஏறுவதா? இல்லை, உங்கள் ஐந்து வயதுப் பெண்ணைத் தூக்கிவைத்துக்கொண்டு விட்டானே, அந்த வண்டியில் ஏறுவதா?

இதெல்லாம் மிகக் கடுமையான சோதனைதான். நீங்கள் மாத்திரம் கொஞ்சம் ஜீவகாருண்யம் மேலிட்டவர்களாயிருந்தால், ஏர்க் கால்களிலிருந்து தொங்கிக்கொண்டிருக்கும் அந்தக் குதிரைகளைப் பார்த்து இரக்கப்பட்டு, வண்டிக்கு ஒரு சாமானுகத்தான் போகட்டுமே என்று தீர்மானித்து விடுவீர்கள். இந்த வழி பிடிக்காவிடில் உங்கள் குஸ்திப் பயிற்சியைக் கொஞ்சம் உபயோகித்து எல்லாச் சாமான்களையும் ஒரு வண்டியில் சேர்க்கவேண்டும்.

இதற்குப் பிறகு ஆரம்பிக்கிறது வாடகைத் தகராறு. சாதாரணமாக இந்த இடத்தில் வண்டிக்காரனுக்கும் சவாரி செய்கிறவருக்கும் ஒரு ருசிகரமான சம்பாஷணை நடக்கும்.

போன இடத்தில் வண்டிக்காரன் ஏதாவது தகராறு பண்ணினுல் என்ன பண்ணுவது என்று சவாரி செய்கிறவருக்குப் பயம். அதற்காக முன்கூட்டியே வாடகையைத் தீர்மானிக்க விரும்புவார்.

போகவேண்டிய இடத்தைக் குறிப்பிட்டு, "என்னப்பா கேட்கிறே?" என்று கேட்பார்.

"எல்லாம் பார்த்துக்கொடுங்க, சாமி! உங்களுக்குத் தெரியாதா!" என்று பதில் வரும்.

"அதெல்லாம் தெரியாது. என்ன கேட்கிறே, சொல்! பிறகு அங்கே வந்து கூச்சல் போடக் கூடாது."

"நான் ஏன் சாமி கூச்சல் போடறேன்! வேணும்னு கேட்டா, மவராசன் நீங்க பார்த்துக் கொடுக்கறீங்க."

"சரி, வம்பு பண்ணாதே. என்ன வேணும் சொல்!"

"வழக்கமாக ஒரு ரூபாய்க்குக் குறைந்து நான் ஓட்டறது இல்லீங்க."

"நாலணு வாடகைக்கு ஒரு ரூபாயா? போனுல்போகிறது ஆறணு கொடுப்பேன். சம்மதமா, இல்லையா?"

இப்படியாகத்தானே ஒரு பெரிய வாக்குவாதம் நடக்கும். கடைசியில் 'ஏழணுத்தான் கொடுப்பேன்' என்று அவர் லட்சத்து ஓராவது தடவையாகச் சொல்லிக்கொண்டிருக்கையில், "சரி

ஏறுங்க சாமி" என்று வண்டிக்காரன் சொல்வான். அவர் சொன்ன வாடகைக்கு அவன் சம்மதித்துவிட்டானு, இல்லையா என்ற நிச்சயமே அவருக்கு ஏற்படாது. ஏதோ பகவான் விட்ட வழி ஆகட்டும் என்று அவர் வண்டியில் ஏறி உட்காருவார்.

என்னைக் கேட்டால் இந்த இடத்தில் வண்டிக்காரனுடன் வழக்காடி இத்தனை தொண்டைத் தண்ணீர் செலவழிக்க வேண்டியதில்லை என்று கூறுவேன். முதலில் நீங்கள் சொன்ன வாடகையை ஒப்புக்கொண்டதாகவே வண்டிக்காரன் காண்பித்துக் கொள்ளமாட்டான். தப்பித் தவறி அப்படிக் காண்பித்துக் கொண்டாலும், வீடு போனதும் இந்த வாடகையை அவன் ஒப்புக் கொள்ளப்போவதில்லை. அப்படியிருக்க எதற்காக இப்பொழுதே கத்தித் தொண்டையை வற்ற வைத்துக்கொள்ளவேண்டும்?

வண்டியில் ஏறின பிறகாவது வண்டிக்காரன் சும்மா இருப்பான் என்று நினைக்கிறீர்களோ? மாட்டான். முண முணத்துக் கொண்டே வருவான். தான் அன்று விழித்த முகத்தை விஸ்தரித்து, "நல்ல வாடகை கிடைத்தது!" என்று கூறிக்கொண்டே வருவான். இதெல்லாம் அவன் உங்களைப் பயமுறுத்தக் கையாளும் வழிகள். வண்டிக்காரன் சண்டைக்கு வந்துவிடப் போகிறுனே என்று பயந்துகொண்டு நீங்களே முன்கூட்டி வாடகையைச் சேர்த்துக் கொடுக்கமாட்டீர்களா என்பது அவன் எண்ணம்!

இதை நீங்கள் இரண்டு விதமாகச் சமாளிக்கலாம். ஒன்று வண்டிக்காரன் சொல்வதைத் தாங்கள் காதில் போட்டுக்கொள்ள வில்லை என்று அவனுக்கு மூஞ்சியில் அடித்தாற்போல் காட்டலாம். பக்கத்தில் இருப்பவர்களுடன் உரத்துப் பேசவோ, அல்லது தனியாக இருந்தால் பாடவோ செய்யலாம். இது ஒரு வழி. இன்னொரு வழி, வண்டிக்காரன் உபயோகிக்கும் ஆயுதத்தையே நீங்கள் அவன் மீது பிரயோகித்து விடவேண்டியது. "நல்ல வண்டி பார்த்து ஏறினேன் இன்றைக்கு! வண்டியைச் சற்று வேகமாக விடு, அப்பா! ஏது இன்னிக்கு வீடு போய்ச் சேர முடியாது போலிருக்கே!" என்று அவனைக் கடிந்து கொள்வது.

வீடு வந்து சேருவதற்கு முன்னுலேயே "என்னு, சாமி! இன்னும் எவ்வளவு தூரம் போகணும்? இன்னும் எவ்வளவு தூரம் போகணும்?" என்று வண்டிக்காரன் நச்சரிக்க ஆரம்பித்துவிடுவான். நீங்கள் போக வேண்டிய தெரு வந்ததும் ஒவ்

வொரு வீடாக, "இன்னும் எத்தனை வீடு? இன்னும் எத்தனை வீடு?" என்று கேட்க ஆரம்பித்துவிடுவான். இதற்குப் பதில் சொல்லாதீர்கள். நீங்கள் வாய் விட்டுக் கத்த வேண்டிய கட்டம் கடைசியில் இருக்கவே இருக்கிறது. இப்பொழுதே கத்துவானேன்?

சாதாரணமாகவே வண்டிக்காரர்கள் வீடு வந்து சேர்ந்ததும் உங்களைச் சந்தி சிரிக்க வைத்துவிடுவார்கள். தாங்கள் ஒப்புக் கொண்ட வாடகைக்கு ஒரு நாலணா அதிகமாகவே சொல்லி, அதைத்தான் பேசினதாக வழக்காடுவார்கள். நீங்கள் போவது மரியாதைப்பட்ட இடம், அல்லது கல்யாண வீடு என்று தெரிந்ததோ, உங்கள் கண்ணில் விரலை விட்டு ஆட்டி விடுவார்கள்.

ஆனால் இது விஷயத்திலும் நீங்கள் பயப்படத் தேவையில்லை. இத்தனை நாழியாகத் "தொண்டைத் தண்ணீர் செலவழிக்காதீர்கள், தொண்டைத் தண்ணீர் செலவழிக்காதீர்கள்" என்று சொல்லிக்கொண்டே வந்தேன் அல்லவா? அதையெல்லாம் இப்பொழுது செலவழிக்கத் தயாராயிருங்கள். உங்கள் குஸ்திப் பயிற்சியையும் கொஞ்சம் வெளியிடத் துணியுங்கள்.

நீங்கள் எட்டணா வாடகை பேசியிருந்தால் நாலணாவை எடுத்துக் கொடுங்கள். "அதுதான் நான் பேசின வாடகை" என்று வழக்காடுங்கள். பெரிய வாக்குவாதம் நடக்கும். தங்கள் சாமான்களை விடமுடியாது என்று வண்டிக்காரன் சொல்லுவான். (சில பேர் இதற்காகச் சாமான்கள் எல்லாம் உள்ளே சேர்ந்து பத்திரம் ஆன பிறகுதான் வாடகை கொடுக்க முன் வருவார்கள். இதுவும் நல்ல வழிதான்) இப்பொழுது தங்கள் குஸ்திப் பயிற்சியைக் கொஞ்சம் வெளிக்காட்டுங்கள். கடைசியாக வண்டிக்காரனாகவே, "என்ன சாமி! எட்டணா பேசிட்டு, இப்ப இல்லை என்கிறே!" என்பான். பேசின வாடகையாவது வரட்டும் என்று ஆகிவிடும் அவனுக்கு! எட்டணாவைக் கொடுத்து அவனை விரட்டுங்கள்.

வந்த இடத்தில் இப்படி வண்டிக்காரனுடன் சண்டை போட்டால் அவர்கள் என்ன நினைப்பார்கள் என்று கேட்கலாம். ஆனால் வண்டிக்காரனுக்குப் பயந்து நீங்கள் பின்னடைந்தால் மாத்திரம் உங்களை ஏளனமாய் நினைக்கமாட்டார்களோ? எல்லாம் என்னைக் கேளுங்கோன்னா!

# பெண் பார்த்தல்

"குடித்தனமோ, துரைத்தனமோ?" என்று கூறுகிறார்கள் அல்லவா? அது ஒரு வகையில் மிகப்பொருத்தம் என்றுதான் தோன்றுகிறது. துரைத்தனத்தில் பங்கு எடுத்துக்கொள்ள வேண்டுமானால் 'மனுப்போடுதல்,' பிறகு 'பேட்டி காணுதல்' என்று இரண்டு காரியங்கள் இருக்கின்றன. அதைப் போலக் குடித்தனத்திலும் இருக்கிறது. முதலில் நம் ஜாதகத்தைப் பெண்ணின் தகப்பனார் கையில் சேர்க்க வேண்டியிருக்கிறது. பிறகு அவர் ஜாதகம் பிடித்திருக்கிறது என்றால் பெண்ணைப் போய்ப் பேட்டி காண வேண்டியிருக்கிறது. இப்படிப் பெண்ணைப் போய்ப் பேட்டி காண்பதற்குத்தான் 'பெண் பார்த்தல்' என்று பெயர்.

"பெண்ணைப் பார்க்க" என்று போகிறோமே யொழிய பெண்ணைப் பார்க்க முடிகிறதோ? இல்லை. முதலில் வெட்கம் நம்மைப் பிடுங்கித் தின்கிறது. நாம் புது நாட்டுப் பெண்போல் (அதாவது பழைய காலத்துப் புது நாட்டுப் பெண்போல்) தலையைக் குனிந்து கொள்ள வேண்டியிருக்கிறது. கொஞ்சம் தைரியத்தை வரவழைத்துக் கொண்டுதான் பார்க்கத் துணிகிறோம் என்றால் பெண் மின்னல் போல் ஒரு கணம் எதிரே நின்று விட்டு ஓடி மறைந்து விடுகிறது. பெண் அழகா, இல்லையா என்று நாம் நிர்ணயிக்க முடிகிறதில்லை. ஆனால், பெண்ணோ தூண் மறைவில் இருந்துக் கொண்டோ, அல்லது கூடத்துக்குப் பக்கத்தில் உள்ள அந்த இருட்டறையில் இருந்து கொண்டோ நம்முடைய ரூப சௌந்தரியங்களை அறிந்து கொண்டு விடுகிறாள்.

சில இடங்களுக்குப் பெண் பார்க்கப் போகுமுன் நம்முடைய வெட்கம், மானம், லஜ்ஜை எல்லாவற்றையும் மூட்டை கட்டி வீட்டில் வைத்து விட்டுப் போக வேண்டியிருக்கும்.

முன்னொரு தடவை பெண் பார்ப்பதற்காக நான், என் தாயார், என் தமக்கை, என் தங்கை நால்வரும் புறப்பட்டோம். பெண் வீடு போய்ச் சேர்ந்ததும் தாயார், தமக்கை, தங்கை மூவரும் பெண்கள் கோஷ்டியுடன் சேர்ந்து கொண்டு விட்டார்கள். நானும் பெண்ணின் தகப்பனாரும் கூடத்தில் போய் உட்கார்ந்து கொண்டோம்.

பெண்ணைப் பார்க்க வேண்டும் என்று ரொம்ப ஆவலாக நான் காத்துக்கொண்டிருந்தேன். ஆனால் பெண் வருவதாகக் காணோம். பெண்ணின் தகப்பனார் மாத்திரம் என்னென்னமோ பேசிக் கொண்டே போனார்.

ஒரு போட்டோவைக் காண்பித்து, "இதுதான் இப்பொழுது




கல்யாணமாகப் போகிறதே அந்தப் பெண்ணின் தமக்கை. கிளி என்றால் கிளியாட்டம் இருப்பாள்" என்றார். போட்டோவைப் பார்த்ததில் அவர் தம் மூத்த பெண்ணைக் கிளி என்று குறிப்பிட்டது மிக்கப் பொருத்தம் என்றுதான் தோன்றிற்று. ஏனெனில் அவள் மூக்கழகில் கிளியைக் கொண்டிருந்தாள்.

இதற்குப் பிறகு இன்னொரு போட்டோவை எடுத்தார். "இந்தப் போட்டோவைப் பாருங்கோ. இது தான் நான். எனக்குக் கல்யாணமானபோது எடுத்தது" என்று ஆரம்பித்தார்.

"அது கிடக்கட்டும். பெண்ணுக்குப் பாடத் தெரியுமோ?" என்று கேட்டேன்.

"பாட்டா! எங்கள் வீட்டில் எல்லாருக்கும் சங்கீதத்தில் உள்ள பிரியம் சொல்லி முடியாது. பிடில் வாசிப்பதில் எனக்கு

இணை கிடையாது என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்" என்று சொல்லிவிட்டுப் பிடிலை வைத்துக்கொண்டு வாசிக்க ஆரம்பித்து விட்டார்.

' இது என்ன ராகம் என்று சொல்லுங்கள், பார்க்கலாம்" என்று பிடிலில் ஓர் இழுப்பு இழுத்தார்.

எனக்கு அவர் எப்பொழுது பிடிலைக் கீழே வைப்பார் என்று ஆகிவிட்டது. அவர் எப்படித்தான் அத்தனை அபஸ்வரங்களையும் அந்தப் பிடிலுக்குள் ஒளித்து வைத்திருந்தாரோ என்ற சந்தேகம் வேறு என்னை வதைக்க ஆரம்பித்து விட்டது.

கடைசியாக, ஒரு வகையாக பிடிலைக் கீழே வைத்தார். அந்தப் பிடில் கம்பி மாத்திரம் அறுந்து என் உதவிக்கு வந்திராவிட்டால் நான் என்ன செய்திருப்பேனோ, தெரியாது. ஆனால் அப்பொழுதும் அவர் ஓயவில்லை. இம்மாதிரி, தம் கடைசிப் பையன் கெட்டிக்காரத் தனம், மூத்த பெண்ணின் அழகு, முதல் மாப்பிள்ளையின் சம்பளம் தம்முடைய சங்கீத ஞானம் முதலிய பல விஷயங்களைப் பற்றி பேசிக்கொண்டே போனார். பெண்ணைப் பற்றி ஒன்றும் சொல்ல வில்லை; பெண்ணும் வெளியே வரவில்லை!

இப்பேர்ப்பட்டவர்களிடத்தில் தைரியமாக வெட்கத்தை விட்டு, "பெண் எங்கே? வரச் சொல்லுங்கள், நான் பார்க்க வேண்டும்!" என்று கேட்பதைத் தவிர வேறு வழியில்லை.

பெண் பார்க்கப் போவதற்கு முன், அவர்கள் வீட்டில் எத்தனை குழந்தை குட்டிகள் என்று கேட்டுத் தெரிந்து கொள்வது நலம். குழந்தை குட்டிகள் நிறைய இருந்தால் அவர்கள் சம்பந்தமே வேண்டாம் என்று பேசாமல் இருந்து விடுங்கள்.

நான் ஒரு சமயம் இப்படித்தான் தெரியாமல் அகப்பட்டுக் கொண்டு விட்டேன். பெண் பார்ப்பதற்காக ஒரு கிராமத்துக்குப் போயிருந்தேன். நான் போய்க் கூடத்துப் பெஞ்சியில் உட்கார்ந்தது தான் தாமதம், "அத்திம்பேரே!" என்று ஒரு மூன்று வயதுக் குழந்தை வந்து என்னைச் சுற்றிக் கொண்டது. அது வந்த அடுத்த வினாடியே "அத்திம்பேரே!" என்று கத்திக்கொண்டு ஒரு ஐந்து வயதுப் பையன் என் சட்டையைப் பிடித்து இழுத்தான். இதற்குள் ஏழு வயதுப் பெண் ஒன்று ஓடி வந்து என் கழுத்தைக் கட்டிக்கொண்டது. ஐந்து நிமிஷத்திற்குள் எனக்கு மச்சினன்,

மச்சினி ஆகப்போகிற எட்டு பேர்களும் (எட்டோ, ஒன்பதோ, பத்தோ சரியாகக் கூட எண்ணவில்லை) என்னைச் சூழ்ந்து கொண்டார்கள். அவர்கள் ஒவ்வொருவரும் செய்த விஷமத்தை என்னவென்று சொல்வேன்!

தலைக் கிராப்பைப் பிடித்து இழுத்தது ஒன்று; என் மூக்குக் கண்ணாடியைக் கீழே தள்ளி உடைத்தது இன்னொன்று; என் பௌன்டன் பேனாவைக் கூர் பார்த்தது இன்னொன்று; அதிலிருந்த மசியை யெல்லாம் என் வேஷ்டியில் உதறிற்று மற்றொன்று; தையற்காரன் என் சட்டையைக் கெட்டியாகத் தைத்திருக்கிறானா என்று சோதித்துப் பார்த்தது ஒன்று!

இந்தத் தொல்லைக்காகத்தான் குழந்தை குட்டிகள் அதிகம் இருக்கும் இடத்திற்குப் பெண் பார்க்கப் போக வேண்டாம் என்று கூறினேன்.

பெரிய கவர்ன்மெண்டு உத்தியோகஸ்தர்கள் இருக்கிறார்களே அவர்கள் பெண்ணைத் தயவு செய்து பார்க்கப் போகவே போகாதீர்கள். சூடு கண்ட பூனை பாலை அண்டாது என்பதுபோல் இது விஷயத்திலும் எனக்கு ஓர் அநுபவம் உண்டு.

நான் ஒரு தடவை ஒரு சர்க்கார் உத்தியோகஸ்தர் பெண்ணைப் பார்க்கப் போயிருந்தேன். பெண் பிடித்திருந்தது. கல்யாணம் பண்ணிக் கொள்ளச் சம்மதிக்கலாம் என்று கூடத் தீர்மானித்தேன். அந்தச் சமயம் பார்த்துப் பெண்ணின் தகப்பனார் என்னைத் தம்முடைய அறைக்கு அழைத்தார்.

"உம்முடைய பெயர் என்ன?" என்று கேட்டார்.

சொன்னேன்.

"வயது?"

"23."

"என்ன பாஸ் பண்ணியிருக்கிறீர்?"

"எம். ஏ."

"என்ன வேலை?"

"இன்னும் ஒரு வேலையும் கிடைக்கவில்லை."

"ஏன், இந்த சர்விஸ் கமிஷன் பரீட்சைக்குப் போய்ப் பார்ப்பது தானே?"

"இந்த வருஷம்தான் போகலாம் என்று நினைக்கிறேன்."

"அப்படியா? ரொம்ப சந்தோஷம்! எங்கே இந்தப் பரீட்சைப் பேப்பருக்கு விடை எழுதும், பார்க்கலாம்!" என்று போன வருஷம் சர்விஸ் கமிஷன் பேப்பரை என் கையில் கொடுத்தார்.

"இந்தப் பேப்பரில் 'பாஸ் மார்க்' வாங்கினால் தான் என் பெண்ணை உமக்குக் கொடுப்பேன்" என்றும் கூறினார்!

ஏது, பெரிய தொல்லையாக இருக்கும் போலிருக்கிறதே என்று தோன்றுகிறதோ? ஆம், இந்தப் பெண் பார்ப்பது என்பது மிகவும் தொல்லையான சமாசாரம்தான்! என்னைக் கேட்டால் பெண் பார்க்கவே போகாதீர்கள் என்று கூறுவேன். பெண்தான் நம்மைப் பார்க்க வரட்டுமே!

# போடு துண்டு

காய்தே ஆஸம் ஜனுப் முகம்மது அலி ஜின்னு சாகேப் அவர்களுடன் நான் பாதிக் கிணறு தாண்டத் தயாரா யிருக்கிறேன்; அதாவது, அவர் சொல்லும் கோரிக்கையில் பாதியை ஒப்புக் கொள்ளச் சம்மதப் படுகிறேன். இந்தியாவை இரண்டு துண்டாக—ஹிந்து இந்தியா என்றும், முஸ்லிம் இந்தியா என்றும் போடவேண்டும் என்று அவர் சொன்னுர். இதில் பிற் பாதியை நான் ஒப்புக் கொள்ளத் தயாராயில்லை. ஆனல் முற் பாதியை மிகவும் ஆர்வமுடன் வரவேற்கிறேன். ஜின்னுவைவிட இன்னும் தீவிரமாகப் போய் இந்தியாவைத் துண்டம் துண்டமாக ஆக்க வேண்டும் என்றும் நான் கூறுவேன்.

இந்தியாவைத் துண்டு போட வேண்டும் என்ற எண்ணம் எனக்கு வெகு காலமாகவே இருந்து வந்திருக்கிறது. சமீபத்தில் தான் ஜனுப் ஜின்னுவுக்கு இந்த எண்ணம் உதயமாயிற்று. ஆனல் எனக்கு வெகு காலத்துக்கு முன்னரே உதயமாகிவிட்டது. ஆகவே இதனல் சகல கனதனவான்களுக்கும் நான் தெரிவித்துக் கொள்வது யாதென்றல், இவ்வளவு அபூர்வ யோசனையைக் கண்டு பிடித்த பெருமை என்னைத் தான் சேரவேண்டியது. அதற்காக ஏதாவது வெகுமதிகள் அனுப்புவதா யிருந்தால் எனக்கே அனுப்ப வேண்டியது.

இந்தியாவைத் துண்டம் போட வேண்டியதுதான் என்று நானும் தீர்மானித்து விட்டேன். ஆனல் எப்படிப் போடுவது என்றுதான் இன்னும் தெரியவில்லை. ஏனெனில் இது விஷயத்தில் என் அபிப்பிராயம் வருஷா வருஷம் மாறிக்கொண்டே வருகிறது.

முதல் முதலில் நான் ஐந்தாவது வகுப்பில் வாசித்துக் கொண்டிருந்த காலத்தில் ஒரு நாள் இந்த அபூர்வ யோசனை தோன்றிற்று. அன்று பூகோளப் பாடம் நடந்து கொண்டிருந்தது. சில உலோகங்களைக் குறிப்பிட்டு, இந்தியாவில் அவை எங்கேங்கே கிடைக்கின்றன என்று பூகோள வாத்தியார் கேட்டார். எனக்கு

விடை சொல்லத் தெரியாமல் போகவே, கைக்கு இரண்டு பிரம்பு அடி வாங்கிக்கொண்டு பெஞ்சிமேல் ஏறவேண்டியதாயிற்று. அப்பொழுதுதான் எனக்கு இந்த எண்ணம் உதயமாயிற்று.

வேலை மெனக்கட்டு இரும்பையும் பொன்னையும் புதைத்து வைத்த மகானுபாவன் அவற்றை மாகாண வாரியாகப் புதைத்து வைத்திருக்கக் கூடாதா என்று தோன்றிற்று. முறையே அவற்றிற்கு இரும்பு மாகாணம், பொன் மாகாணம் என்று இப்படிப் பெயர் கொடுத்து விட்டால் அந்தப் பூகோள வாத்தியாயர் சின்னப் பையன்களிடம் வாலை ஆட்ட முடியுமா என்று கேட்கிறேன்.

என்னைக் கேட்டால் இப்பொழுது ஒன்றும் குடி முழுகிப் போய்விடவில்லை. பள்ளிக்கூடங்களில் பரிசு விழாக் காலங்களில் சொல்லப்படுவது போல் பிற்காலத்தில் இந்தியாவில் வசிக்கப் போகிறவர்கள் இப்பொழுது உள்ள சிறுவர்களேயாவர். ஆகவே அவர்களைத் திருப்தி செய்யும் பொருட்டாவது இந்தியாவின் பல்வேறுபாகங்களில் புதைந்து கிடக்கும் உலோகங்களையெல்லாம் தோண்டி எடுக்க வேண்டும். பிறகு அவற்றைத் தனித் தனியாகப் பிரித்து மாகாணத்துக்கு ஓர் உலோகம் வீதம் புதைத்து விடவேண்டும். பிறகு அந்த உலோகத்தின் பெயரை அந்த மாகாணத்துக்கு இட்டுவிட வேண்டும்.

ஆனல் இந்த எண்ணம் ரொம்ப நாள் நீடித்து நிற்கவில்லை. ஏனெனில் எஸ். எஸ். எல். ஸி. பரீட்சை பாஸ் பண்ணினதும் டாக்டர் பரீட்சைக்குப் படிக்க வேண்டும் என்று எனக்குத் தோன்றிற்று. அப்படிப் படிக்கத் தொடங்குமுன் உலகத்தில் எத்தனை வியாதிகள் இருக்கின்றன என்று கணக்குத் தெரிந்துகொள்ள வேண்டும் என்று நினைத்தேன்.

டாக்டருக்குப் படித்துகொண் டிருந்த என் தமக்கையை விசாரித்தேன். அவள் எண்ணத் தொடங்கினுள். அவள் எண்ணி முடிப்பதற்குள் அவளுக்கு மூச்சுத் திணறிப் போய் இதுவரையில் இல்லாத வியாதி ஒன்று வந்து விட்டது. அதைப் பார்த்தபொழுது தான் இந்தியாவை இந்த வியாதி ரீதியாகவாவது பிரிக்கக் கூடாதா என்று தோன்றிற்று. இந்த பாகத்தில் உள்ளவர்களுக்குக் காசநோய் தவிர வேறு ஒரு வியாதியும் வரக்கூடாது, இந்த பாகத்தில் உள்ளவர்களுக்கு "மெனின்ஜிடிஸ்" தவிர வேறு ஒரு வியாதியும்

வரக்கூடாது என்று இப்படிப் பிரித்துவிட்டால் எவ்வளவு சௌகரியமா யிருக்கும் என்று நினைத்தேன். அந்தந்தப் பாகத்தில் உள்ள வைத்தியர் அந்த ஒரு வியாதியை மாத்திரம் சொஸ்தப் படுத்தத் தெரிந்து கொண்டால் போதுமல்லவா?

ஆனால் இப்போதைக்கு இப்பேர்ப்பட்ட பாகுபாடு கிடைக்கப் போவதில்லை என்று தெரிந்ததும், டாக்டர் படிப்பு வேண்டாம் என்று காலேஜில் சேர்ந்தேன். பி. ஏ. யும் பாஸ் பண்ணி எம். ஏ. படிக்கத் தொடங்கினேன்.

அப்பொழுது என் ஜாதகத்தை எத்தனையோ பேர் வாங்கிக் கொண்டு போயினர். கல்யாணப் பேச்சுக்கள் நடந்தன. ஆனால் அந்தச் சமயத்தில் நான் பட்ட கஷ்டம் எனக்குத்தான் தெரியும். பெண் எனக்குப் பிடித்திருந்தால் வரதட்சணைத் தொகை என் தாயாருக்குப் பிடித்திராது. வரதட்சிணைத் தொகை என் தாயாருக்குப் பிடித்திருந்தால் பெண் எனக்குப் பிடித்திராது. (இரண்டும் பிடித்த இடத்தில் ஜாதகப் பொருத்தம் இருக்காது என்று நான் சொல்லாமலே தெரிந்து கொண்டிருப்பீர்கள்.)

அப்பொழுது இந்த இந்தியாவை வரதட்சிணை ரீதியாகப் பிரித்திருக்கக் கூடாதா என்று எனக்குத் தோன்றிற்று. பத்தாயிரம் ரூபாய் வரதட்சிணை கொடுப்பவர்கள், ஒன்பதினாயிரம் ரூபாய் வரதட்சிணை கொடுப்பவர்கள் என்று இம்மாதிரி பிரித்தால் என் தாயார் என்ன வரதட்சிணை கேட்கிறாளோ அந்த மாகாணத்துக்குப் போய் எனக்குப் பிடித்த பெண்ணைத் தேடலாம் அல்லவா? ஆனால் இந்தப் பாகுபாடு இல்லாமற் போகவே திண்டாட்டமாய்ப் போய்விட்டது. எனக்குப் பிடித்த மனைவி சரசுதான் என்று தீர்மானித்துக் கல்யாணம் பண்ணிக்கொண்டேன். ஆனால் வரதட்சிணை என் தாயாருக்குப் பிடித்தமாயில்லை.

கல்யாணம் பண்ணிக் கொண்டதும் எம். ஏ. பாஸ் பண்ணினதும் இரண்டும் ஒன்றாய் நடந்தன. அதற்கு மேல் உத்தியோக வேட்டைப் படலம் ஆரம்பித்தது. நான் மனுப்போடாத வேலை கிடையாது, வாங்கச் சம்மதப்படாத சம்பளம் கிடையாது. ஜில்லா கலெக்டர் வேலையிலிருந்து முனிசிபல் ஆபீஸ் பில் கலெக்டர் வரையில் எந்த உத்தியோகமானாலும் நான் பார்க்கத் தயாரா யிருந்தேன். ஆனால் அவர்கள் கொடுக்கத் தயாரா யில்லை. அதைப்

போலத்தான் சம்பள விஷயத்திலும். நான் பெரிய சம்பளம் கேட்டபோது, "இத்தனையா?" என்று வாயைப் பிளந்தார்கள். குறைந்த சம்பளம் போதும் என்று சொன்னபோது, "உங்களுக்குப் பெரிய சம்பளம் வேறு எங்கேயாவது கிடைக்கும்" என்று சொல்லி விட்டார்கள்.

இத்தனை சங்கடத்தில் இருந்த எனக்கு இந்தியாவைப் புது மாதிரியாகத் துண்டு போடவேண்டும் என்று தோன்றினதில் ஆச்சரியமில்லை. எம். ஏ. படித்தவர்கள் மட்டும்தான் இந்த மாகாணத்தில் மனுப்போடலாம், பி. ஏ. படித்தவர்கள் மட்டும் இந்த மாகாணத்தில் மனுப்போடலாம் என்று இம்மாதிரி இந்தியாவைத் துண்டு போட்டுத் தொலைக்கக் கூடாதா என்று தோன்றிற்று.

இன்றைக்கு அதை யெல்லாம் நினைத்துக் கொண்டாலும் எனக்குச் சிரிப்பா யிருக்கிறது. ஏனெனில் வாழ்க்கையில் எனக்கு அனுபவம் ஆக ஆக, இந்தியாவை எப்படித் துண்டு போட வேண்டும் என்ற எண்ணமும் மாறிக்கொண்டு வருகிறது.

காலையிலிருந்து எனக்கும் சரசுவுக்கும் சண்டை. அப்பாடா! இந்த ஸ்திரீகள் ஒன்றும் இல்லாததற்கு இப்படிப் பிரமாதமாகச் சண்டை போடுகிறார்களே! இன்றைய தேதியில் இந்தியாவை எப்படித் துண்டு போடுகிறது என்று என்னைக் கேட்டால் ஒரே ஒரு யோசனைதான் சொல்லுவேன். அதாவது இந்தியாவை இரண்டு பாகமாகப் பிரித்துவிட வேண்டியது. இரண்டு பாகத்தையும் தடுத்துப் பெரிய மதில்சுவரும் அகழியும் நிர்மாணித்து விடவேண்டியது. ஒரு பாகத்தில் ஸ்திரீகள், இன்னொரு பாகத்தில் புருஷர்கள் என்று ஏற்பாடு செய்துவிட வேண்டியது. எப்படி நம் யோசனை! எதற்கும் என்னைக் கேளுங்கோன்னு!

# பிழைக்கும் வழி

வேலையில்லாத் திண்டாட்டம் அதிகமாகப் பரவியுள்ள இந்தக் காலத்தில் சில பெரிய மனுஷர்கள் ஒரு தந்திரம் கற்றுக் கொண்டிருக்கிறார்கள். பி. ஏ. யும் எம். ஏ. யும் பாஸ் பண்ணி விட்டு, உத்தியோகத்துக்காக இவர்கள் சிபார்சை நாடிப் போனால் இவர்கள் ஒரு புது விதமான பதில் சொல்லக் கற்றுக்கொண்டிருக் கிறார்கள் :

"என்ன ஐயா, வேலை வேலைன்னு அடித்துக் கொள்ளுகிறீர், பிழைக்கத் தெரியாமல்? இப்படி எல்லாரையும் கெஞ்சிக் கூத்தாடு வதற்கு ஒரு மளிகைக் கடை வைத்தால் பிழைத்துக் கொள்ள லாமே" என்று பிழைக்கும் வழி சொல்லிக் கொடுக்க ஆரம்பித் திருக்கிறார்கள்.

நல்ல வேளையாக என்னதான் பி. ஏ. பாஸ் பண்ணினாலும் இந்தப் பெரிய மனிதர்களின் "புத்திமதி"யைப் பின் பற்றும்படி நம் பட்டதாரிகளுக்கு அத்தனை மூளை மழுங்கி விடவில்லை. ஏனெ னில் மளிகைக் கடைவைத்து நடத்துவது என்பது அவ்வளவு சுலப மான காரியம் அல்ல. கொக்கு தலையில் வெண்ணெயை வைத்துப் பிடித்தாலும் பிடிக்கலாம்; மளிகைக் கடையைக் கட்டிக்கொண்டு அழுவது கஷ்டம்.

இல்லை, நான் சொன்னதைக் கேட்காமல் மளிகைக் கடை ஒன்று வைத்து விட்டீர்கள்; அதை எப்படி நடத்துவது என்று சொல்லிக் கொடுக்கிறேன். அதையாவது கேட்டுப் பிழைத்துக் கொள்ளுங்கள்.

மளிகைக் கடை வைப்பதற்கு மிக மிக அத்யாவசியமானவை மளிகைச் சாமான்கள் தான் என்று விஷமக்காரர்கள் கூறுவார் கள். அவர்கள் வார்த்தையை நம்பவே நம்பாதீர்கள். இப்படிச் சொல்லுகிறவர்கள் புரட்சிக்காரர்கள் என்பதில் சந்தேகமில்லை. இப்படிப்பட்டவர்கள் நாளைக்கே, எழுதத் தெரிந்தவன் தான் எழுத்தாளன், 'டைரக்ட்' பண்ணத் தெரிந்தவன் தான் டைரக்டர்,

வைத்தியம் தெரிந்தவன் தான் வைத்தியன் என்று கூறினாலும் கூறுவார்கள். அப்பொழுது நாம் எல்லாருடைய பிழைப்புக்கும் ஆபத்துத்தான்.

ஆகவே மளிகைச் சாமான்கள் இல்லாமலே மளிகைக் கடை நடத்திவிடலாம் என்று ஆகிறது. ஆனால் ஒரு பையன் இல்லாமல் மாத்திரம் கடை நடத்த முடியவேமுடியாது. அப்படி நடத்தினாலும் அதைக் கடை என்று நான் ஒப்புக் கொள்ளவே மாட்டேன்.

பையன் என்றால் பத்து வயதுக்குள் இருக்கவேண்டும், பன்னிரண்டு வயதுக்குள் இருக்கவேண்டும் என்கிற அவசியம் இல்லை. அவன் பத்து வயது பையனாகவும் இருக்கலாய்; நாற்பது வயதுப் "பைய"னாகவும் இருக்கலாம். பையன் என்று நான் சொல்ல வந்தது அவன் வயதுக்காக அல்ல. கூப்பிட்ட குரலுக்கு ஏன் என்று சொல்லுவதற்கோ, அல்லது நான் பின்னால் சொல்லப்போகும் உபயோகத்துக்காகவோ, ஒரு ஆள் இருக்கவேண்டும். அவனை நீங்கள் "பையன்" என்று தான் கூப்பிடவேண்டும்.

ஒரு பையன் இருந்தால் எவ்வளவு சௌகரியம் என்கிறீர்கள் ! அதுவும், "நான் வைகிறாப் போல் வைகிறேன், நீ நடக்கிறாப்போல் நட" என்று மாத்திரம் முன் கூட்டியே பையனிடம் சொல்லி வைத்து அவனும் அதற்கேற்றாப்போலேயே நடந்துகொண்டு வந்தானால் அதைப் "பால் நழுவிப் பழத்தில் விழுந்தது" என்று தான் சொல்லவேண்டும்.

கடைக்குச் சாமான் வாங்க வருகிறவர்களின் எதிரில் பையனை எவ்வளவுக் கெவ்வளவு திட்டுகிறீர்களோ, அவ்வளவுக்கு அவ்வளவு நல்லது. கடைக்கு வருகிறவர்களை நீங்கள் ரொம்பவும் கவனிக்கிறீர்கள் என்பதற்கு இதுதான் அடையாளம். இத்துடன் அப்படித் திட்டும்போது நீங்கள் போடுகிற சப்தம், "இதோ நானும் கடை வைத்திருக்கிறேன்" என்று பத்து மைலுக்கு அப்பால் உள்ளவர்களுக்கும் எடுத்துச் சொல்ல உதவும்.

கடையில் கூட்டம் அதிகமாகிவிட்டால், கடைக்காரர் காக்க வைத்துவிட்டார் என்று ஜனங்கள் கோபித்துக்கொள்ளலாம் அல்லவா ? அந்த சமயம் பார்த்துப் பையனை வையவேண்டியது.

"டேய் தடியா ! உனக்கு மூளை, கீளை இருக்கா ? முதலியார் அரை நாழியாக நின்று கொண்டிருக்கிறது கண் தெரியல்லே ?"

என்று பையனுக்கு மூளை இருக்கா, இல்லையா, அவனுக்குக் கண் தெரியுமா, தெரியாதா என்கிற ஆராய்ச்சியில் இறங்கினீர்களானால், கடையில் வந்து காத்துக்கொண்டிருக்கும் முதலியாருக்கும் பிள்ளைக்கும் உச்சி குளிர்ந்துவிடும்.

"கழுவுக்கேற்ற கோமுட்டி" என்பதுபோல், என்ன குற்றம் நேர்ந்தாலும் அதற்குப் பையன் தான் பொறுப்பு! யாராவது வாங்கிக்கொண்டு போன சாமான் நன்றாயில்லை என்று திருப்பிக் கொண்டு வருகிறார்கள் என்று வைத்துக்கொள்ளுங்கள். உடனே குற்றத்தைப் பையன்மேல் சுமத்தவேண்டியது.

"சாமான் கொடுத்தா, நல்ல சாமானா என்று பார்த்துக் கொடுக்கமாட்டாய்? மடையன்! இந்தா, இதைக் கொட்டிவிட்டு, நல்லதாய்ப் பார்த்துக் கொடு!"

பையன் உள்ளே போய், பழைய 'கறுப்ப'னையே திரும்பவும் பொட்டணம் கட்டிக்கொண்டு வருவான். (பையன் என்ன பண்ணுவான்? அங்கே இருப்பதே அது ஒன்றுதானே?) வந்தவரும் திருப்தியுடன் திரும்பிப் போவார்.

சில மூளை இல்லாத ஆத்மாக்கள் இருக்கிறார்கள். அவர்கள் இத்துடன் நிற்கமாட்டார்கள். திரும்பவும் திரும்பவும் வந்து தொந்தரவு படுத்திக்கொண்டே இருப்பார்கள். இப்படிப்பட்டவர்களை முன் கூட்டியே மடக்கிவிடுதல் நல்லது. ஒரே சாமானை இரண்டு கூடையில் போட்டு வைத்துக்கொள்ளவேண்டியது. பையன் ஏதாவது ஒரு கூடையின் பக்கம் போனால், "டேய்! ஐயருக்கு அந்தக் கூடையிலிருந்து எடுத்துப் போடடா" என்று அடுத்த கூடையைக் காட்டினால் போதும்.

சில அசட்டுப் பிச்சங்கள் இருக்கிறார்கள். வீட்டு தேவதை எழுதிக் கொடுத்த சாமான் ஜாப்தாவைக் கையில் எடுத்துக் கொண்டு வருவதிலிருந்தே இவர்கள் அசட்டுப் பிச்சங்கள் என்று தீர்மானித்துவிடலாம், இவர்களுக்குச் சாமான் விலை தெரியாது, சாமானுக்குச் சாமான் வித்தியாசம் தெரியாது. உளுந்தைப் பார்த்துக் கடுகு என்பார்கள்; கடுகைப் பார்த்து எள்ளுஎன்பார்கள். இப்பேர்ப்பட்டவர்கள் மளிகை ஜாப்தாவைத் தங்கள் கையில் கொடுத்து விட்டு, கறிகாய் மார்க்கெட்டுக்குப் போய் விடுவார்கள். இவர்கள் தலையில் அவர்கள் கேட்ட சாமான், கேட்காத சாமான் எல்லாவற்றையும் கட்டி, பணம் கழற்றினாலும் அவர்களுக்குத் தெரியாது.

மளிகைக் கடை வைத்து நடத்துவதற்கு இன்னும் எத்தனையோ விஷயங்கள் தெரிய வேண்டும். கடைக்கு வந்தவர்களுடன் குசலப் பிரச்னம் செய்வதே ஒரு தனிக் கலை என்று கூறலாம். கேட்ட சாமான் கடையில் இல்லை என்றால், அதற்குப் பதில் இருக்கிற சாமான் ஒன்றை அவர்கள் தலையில் கட்டத் தெரிய வேண்டும். "அடுத்த வீட்டு முதலியாரும் இதைத் தான் வாங்கிக் கொண்டு போவார்" அல்லது "அம்மாள் வந்தாக்க நம்ம கடையில்தான் வாங்குவது" என்றெல்லாம் சொல்லுவதற்கு ரொம்பவும் சாமர்த்தியம் வேண்டும். சுருங்கக் கூறுமிடத்து ஆளுக்கேற்ற வேஷம் போட வேண்டிய இடம் இந்த மளிகைக் கடைதான். ஆனால் இது தெரிந்தால்தான் உங்களுக்கு எப்பவோ வேலை கிடைத்திருக்குமே! மளிகைக் கடை வைக்க வேண்டிய அவசியமே நேர்ந்திராதே!



# யுத்தம் எப்பொழுது முடியும்!

வீரம் என்பது கொலையல்ல வெற்றியும் அதனால் நிலையல்ல
தீரம் என்பது திடசாந்தம் தெரிவிப்பது நம் சித்தாந்தம்

எவ்வளவு தெளிவான பாட்டு!—இல்லை, இல்லை, மன்னிக்க வேண்டும். இதைப்பாட்டென்று கூறுவதே தவறு. ஆம், பாட்டென்றால் இவ்வளவு எளிதில் புரியும்படியாகவா இருக்கும்? வாத்தியாரை அடுத்து, அவர் பதம், பதமாகப் பிரித்து, பிறகு பதவுரை, பொழிப்புரை, கருத்துரை முதலிய சடங்குகள் செய்த பிறகும் அரை குறையாக மனதில் படுவதுதான் பாட்டு என்று நாம் பள்ளிக்கூட அனுபவத்திலிருந்து தெரிந்து கொண்டிருக்கிறோம்.

"வீரம் என்பது கொலையல்ல, வெற்றியும் அதனால் நிலையல்ல" என்று மிகத்தெளிவாக யாருக்கும் புரியும்படி யாகத்தான் நம் கவி சொல்லியிருக்கிறார். இருந்தும் இதை யாரும் ஹிட்லருக்கு மொழி பெயர்த்துக் காட்டாததாலோ, என்னவோ தெரியவில்லை; ஹிட்லர் மகா பயங்கரமான யுத்தம் ஒன்றை ஆரம்பித்து வைத்துவிட்டார்.

இந்த யுத்தம் ஆரம்பித்து இப்பொழுது கிட்டத்தட்ட ஐந்து வருஷங்களாகப் போகிறது. இந்த யுத்த விஷயமாக, நாம் ஐந்து வருஷங்களுக்கு முன்பு கொண்டிருந்த மனப்பான்மைக்கும், இப்பொழுது கொண்டுள்ள மனப்பான்மைக்கும் எவ்வளவோ வித்தியாசம் ஏற்பட்டு விட்டது!

மாமனார் வீட்டுக்குச் செல்லும் மாப்பிள்ளைகளின் அனுபவம் உங்கள் எல்லாருக்கும் தெரிந்திருக்கும். நீங்கள் மாமனார் வீட்டுக்குப் போகாது இருக்கும்வரை எல்லாரும் மாப்பிள்ளை வரமாட்டாரா என்று தவியாய்த் தவித்துப் போவார்கள். "நீங்கள் கட்டாயம் வந்துதான் ஆகவேண்டும். கட்டாயம் ஒரு மாதத்துக்குக் குறையாமல் லீவு வாங்கிக் கொண்டு வரவேண்டும்" என்று கடிதத்துக்கு மேல் கடிதம் வரும். "எங்கள் பேரில் கோபமா, என்ன? எங்கள் வீட்டுக்கு வரவே மாட்டேன் என்கிறீர்களே?" என்று மச்சினன்களும், மச்சினிகளும் மாறி மாறி எழுதுவார்கள்.

இதையெல்லாம் பார்க்கும்போது உங்களுக்குப் போகத்தான் வேண்டும் என்று தோன்றும். ஆனால் கூடவே ஒரு பயம் உங்களைப் பிடித்து வாட்டும். லீவு பதினைந்து நாட்களுக்கு மேல் கொடுக்க மாட்டார்கள் போலிருக்கிறதே, ஆனால் இந்த மாமனார் வீட்டுக்காரர்கள் செய்யும ஆர்பாட்டத்தைப் பார்த்தால் இரண்டு மாத காலத்துக்குக் குறைந்து விடமாட்டார்கள் என்று தோன்றுகிறதே, இவர்களிடமிருந்து எப்படி விடுவித்துக் கொண்டு, திரும்பவும் ஆபீஸ் வந்து சேர்கிறது என்று கவலைப்பட்டுக் கொண்டே மாமனார் வீடு போய்ச் சேர்வீர்கள்.

மாமனார் வீட்டுக்குப் போன முதல் நாள் உங்களுக்குத் தேவலோகத்தில் இருப்பதாகவே தோன்றும். அத்தனை உபசாரம் நடக்கும். மாமியாரும், மாமனாரும் உங்களுக்கு மாறி மாறி உபசாரம் செய்வார்கள்.

"என்ன மாப்பிள்ளை! எத்தனை நாள் லீவு வாங்கிக் கொண்டிருக்கிறீர்கள்?" என்று மாமனார் வெகு அக்கரையாக விசாரிப்பார். நீங்கள் "பதினைந்து நாள்" என்று பதில் கூறியதும் அவர் முகம் சுருங்கி விடும். பிறகு ஒருவாறு சமாளித்துக்கொண்டு, "பரவாயில்லை, மாப்பிள்ளை! இன்னும் பதினைந்து நாளுக்கு இப்பொழுதே எழுதிப் போட்டு விடுங்கள்" என்பார். இதைக் கேட்டு, சில அசட்டு மாப்பிள்ளைகள் எழுதிப் போட்டு விட்டு, பிறகு மிகவும் திண்டாடுவார்கள்.

ஏன், பிறரைச் சொல்லப் போவனேன்? நானே ஒரு தடவை அப்படித்தான் எழுதிப் போட்டு விட்டு, பின்னால் மிகத் திண்டாடிப் போய் விட்டேன்.

ஏனெனில் விருந்தும், மருந்தும் மூன்று நாளைக்குத்தான் என்று சொல்வார்கள். ஆனால் தற்கால மாமனார் வீடுகளில், விருந்து மூன்று நாளைக்குக் கூட நீடிக்காது. எல்லாம் மூன்று வேளை சாப்பாட்டோடேயே நின்று விடும். இரண்டாம் நாளே மாப்பிள்ளைக்கு, "ஏண்டா, மாமனார் வீட்டுக்கு வந்தோம்" என்று ஆகி விடும். இரண்டாம் நாள் எப்படியோ பல்லைக் கடித்துக்கொண்டு இருந்துவிட்டு, மூன்றும் நாள், "சொல்லாமல் செய்வோர் பெரியோர்" என்னும் வழக்கை யொட்டி, சொல்லிக்கொள்ளாமலேயே மாப்பிள்ளை கம்பி நீட்டி விடுவார்,

இந்த மாதிரி, மாமனார் வீட்டுக்குச் சென்ற மாப்பிள்ளையின் கதியாகிவிட்டது, இந்த யுத்தத்தின் கதியும். இந்தியாவில் இருந்த எல்லாரும், "யுத்தம் வருமா, வருமா, எப்பொழுது வரும், எப்பொழுது வரும்" என்று ஏங்கிக்கொண்டிருந்த காலம் போய், "இந்தச் சனியன் பிடித்த யுத்தம் எப்பொழுது தொலையும்?" என்று ஆகிவிட்டது.

எங்கு சென்றாலும், யாரைக் கண்டாலும், இந்த யுத்தம் எப்பொழுது முடியும்?" என்று 'முடியும்' என்பதற்குப் பின்னால் கேள்விக் குறி போட்டு, நம்மை ஜோசியம் சொல்லச் சொல்லுகிறார்கள். இன்னும் சிலர், "யுத்தம் எப்பொழுது முடியும்!" என்று 'முடியும்' என்பதற்குப் பின்னால் ஆச்சரியக் குறி போட்டு, தங்கள் முகத்தில் பரிதாபக் குறி தோன்ற நம்மைக் கேட்கிறார்கள்.

ஆனால் இதே ஜனங்கள் தான் யுத்தம் வருவதற்கு முன்னால் யுத்தம் எப்பொழுது வரும் என்று வெகு ஆவலாக இருந்தார்கள். ஏனெனில் யுத்தத்தினால் தங்களுக்கு அநேக காரியங்கள் ஆகும் என்று அவர்கள் வெகு ஆவலாக எதிர்பார்த்தார்கள். எல்லாவற்றுக்கும் மேலாக, தாங்கள் எத்தனையோ வருஷ காலமாகக் கண்ணீர் விட்டே வளர்த்து வரும் சுதந்திரப் பயிர் துளிர்த்துத் தழைத்தோங்கும் என்றும் எதிர்பார்த்தார்கள்.

"ஐரோப்பிய யுத்தம் ஒன்று மட்டும் ஆரம்பிக்கட்டும், இந்தியர்கள் பாடு வேட்டைதான்! ஆங்கிலேயர்கள் திணறிப் போய் விடுவார்கள். நம் காலில் விழுந்து, நாம் வேண்டாமென்றாலும், கெஞ்சிக் கூத்தாடி, வாங்கிக்கொண்டுதான் ஆகவேண்டும் என்று சுதந்திரத்தைக் கொடுத்துவிட்டுத்தான் மறு காரியம் பார்ப்பார்கள்" என்று இந்த ஜனங்கள் நினைத்தார்கள்.

இதற்காக யுத்தம் வரச் சற்றுத் தாமதம் ஆனபோது, "ஏ மானங்கெட்ட யுத்தமே! உனக்கு வெட்கமில்லையா? மானம் இல்லையா? உன் இஷ்டப்பட்டபோது வருகிறது என்கிறாயா? வா, சீக்கிரம்" என்றெல்லாம் சொன்னார்கள். சேம்பர்லின் துரை மூனிக்குக்குக் குடையைப் பிடித்துக்கொண்டு பறந்து சென்றபோது இவர்கள் பயந்து போய்விட்டார்கள். "ஐயோ, வருகிற யுத்தத்தை வேண்டாம் என்று சொல்லி விடுவார்போலிருக்கிறதே" என்று நடுங்கினார்கள்.

ஆனால் இவர்கள் ஆசையைக் கெடுக்க வேண்டாம் என்பதற்காகவோ, என்னவோ அந்த யுத்தம் வந்தது. யுத்தம் வந்ததும் எல்லாரும் அதனை ராஜோபசாரமாக வரவேற்றார்கள். யுத்தத்துக்கு, வந்த களைப்பு தீர்ந்ததும், அது தன்கையில் கொண்டுவந்திருந்த பெட்டியில், "இந்திய சுதந்திரம்" இருக்கிறதா என்று பார்த்தார்கள். ஐயோ, என்ன ஏமாற்றம்! பெட்டியில் சுதந்திரத்தைக் காணோம்! சரி, வரும் வழியில் எங்கேயாவது மறந்து வைத்துவிட்டு வந்திருக்கும், நம் ஊருக்கு வரும்பொழுது எடுத்துக்கொண்டு வரும் என்று தங்களைத் தாங்களே சமாதானப் படுத்திக் கொண்டார்கள்.

யுத்தம் வந்து ஒரு வருஷம் ஆயிற்று, இரண்டு வருஷமும் ஆயிற்று. இரண்டாம் வருஷ முடிவில் யுத்தம் நம் ஊருக்குக் கிழக்கேயே வந்து முகாம் போட்டது. ஆனால் அப்பொழுதும் அது சுதந்தரத்தைக் கையுடன் கொண்டுவரவில்லை.

அப்படியானால் வெறும் கையோடு தான் வந்ததா? அதுவும் இல்லை. அப்படி வந்திருந்தால்தான் தேவலையே! அப்படிக்கின்றி நமக்கு வேண்டாத பொருள்கள் என்னென்னவற்றையோ எடுத்துக்கொண்டு வந்தது. இந்தப் பொருள்களைக் கண்டதும், நமக்கு "ஏண்டா இந்த யுத்தம் வந்தது? இந்தச் சனியன் பிடித்த யுத்தம் முடியாதா? எப்பொழுதுதான் முடியும்!" என்று ஆகிவிட்டது.

அப்படிக் கசந்து போகும்படி இந்த யுத்தம் நமக்கென்று கொண்டுவந்த பொருள்கள் என்னவென்று பார்ப்போம்.



# மஞ்சள் கடிதாசு

பஞ்சமும் நோயும் நின்னடியார்க்கோ
பாரினில் மேன்மைகள் வேறினியார்க்கோ ?

என்றார் பாரதியார் இந்த யுத்தம் ஆரம்பிப்பதற்கு வெகு காலத்துக்கு முன்னரே அவர் வார்த்தையை மெய்ப்பிப்பதற்காகவோ, என்னவோ, யுத்தம் நாட்டுக்குள் நுழையும்போது பஞ்சத்தையும் நோயையும் தன்கூடக் கொண்டுவந்து எல்லாருக்கும் நீட்டி விட்டது!

இப்பொழுது கிட்டத்தட்ட எல்லாருமே 'ரேஷன் கார்டு' என்று சொல்லப்படும் மஞ்சள் கடிதாசு ஆளுக்கு ஒன்று வைத்திருக்கிறோம். வாரத்திற் கொருதடவை, அதுவும் கடைசி நாளான சனிக்கிழமை யன்று, கார்டு வைத்த இடம் தெரியாமல் வீடு முழுவதும் தேடுகிறோம். கார்டு கிடைக்காமல் போனால் எல்லார் மீதும் வேட்டை நாயைப்போல் எரிந்து விழுகிறோம்.

அப்பொழுது என்று நம் வீட்டு வேலைக்காரப் பையன், "ஐயா, 'கார்டு எங்கே, கார்டு எங்கே' என்று இத்தனை கரடியாய்க் கத்தியும் யாரும் கார்டைக் கொண்டுவந்து கொடுக்க மாட்டேன் என்கிறார்களே, நாமாவது உதவி செய்வோம் என்று உதவி புரியத் தீர்மானிக்கிறான்.

உடனே கார்டைக் கொண்டுவந்து நம் கையில் கொடுக்கிறான். அதைப் பார்த்ததும் நமக்குக் கோபம் கோபமாய் வருகிறது. கார்டைக் கிழித்து அவன் தலையில் போடுவதுடன், அவன் முதுகிலும் இரண்டு பூசை கொடுத்து அனுப்புகிறோம். பின், ரேஷன் கார்டைத் தேடிக்கொண்டிருக்கும் சமயத்தில் தபால் கார்டைக் கொண்டுவந்து கொடுத்தால் கோபம் வருமா, வராதா? நீங்களே சொல்லுங்கள்!

கடைசியில் கார்டு கிடைக்கிறது. ஆனால் பணம் கிடைப்பதில்லை. வாரா வாரம் அரிசிக்கு என்று பணம் எடுத்து வைக்கிறது என்றால் முடிகிற காரியமா, என்ன ?

பணம் கிடைக்காமல் திண்டாடுகிற போது, இந்த யுத்தம் ஏன் வந்தது என்று நமக்கு ஆகிவிடுகிறது. பின் ஆகாதா என்ன, நீங்களே சொல்லுங்கள்.

யுத்தம் ஆரம்பிப்பதற்கு முன்னர் சாமான், பண்டங்கள் வாங்குவதற்கு இப்படியா கார்டு எங்கே இருக்கிறது, பணம் எங்கே கிடைக்கிறது என்று திண்டாடினோம்.

முன்னெல்லாம் முதல் தேதி சாயந்திரம் சம்பளத்தை வாங்கிக்கொண்டு வீடு திரும்ப வேண்டியதுதான் தாமதம், வீட்டுக்காரி நீண்ட ஜாபிதாவை நம் கையில் கொடுத்து விடுவாள். அடுத்த நாள் காலை பொழுது விடிந்ததும் விடியாததுமாக, மேல் துண்டை மேலே போட்டுக்கொண்டு செட்டியார் கடையோ, சாகிபு கடையோ, நமக்கு யார் கடை வழக்கமோ அந்தக் கடைக்குப் போய் ஜாபிதாவில் கண்டுள்ள எல்லா சாமான்களையும் வாங்குவோம்.

பிறகு செட்டியாரையோ, சாகிபுவையோ பார்த்து, "இந்தாருங்கள். இதை வரவு வைத்துக் கொள்ளுங்கள்" என்று இருபதோ முப்பதோ கொடுத்துவிட்டு வருவோம்.

பிறகு ஒரு மாதத்துக்கு, வீட்டுக்குச் சாமான் வாங்கிப் போட வேண்டிய கவலையே நமக்குக் கிடையாது. மாதா மாதம் செட்டியார் கடையிலோ, அல்லது சாகிபு கடையிலோ கடன் ஏறிக் கொண்டிருக்கிறதைப் பற்றிச் செட்டியாரோ, சாகிபுவோ ஞாபகப் படுத்தும்போது மட்டும் கவலைப்படுவோம், அல்லது கவலைப்படுவது போல் காண்பித்துக் கொள்வோம்.

ஆனால் இப்பொழுதோ என்றால் வாரா வாரம் அரிசிக் கவலைப் படவேண்டி யிருக்கிறது. சர்க்கரைக் கவலைப்படவேண்டி யிருக்கிறது. இவற்றை வாங்குவதற்கு வேண்டிய பணத்தைப் பற்றியும் கவலைப்பட வேண்டியிருக்கிறது. வீட்டுக்கு எவனாவது சாப்பிட வந்துவிட்டால், "ஐயோ, வந்து விட்டானே!" என்றும் கவலைப்பட வேண்டியிருக்கிறது.

சாதாரண நாட்களில் வீட்டுக்குச் சாப்பிட வருகிறவர்களை எப்படியாவது ஏமாற்றித் துரத்திவிடலாம். ஆனால் கல்யாணம் முதலிய விசேஷங்களுக்கு வீட்டுக்கு வருகிறவர்களுக்கு எப்படி சாப்பாடு போடாமல் அனுப்புவது? "உங்கள் ரேஷன் கார்டைக்

கூடவே கொண்டு வாருங்கள்" என்று கல்யாணப் பத்திரிகை களில் போடுகிறோமே யொழிய, எத்தனை பேர் ரேஷன் கார்டு கொண்டு வருகிறார்கள் ?

அப்படித்தான் திக்குமுக்காடி அரிசி வாங்கினோம், அந்தந்த வாரம் என்ன வர்ண அரிசி கிடைக்கிறது என்று சொல்ல முடி கிறதா ? கிடையாது.

ஒரு வாரம் சிவப்பு அரிசி கிடைத்தால், அடுத்த வாரம் மஞ்சள் அரிசி கிடைக்கிறது. பிறகு அடுத்த வாரம் இந்த வர்ணம் மாறி இன்னொரு வர்ணம் மாறுகிறது. இப்படியே உலகத்தில் நாம் இது வரை பார்த்துள்ள, பார்க்காத அத்தனை வர்ண அரிசியும் கிடைக்கிறது.

பிறந்தது முதற்கொண்டு அரிசி என்றால் வெளுப்பாகத்தான் இருக்கும் என்று நம்பிக் கொண்டிருந்தோம் அல்லவா ? அந்த நம்பிக்கையை அறவே ஒழித்து விட்டது இந்த யுத்தம்.

ஒரே வெளுப்பு அரிசியாகச் சாப்பிடுவதற்கு விதம் விதமான வர்ண அரிசி சாப்பிடுவது ஒரு குஷிதானே என்று விஷயம் தெரி யாதவர்கள் கேட்கலாம். ஏன், நானே ஒரு தடவை சரசு இது விஷயமாகப் பொரிந்ததற்கு அப்படித்தான் கேட்டேன். சரசு சொன்ன பிறகு தான் விஷயம் புரிந்தது.

ஒவ்வொரு வித வர்ண அரிசியும் வேகுவதற்கு ஒரு தனிப்பட்ட காலம் எடுத்துக் கொள்கிறதாம். சிவப்பு வர்ண அரிசி ஒரு காலம் எடுத்துக் கொண்டால், மஞ்சள் வர்ண அரிசி இன்னொரு காலம் எடுத்துக் கொள்கிறதாம். மஞ்சள் வர்ண அரிசி ஒரு காலம் எடுத்துக் கொண்டால் பழுப்பு வர்ண அரிசி இன்னொரு காலம் எடுத்துக் கொள்கிறதாம்.

ஒரு அரிசியுடன் ஒரு வாரம் பழகி, பரீட்சைகள் நடத்தி, அதன் குறை நிறைகள், வக்கிரமங்கள் முதலியவற்றைத் தெரிந்து கொள் வதற்குள் இன்னொரு வித அரிசி வந்துவிடுவதால் முதல் வாரப் பரீட்சை அத்தனையும் வீணாகி விடுகிறதாம். பிறகு திரும்பவும் புது அரிசியுடன் பரீட்சைகள் நடத்த வேண்டி யிருக்கிறதாம்.

மஞ்சள் கடுதாசியினால் இத்தனை திண்டாட்டம் இருக்கிறது. ஆனால் மஞ்சள் கடுதாசியை நீட்டிய யுத்தம், அந்த ஒரு கடுதாசி யுடன் விட்டதா ? இல்லை. கொஞ்ச காலத்துக்குள் சிவப்புக் கடிதாசி ஒன்றையும் நீட்டிவிட்டது. பிறகு ரேஷன் கார்டு என்று ஒன்று கொடுத்திருக்கிறார்களே, அதைத்தான் குறிப்பிடுகிறேன்.

கொஞ்ச காலமாக உளுந்துப் பஞ்சம் வேறு ஏற்பட்டிருக்கிறது. இதனால் தமிழரின் நாகரிகத்துக்கே தனிச் சின்னமாக விளங்கிய இட்லி சீக்கிரமே மறைந்து விடுமோ என்று பயமாக இருக்கிறது. இனிமேல் காப்பி ஹோட்டல்களில் தமிழருக்குப் பிடித்தமான இட்லி, தோசை, வடை முதலியவற்றைப் பார்க்க முடியுமோ என்று ஏக்கமாக இருக்கிறது. சீக்கிரமே உளுந்துக்கென்று ஒரு நீலக் கார்டு கொடுத்தாலும் கொடுக்கலாம். பிறகு யுத்தம் வளர, வளர ஒவ்வொரு சாமானுக்கும் ஒரு தனி வர்ணக் கார்டு கொடுக்கலாம். அத்தகைய விபரீத நிலைமை ஏற்பட்டு விட்டால், அதை நான் எப்படிச் சமாளிக்கப் போகிறேனோ, தெரியவில்லை. எனக்கு இப்பொழுதே மூளை குழம்புகிறது.

"இந்தாருங்கள், ஓடிப்போய் சர்க்கரை வாங்கிக்கொண்டு வாருங்கள்" என்பாள் சரசு. அவளுக்கு டிகாக்ஷனையும் பாலையும் கலந்து, தனக்கென்று முதல் கப் காப்பி எடுத்து வைத்துக்கொண்டு, அதைச் சாப்பிட ஆரம்பித்த பிறகுதான் காப்பிக்குச் சர்க்கரை இல்லை என்ற விஷயம் ஞாபகம் வரும்.

ஒவ்வொரு சாமானுக்கும் ஒரு ரேஷன் கார்டு கொடுத்திருக்கும் சர்க்கார், அவற்றை அகராதிக் கிரமத்தில் வைத்துக் கொள்வதற்கு ஒரு தனிப் பெட்டியாவது கொடுத்திருக்கிறார்களா? இல்லை.

ஆகவே நான் அவசரத்தில் நீலக் கார்டுக்குப் பதில் மஞ்சள் கார்டை எடுத்துக் கொண்டு அவசரம் அவசரமாகக் கடைக்குப் போய் அரிசிக் கார்டை நீட்டி, "அவசரம்! அவசரம்! ஒரு வீசை சர்க்கரை கொடு" என்று கேட்பேன். கடையில் உள்ள எல்லாரும் இதைப் பார்த்து 'கொல்' லென்று நகைத்த பிறகுதான் என்னுடைய தவறு எனக்குத் தெரியும்.

ஆனால் இத்தகைய அவமானங்கள் எதுவும் நேரிடாமல் இருக்க வேண்டுமானால், இந்தக் கார்டுகளைக் கவனித்துக் கொள்வதற்கு என்றே இரண்டு குமாஸ்தாக்களுக்குச் சம்பளம் கொடுத்து, "வர்ணக் கார்டு இலாகா" என்று ஒரு தனி இலாகா வீட்டில் ஏற்படுத்த வேண்டும்.

இது முடிகிற காரியமா என்ன நீங்களே சொல்லுங்கள். பின்னால் ஏற்படப் போகும் இந்த விபரீத நிலைமையை நினைத்துப் பார்க்கும்போது, "யுத்தம் எப்பொழுது முடியும்" என்று எல்லாருமே பரிதாபக் குரலுடன் கேட்பது இயற்கையே அல்லவா?

# பட்டணம் கல்தா

முன்னே கடிவாளம் மூன்றுபேர் போட்டிழுக்கப்
பின்னே யிருந்திரண்டு பேர்தள்ள—என்னேரம்
வேதம் போம் வாயான் விகடராமன் குதிரை
மாதம் போம் காத வழி!

இந்திய சுதந்திரத்தைக் கொண்டு வராத யுத்தம், தன் கையில் எடுத்துக்கொண்டு வந்த பெட்டியில் வேறு என்னதான் கொண்டு வந்தது?

வந்ததும், வராததுமாக யுத்தம் எல்லாருக்கும் மஞ்சள் கடிதாசி நீட்டியதைப் பற்றிச் சென்ற அத்தியாயத்தில் பார்த்தோம். பெட்டியில் வேறு இன்னும் என்ன சாமான்கள் இருக்கின்றன என்று சற்றுப் பெட்டியைத் திறந்து பார்ப்போம்.

"......ஐயோ! இது என்ன? யார் இப்படி 'பட்டணம் கல்தா' கொடுத்துக் கழுத்தைப் பிடித்துத் தள்ளுகிறது?"

ஓஹோ! புரிகிறது. யுத்தம் தன் பெட்டியில் "பட்டணம் கல்தா" வைத் தூக்கிக்கொண்டு வந்திருக்கிறது.

ஆம், யுத்தம் தன்னுடன் கொண்டு வந்த பொருள்களில் இந்தப் பட்டணம் கல்தாவும் ஒன்று.

"பட்டணம் கல்தா" என்று சிறப்பாகப் பட்டணத்தின் பெயரை எதற்காகச் சேர்த்திருக்கிறார்கள் என்று எனக்கு வெகு காலம் விளங்கவில்லை. கும்பகோணம் வெற்றிலை, சிவபுரி புகையிலை என்பதுபோல் பட்டணத்தில் கிடைக்கும் கல்தா மற்ற ஊர்களில் கிடைக்கும் கல்தாவைவிடச் சிறப்பாக இருக்கலாமோ என்று தோன்றிற்று.

ஆனால் எல்லாவித கல்தாக்களையும் சீர்தூக்கிப் பார்த்து, பட்டணம் கல்தாதான் உயர்ந்தது என்று தீர்ப்புச் சொல்வதற்கு வேண்டிய அனுபவம் எனக்கு வெகு காலம்—அதாவது இந்த யுத்தம் வரும் வரை—ஏற்படவே யில்லை.

யுத்தமும் வந்தது, எனக்கு எங்கு சென்றாலும் கல்தாவும் கிடைத்தது. ரயிலில் ஏறவேண்டுமா? கல்தா! ரயிலை விட்டுக் கீழே இறங்க வேண்டுமா? கல்தா! ரயிலில் இந்த மூலையிலிருந்து சரசு இருக்கும் அந்த மூலைக்குப் போக வேண்டுமா? கல்தா! சரசு இருக்கும் இடத்திலிருந்து நம் மூட்டை வைத்திருக்கும் இடத்துக்குப் போகவேண்டுமா? கல்தா. மூட்டை வைத்திருக்கும் இடத்திலிருந்து நம் டிரங்குப் பெட்டி வைத்திருக்கும் இடத்துக்குப் போக வேண்டுமா? கல்தா! இப்படியாக எல்லா ஊர்களிலும் எல்லா ரயில் வண்டிகளிலும் எங்கே திரும்பினாலும் கல்தா!

விஷயம் தெரிந்தவர்கள், அதாவது யுத்தம் வந்த பிறகு ரயிலில் பிரயாணம் செய்துள்ளவர்கள், எதற்காக நான் இப்படி என் சாமான்களை மூலைக்கு ஒன்றாக வைத்திருக்கிறேன் என்று கேட்க மாட்டார்கள் என்று நினைக்கிறேன்.

யுத்தம் வந்த பிறகு ரயிலில் ஏறும் போதெல்லாம்—"என்ன ஐயா! நினைத்தபோது ரயில் பிரயாணம் செய்கிறீரா?" என்று யாராவது சண்டைக்கு வந்து விடாதீர்கள்—எல்லாம் என் பிரயாணம் அவசியந்தானா என்று என்னையும், என் பணப் பையையும் விசாரித்துக்கொண்ட பின்னரே பிரயாணம் செய்கிறேன்.

நான் ரயில் பிரயாணம் செய்ய நேரும்போதெல்லாம் எனக்கு 'விகடராமன் குதிரை' ஞாபகம் வரும்.

எனக்கு முன்னால் வண்டியைக் கைப்பற்றிக் கொண்டிருக்கும் நண்பர்கள் என்னைப் பிடித்துப் பின்னுக்குத் தள்ள, எனக்குப் பின்னால் வண்டியில் ஏறுவதற்காகக் காத்துக்கொண்டிருக்கும் நண்பர்கள் தாங்கள் ஏறவேண்டுமே என்ற கவலையினால் என்னை முன்னுக்குப் பிடித்துத் தள்ள, இருவருக்கும் நடுவில் அகப்பட்டுக் கொண்டிருக்கும் என் பாடும், என் மூட்டை முடிச்சுகளின் பாடும் வெகு திண்டாட்டமாகிவிடும்.

இந்தக் கூத்தில் என் மூட்டை முடிச்சுகள் தாமாகவே வண்டிக்குள் ஏறி ஆளுக்கொரு மூலையில் அமர்ந்து விடும். பிறகு கடைசியில் எப்படியோ முண்டியடித்துக்கொண்டு வண்டியில் தொத்திக்கொள்ளும் எனக்கு மூட்டை முடிச்சுகள் போன இடம் தெரியாது. அங்கவஸ்திரத்தில் பணத்தையும், டிக்கெட்டையும் சேர்த்து வைத்துப் போட்டிருந்த முடிச்சு போன இடமும் தெரியாது.

"இதற்காகத்தான் ஐயா, பிரயாணம் செய்யாதீர்கள், பிரயாணம் செய்யாதீர்கள் என்று நாங்கள் அடியாய் அடித்துக் கொள்ளுகிறோம்" என்று இந்திய ரயில்வே போர்டார் சொல்வது காதில் விழுகிறது.

ஆம், தாங்கள் சொல்வது தெரிகிறது. ஆனால் அதற்காக என்னைத் திண்டன் என்றும் முண்டன் என்றும் வையச் சொல்லியிருக்கிறதா என்ன? எனக்கு எடையே போதாது, நிறையச் சாப்பிட வேண்டும், இல்லாவிடில் ஒரு வருஷ காலத்தில் இவ்வுலகைவிட்டு விடை பெற்றுக்கொண்டு விடுவேன் என்று எங்கள் குடும்ப டாக்டர் சென்ற இருபது வருஷ காலமாகச் சொல்லிக் கொண்டு வருகிறார். ஆனால் இந்த ரயில்வே போர்டார் என்னவென்றால் என்னைத் திண்டன் என்று அழைக்கிறார்கள்!

நான் இரண்டாவது வகுப்பில் பிரயாணம் செய்யும் போதெல்லாம் என்னுடைய எடை 2½ டன் ஆகிவிடுகிறதாம்! சாதாரணமாக, ஒன்றாவது, இரண்டாவது வகுப்புப் பிரயாணிகள் பிரயாணம் செய்யும் பெட்டியில் 25 பேர்கள் செல்லலாமாம். இந்த 25 பேர்கள் செல்லும் இடத்தில் சாமானை ஏற்றினால் 65 டன் ஏற்றலாமாம். ஆகவே 65 டன் எடை ஏறவேண்டிய இடத்தில் 25 பேர் ஏறுவதால் நம் ஒவ்வொருவர் எடையும் சுமார் 2½ டன் ஆகி விடுகிறதாம்!

ஆனால் நல்ல வேளையாக இந்த மூன்றாம் வகுப்புப் பிரயாணிகளைப் பற்றி இந்த ரயில்வே போர்டார் ஒன்றும் சொல்லவில்லை. 65 டன் சாமான் ஏற்றக்கூடிய இடத்தில் மூன்றாம் வகுப்புப் பிரயாணிகளாக ஏற்றினால் 650 டன் ஏற்றலாம் என்னும் விஷயம் அவர்களுக்குத் தெரிந்துதான் பேசாமல் இருக்கிறார்கள் என்று நினைக்கிறேன்.

ஒவ்வொரு சமயம் இதையெல்லாம் நினைத்துப் பார்க்கும் போது, பழைய ரயில்வே போர்டாரா இப்படி மாறி விட்டார்கள் என்று இருக்கிறது.

இந்திய மக்கள் எல்லோரும் புண்யத்தை மூட்டை மூட்டையாகக் கட்டவேண்டும், அந்த மூட்டையைத் தூக்கிக் கொண்டு கூண்டோடு கைலாசம் போகவேண்டும் என்று யாராவது வெகு அக்கரையாக இருந்தார்கள் என்றால் அது இந்த ரயில்வே போர்டார்தான்.

"இப்படி உங்கள் வாழ்நாளை யெல்லாம் வீணாக்குகிறீர்களே? கட்டை இருக்கையில் சிதம்பரம் போய் நீங்கள் காணவேண்டாமோ? இரு கண் இருக்கும்போதே பார்க்க வேண்டாமோ? ஐயன் திருநடனம் காணவேண்டாமோ?" என்றெல்லாம் நம்மை உற்சாகப்படுத்திக் கழுத்தைப் பிடித்து "சிதம்பரத்துக்குப் போ" என்று தள்ளியது யார்?

"நீங்கள் காசிக்குப் போக வேண்டாமா! காசி விசுவநாதரைத் தரிசிக்க வேண்டாமா? உங்கள் பாவ மூட்டைகளை யெல்லாம் கங்கையில் கரைக்க வேண்டாமா? அந்தப் புனிதமான கங்கையில், பகீரதன் கடும் தவம் புரிந்து கைலாசத்திலிருந்து பூலோகத்துக்குக் கொண்டு வந்த கங்கையில் நீங்கள் ஸ்நானம் செய்து புண்யம் சம்பாதிக்க வேண்டாமா?" என்று நம் மனமுருக உபதேசித்து நம்மைக் காசிக்குத் துரத்தியது யார்?

வேறு யார், எல்லாம் அந்த ரயில்வே போர்டார்தான்.

அப்படித்தான் காசிக்குப் போனோம், காசியிலேயே இருக்க விட்டார்களா? காசிக்குப் போன பலன் அங்கிருந்து ராமேசுவரத்துக்குப் போனால் தான் கிடைக்கும் என்று நம்மை ராமேசுவரத்துக்குத் துரத்தினார்கள்.

இப்படியாக இந்தியாவில் உள்ள எல்லா க்ஷேத்திரங்களுக்கும், ஸ்தலங்களுக்கும் நம்மைப் போகும்படி தூண்டிக்கொண்டிருந்தார்கள்.

பஞ்சாங்கத்தில் ஏதாவது உத்ஸவங்கள் விட்டுப்போனாலும் போகும், ரயில்வே கால அட்டவணைப் புஸ்தகத்தில் விட்டுப் போகாது. ஸ்தல புராணங்கள் பௌராணிகர்களுக்கு மறந்து போனாலும் போகும், ரயில்வேக்காரர்களுக்கு மறந்துபோகாது.

அப்படி யிருந்த ரயில்வேக்காரர்கள் தான் இப்பொழுது "பிரயாணம் செய்யாதே" என்கிறார்கள்.

இதை யெல்லாம் பார்க்கும்பொழுது, "யுத்தம் எப்பொழுது முடியும்!" என்று கேட்கத் தோன்றுமா, தோன்றாதா, நீங்களே சொல்லுங்கள்!



# இடியும், குத்தும்!

வெளியூர்களில் ரயில் வண்டிப் பக்கம் எட்டிப் பார்த்தால் தான் கல்தா! ஆனால் பட்டணத்திலோ வீட்டை விட்டு வெளியே வந்தாலே கல்தா! பஸ்ஸிலும் கல்தா! டிராமிலும் கல்தா! கல்தாவைப் பொருட்படுத்தாமல் உள்ளே ஏறினாலோ இடியும், குத்தும்!

இந்த டிராம் யோக்கியதை எல்லாருக்கும் வெகு காலமாகத் தெரிந்ததுதான். புளி மூட்டை மாதிரி சவாரி ஏற்றுவதில் நம் நாட்டு ஜட்கா வண்டிக்காரர்களை யாரும் மிஞ்சமுடியாது என்று நான் வெகுகாலம், அதாவது பட்டணத்துக்கு வரும் வரை எண்ணிக் கொண்டிருந்தேன். ஆனால் அவர்களைத் தோற்கடித்து விட்டார்கள் இந்தச் சென்னை டிராம்வேக்காரர்கள்.

ஜட்கா வண்டியிலாவது குதிரையின் ஒத்துழைப்பும், சம்மதமும் இருந்தால்தான் இது சாத்தியமாகும், அளவுக்கு மீறி வண்டிக்காரன் சவாரி ஏற்றிவிட்டாலோ குதிரை சத்தியாக்கிரகம் பண்ண ஆரம்பித்துவிடும்.

ஆனால் டிராம் விஷயமாக மின்சாரம் இத்தகைய சத்தியாக்கிரகம் எதுவும் பண்ணுவதாகத் தெரியவில்லை. எத்தனை பேர் வந்தாலும் ஏற்றிக்கொள்ளுகிறது. இதனால்தானோ என்னமோ சென்னை டிராம் கண்டக்டர்கள் அத்தனை அலட்சியமாக எத்தனை கூட்டம் இருந்தாலும் சரி, பிரயாணிகளை மிதித்துக் கொண்டும், துவைத்துக் கொண்டும் இந்தக் கோடியிலிருந்து அந்தக் கோடிக்கும், அந்தக் கோடியிலிருந்து இந்தக் கோடிக்கும் போய்க்கொண்டே இருக்கிறார்கள்.

அப்படியாவது ஒரு ஆசாமியுடன் விடுகிறார்களா? கிடையாது. டிக்கெட் கொடுப்பதற்காக ஒரு கண்டக்டர், கண்டக்டர் டிக்கெட் கொடுத்தாகிவிட்டதா என்று பரிசோதிப்பதற்காக ஒரு குட்டி இன்ஸ்பெக்டர், குட்டி இன்ஸ்பெக்டர் சரியாய்ப் பரிசோதனை செய்தாரா என்று பரிசோதிப்பதற்காக ஒரு பெரிய இன்ஸ்பெக்டர் என்று இம்மாதிரி மாறி, மாறி வந்துகொண்டே இருக்கிறார்கள்.

இதனால் ஜனங்கள் படும் இடியும், மிதியும் சொல்லத் தரமன்று.

ஆனால் இதில் ஒரு வேடிக்கை பார்த்தீர்களா? கடவுள் பக்தியுள்ள ஜனங்களை இந்த இடியும், மிதியும் அதிகமாகப் பாதிப்பதே கிடையாது. காரணம், கடவுள் பக்தியுள்ள ஜனங்கள் அடிக்கடி தேர், திருவிழா முதலிய இடங்களுக்குப் போய் இதை விட அதிகப் படியான இடியும், குத்தும் பட்டிருப்பதுதான்.

ஆனால் டிராம்தான் "என்றைக்கும் போடாத மகாராஜி" ஆயிற்று. "என்றைக்கும் போடும் மூதேவி"யான பஸ் ஏன் இப்படிக் கல்தாக் கொடுத்துத் தள்ளுகிறது?

முன்னெல்லாம், அதாவது யுத்தம் ஆரம்பித்த புதிதில், பஸ்களில் வேறு யாருக்கு இடம் கிடைத்தாலும், கிடைக்கா விட்டாலும் கல்லூரி மாணவிகளுக்கு மட்டும் இடம் கிடைத்து வந்தது. அதிலும் அவர்கள் எத்தனைக் கெத்தனை புது மோஸ்தராக உடை உடுத்திக் கொண்டிருக்கிறார்களோ, அத்தனைக் கத்தனை எல்லாரும் போட்டி போட்டுக்கொண்டு, "என் இடத்தில் உட்காருங்கள், என் இடத்தில் உட்காருங்கள்" என்று இடம் கொடுத்து வந்தார்கள்.

ஸ்திரீகளைக் கண்டதும் புருஷர்கள் எழுந்து நிற்க வேண்டியது என்னும் இந்த வழக்கம் மிகவும் நல்ல வழக்கம்தான். ஆனால் சிலர், இது ஏதோ புது வழக்கம் போலவும், இது வரை நம் நாட்டில் இல்லாதது போலவும், தாங்கள் புதிதாகச் சீமையிலிருந்து இறக்குமதி செய்தது போலவும் நினைத்துக் கொள்ளுகிறார்களே, அதுதான் பிசகு.

ஸ்திரீகளைக் கண்டதும் புருஷர்கள் நடுங்குவது இன்று, நேற்று ஏற்பட்ட வழக்கம் அல்ல. உலகம் சிருஷ்டிக்கப்பட்ட அன்றிலிருந்தே மனிதன் ஸ்திரீயைக் கண்டு நடுங்கத்தான் செய்கிறான். ஆனால் நம் நாட்டில் மட்டும், "நீ அடிக்கிறாப்போல் அடி, நான் அழுகிறாப்போல் அழுகிறேன்" என்று சொல்வார்களே, அதைப்போல் வீட்டுக்கு வெளியில் மட்டும், புருஷர்களைக் கண்டு தாங்கள் பயபக்தியுடன் நடந்து கொள்வது போல் ஸ்திரீகள் பாசாங்கு செய்து கொண்டிருந்தார்கள். இப்பொழுது அந்தப் பாசாங்கும் மேலே குறிப்பிட்ட சிலரால் வழக்கொழிந்து சிதைந்து கொண்டிருக்கிறது.

ஆனால், அது என்னமோ தெரியவில்லை, ஸ்திரீகளைக் கண்டதும் எழுந்து நிற்பது என்று வழக்கம் வைத்துக் கொண்டிருக்கும் இவர்கள் எல்லா ஸ்திரீகளுக்குமே எழுந்து நிற்பதில்லை. கல்லூரி மாணவிகளைத் தவிர வேறு யாரைக் கண்டாலும்—அவர்கள் கிழவிகளாக இருந்தாலும் சரி, கைக்குழந்தைக் காரிகளாக இருந்தாலும் சரி—இவர்களுக்கு ஸ்திரீகளாகவே தென்படுவதில்லை.

இப்பொழுது யுத்தம் வந்தாலும் வந்தது, கல்லூரி மாணவிகளுக்கும் கல்தாதான், மற்ற எல்லாருக்கும் கல்தாதான்.

சென்னையில் உள்ள பஸ்களை இப்பொழுது இரண்டு விதமாகப் பிரிக்கலாம்—கரி பஸ்கள், பெட்ரோல் பஸ்கள்.

இந்தக் கரி பஸ்கள் இருக்கின்றனவே, இவற்றுக்கு இத்தனை பொருத்தமான பெயர் எப்படி ஏற்பட்டது என்று நாம் எல்லாரும் அதிசயிக்கத்தான் வேண்டும். தன் முகத்தில் கரியைப் பூசிக் கொண்டிருப்பது போதாது என்று, நல்ல சமயம் பார்த்து நம் முகத்திலும் கரியைப் பூசி விடும். திடு திப்பென்று, நட்ட நடு ரஸ்தாவில் சொல்லாமல், கொள்ளாமல் நின்றுவிடும். "வண்டி படகில் ஏறும், படகு வண்டியில் ஏறும்" என்ற பழைய வசனம் மறைந்துபோய், "பஸ் நம்மைத் தள்ளும், நாம் பஸ்ஸைத் தள்ளுவோம்" என்ற புது வசனம் ஏற்படுவதற்கே இந்தக் கரி பஸ்தான் காரணம்.

ஆகவே அவசர வேலை இல்லாதவர்கள், பஸ்ஸைத் தள்ளுவதின் மூலமாவது தேகாப்பியாசம் பெற விரும்புகிறவர்கள், முகத்தில் கரியைப் பூசிக்கொள்ள விரும்புகிறவர்கள், குளிர் காய விரும்புகிறவர்கள், ஆகிய இத்தகையவர்கள்தான் கரி பஸ்ஸில் செல்லலாம்.

இந்த பெட்ரோல் பஸ்கள் இருக்கின்றனவே, அவற்றில் பிரயாணம் செய்கிறவர்கள், அதிலும் நின்றுகொண்டு பிரயாணம் செய்கிறவர்கள், வெகு ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்.

இந்த பெட்ரோல் பஸ்கள் போன ஜன்மத்தில் ரஷ்யாவில் பிறந்தனவோ, என்னவோ எல்லாம் சமதர்மக் கொள்கை யுடையனவாக இருக்கின்றன. பாதிப் பேர் உட்கார்ந்து, பாதிப் பேர் நிற்பது அவற்றுக்குப் பிடிப்பதே இல்லை. முடிந்த போதெல்லாம், அவை நின்று கொண்டிருப்பவர்களைப் பக்கத்தில் உட்கார்ந்திருப்பவர்கள் மடி மீது உட்கார்த்தி வைக்கப் பார்க்கின்றன.

என் கிரகசாரம், நான் இந்தப் பஸ்ஸில் தொத்திக் கொள்ளும் போதெல்லாம் கடைசியில், அதாவது ஸ்திரீகள் உட்கார்ந்திருக்கும் ஸீட்டுக்குப் பக்கத்தில்தான் நிற்பதற்கு இடம் கிடைக்கிறது. அப்பொழுது பிரயாணம் முழுவதும் எனக்குத் திகில்தான்! டிரைவர் சடாரென்று பிரேக் போட்டு பஸ்ஸை நிறுத்தும் போதும், ஒரு ரஸ்தாவிலிருந்து, இன்னொரு ரஸ்தாவுக்குச் சடாரென்று திருப்பும் பொழுதும், "ஐயோ, பக்கத்தில் உள்ள அந்த அம்மாள் மீது விழுந்து மானத்தைப் போக்கிக் கொள்ளாமல் இருக்க வேண்டுமே" என்று நடுங்கிக் கொண்டே போவேன்.

ஆனால் இந்த இரண்டு வித பஸ்களும் ஜனங்களை மணிக் கணக்காக பஸ் ஸ்டாண்டில் நிறுத்தி வைப்பதில் ஒன்றுக்கொன்று சளைக்காதவை. "பன்னிரண்டு நிமிஷங்களுக்கு ஒரு தடவை பஸ் வரும்" என்று இரண்டுவித பஸ்களிலும் எழுதி ஒட்டியிருக்கிறார்கள். ஆனால் அந்தப் பன்னிரண்டு நிமிஷம் என்பது எந்தக் கடிகாரத்தைக் கொண்டோ? ஒரு வேளை "பன்னிரண்டு மணிக்கு ஒரு தடவை" என்பதுதான் அச்சுப் பிழையினால் பன்னிரண்டு நிமிஷம் என்று ஆகிவிட்டதோ, என்னமோ!

ஆகக்கூடி, இந்தப் பஸ்களில் நாம் இடியும் குத்தும் படும் போதெல்லாம் யுத்த காலத்துக்கு முந்திய பஸ்கள் ஞாபகம் வந்து கொண்டே இருக்கிறது. ஜட்கா வண்டிக்காரர்கள், "யாரையா ஒரு ஆள், யாரையா ஒரு ஆள்" என்று ஆள் தேடியது போலவே பஸ்களும் ஒரு காலத்தில் தேடிக் கொண்டிருந்தன. பஸ்ஸில் 23 ஆள் என்று போட்டிருந்தால் 23 ஆட்களுக்கு மேல் ஏற்ற மாட்டார்கள். யாராவது சற்று ஸ்தூலமான ஆசாமி ஏறினால் அவரை இரண்டு பேர் என்று கணக்கு வைத்துக்கொண்டு 22 பேர்தான் ஏற்றுவார்கள். உட்கார்ந்து, உட்கார்ந்து கால் வலித்தால், நாமும் கண்டக்டரைப்போல் நடுவில் உள்ள இடத்தில் மேலும் கீழும் உலாவலாம்.

ஒரு காலத்தில் இவ்வளவு சௌகரியமாக இருந்த பஸ்தான், இப்பொழுது இந்த யுத்தம் வரப்போக நமக்கு இடியும், குத்தும் கொடுக்க ஆரம்பித்து விட்டன! இப்படி நாம் இடியும், குத்தும் வாங்கக் காரணமான இந்த யுத்தம் எப்பொழுது முடியும் என்று எல்லாரும் கேட்பது இயற்கையே அல்லவா?

# கடன் வாங்கியும் பட்டினி

"கடன் வாங்கியும் பட்டினி" என்று ஒரு பழமொழி நம் நாட்டில் வெகுகாலமாக வழங்கி வருகிறது. ஆனால் இதுவரையில், அதாவது இந்த யுத்தம் ஆரம்பிக்கும் வரையில் கடன் வாங்கினவர் யாரும் பட்டினி கிடந்து நான் பார்த்ததில்லை. ஊரான் பணம் கையில் இருக்கும் போது அதைச் செலவழித்துக்கொண்டு குஷியாக இருக்காமல் பட்டினி கிடக்க அவர்களுக்குப் பைத்தியமா, என்ன?

கடன் கொடுத்தவன் பட்டினி கிடப்பதைத்தான் நான் பார்த்திருக்கிறேன். "ஐயோ, கையில் இருக்கும் பணத்தை யெல்லாம் கடனுகக் கொடுத்துவிட்டோமே! கடன் வாங்கினவன் திருப்பிக் கொடுக்கும் வழியாய்க் காணுமே! வேறு யாரிடமாவது கடன் வாங்குவோம் என்றால், கடன் கொடுத்து கடன் கொடுத்து, கடன் கொடுக்கத் தெரிகிறதே யொழிய, கடன் வாங்கத் தெரியவில்லையே! கடன் வாங்குவதே ஒரு தனிக் கலை போலிருக்கிறதே!" என்று கடன் கொடுத்தவர்கள் அனலிடைப்பட்ட புழுப்போல் தவிப்பதைத் தான் நான் பார்த்திருக்கிறேன்.

ஆனால் இந்த யுத்தம் வந்தாலும் வந்தது, ஜனங்கள் கடன் வாங்கியும் பட்டினி கிடக்க ஆரம்பித்துவிட்டார்கள். சம்பளம் உயர்ந்தும் போதவில்லை என்று தவிக்க ஆரம்பித்துவிட்டார்கள்.

"வரவுக்கு மிஞ்சி செலவு செய்யாதே. உன் சம்பளத்துக் குள்ளேயே உன் குடித்தனத்தை நடத்து" என்று எனக்கு வரவும், சம்பளமும், குடித்தனமும் ஏற்படாத பள்ளிக்கூடத்து நாட்களி லிருந்தே உபதேசம்!

எங்கே இந்த உபதேசத்தை நான் மறந்துவிடப் போகிறேனே என்று இதற்கென்றே கீழ்க்கண்ட பாட்டை என்னை நெட்டுருப் பண்ணி ஒப்பிக்கும்படி என் வாத்தியார் என்னை எத்தனையோ தடவை பிரம்பால் அடித்திருக்கிறார். எத்தனையோ தடவை பெஞ்சி மீது நிறுத்தி வைத்திருக்கிறார். எத்தனையோ தடவை இம்போசிஷன்' எழுதும்படி பயமுறுத்தி யிருக்கிறார்.

ஆனமுதலில் அதிகஞ் செலவானல்
மானமழிந்து மதிகெட்டுப்—போனதிசை
எல்லார்க்குங் கள்ளனய் ஏழ்பிறப்புந் தீயனய்
நல்லார்க்கும் பொல்லானும் நாடு.

என்ற அந்தப் பாட்டு எனக்கு இன்னும் ஞாபகம் இருக்கிறது.

ஆனல் என்ன ஞாபகம் இருந்து என்ன பயன்? நான் சம்பாதிக்க ஆரம்பித்ததிலிருந்து ஆன முதலில் அதிகம் தான் செலவழித்துக்கொண்டு வருகிறேன். வரவுக்கு மிஞ்சி வீட்டில் செலவு ஆகிக்கொண்டு வருகிறது.

இருந்தும் அதற்காக நான் இதுவரை மானம் இழந்துபோனதாகவோ, மதிகெட்டுப் போனதாகவோ தெரியவில்லை. கிட்டத்தட்ட எல்லாருமே இப்படி ஆனமுதலில் அதிகம் செலவழித்துக்கொண்டிருக்கும்போது, மானத்தை எப்படி இழக்க முடியும்? மதி எப்படிக் கெட முடியும்? சம்பந்தியும் சம்பந்தியும் சத்திரத்தில் சந்தித்தால் பேச்சேது, ஏச்சேது?

என்ன கேட்கிறீர்கள்?...எப்படி குடித்தனம் பண்ணினேன் என்று தானே கேட்கிறீர்கள்? எல்லாம் கடன் வாங்கித்தான்.

முன்னெல்லாம் கடன் வாங்குவதைப்பற்றி நான் கவலைப்பட்டதே கிடையாது. நான் என்ன, யாருமே கவலைப்பட்டது கிடையாது. ஏனெனில் கடன் வாங்கினல் பட்டினி கிடக்காமல் குஷியாக இருக்க முடிந்தது.

யுத்தத்துக்கு முன்பு கிட்டத்தட்ட எல்லாருக்கும் சொல்ப சம்பளந்தான் கிடைத்து வந்தது. ஆகவே கடன் வாங்குவதைப்பற்றி யாருமே கவலைப்பட்டதாகத் தெரியவில்லை.

கடன் வாங்கும் போதெல்லாம் காரியாலய முதலாளியை நிந்தித்துக்கொண்டே கடன் வாங்குவோம். "இப்படி நாயாய் உழைக்கிறோம். நமக்குச் சரியாக சம்பளம் தருகிருனு பார்" என்று முதலாளியை வைதுகொண்டே கடன் வாங்குவோம். முதலாளியை வைவதற்கு இப்படியாவது ஒரு நல்ல சந்தர்ப்பம் கிடைக்கிறதே என்று அதற்காகவே கடன் வாங்கினவர்களும் உண்டு.

ஆனல் யுத்தம் வந்தாலும் வந்தது, நாம் எல்லார் பாடும் இருதலைக்கொள்ளி எறும்புபோல் ஆகிவிட்டது.

திடீரென்று எல்லாருக்கும் சம்பளம் உயர்ந்தது. ஒன்றுக்கு இரண்டு பங்கு கூட உயர்ந்தது. சம்பளத்துடன் கூட யுத்தப்படி கிடைத்தது. அதுவும் உயர்ந்தது.

ஆனால் சம்பளம் என்ன உயர்ந்தும் வழக்கம்போல் கடன் வாங்கத்தான் வேண்டியிருக்கிறது. ஆனால் முன்னைப்போல் குஷியாக இருக்க முடிகிறதா? கிடையாது. 'கடன் வாங்கியும் பட்டினி' என்று சொல்வார்களே, அந்த நிலைமைதான் நிலவி வருகிறது.

யுத்த நிலைமையைக் கருதி, சிப்பந்திகளின் சம்பளத்தை இரட்டிக்கலாமா என்று முதலாளி யோசித்து, யோசித்து, கடைசியாக ஒரு முடிவுக்கு வருவதற்குள் சாமான்களின் விலை கிடு, கிடு என்று உயர்ந்துவிட்டது.

நாம் குடியிருக்கும் வீடுகளின் சொந்தக்காரர்கள், மெள்ள, மெள்ள, வீட்டு வாடகையை உயர்த்திக்கொண்டே போய்விட்டார்கள்; இன்னும் உயர்த்திக்கொண்டிருக்கிறார்கள்.

திடீர், திடீர் என்று வீட்டுக்காரர்களுக்குத் தங்கள் வீட்டின் மீது மோகம் விழுந்து விடுகிறது இருந்தாப்போலிருந்து "எங்கள் வீட்டிற்கு நாங்கள் குடிவரப் போகிறோம். ஆகையால் தாங்கள் இன்னும் ஒரு மாத காலத்துக்குள் வீட்டைக் காலி பண்ணிக் கொடுக்கவேண்டும்" என்று வீட்டுக்காரர் நோட்டீசு கொடுக்கிறார்.

சில அசடுகள், உண்மையிலேயே வீட்டுக்காரருக்கு வீடு தேவையாய் இருக்கிறது என்று நினைத்துக்கொண்டு வீட்டைக் காலி பண்ணிவிட்டு இப்பொழுது நடுச்சந்தியில் நிற்கிறார்கள்.

"வாடகையை உயர்த்தப் போகிறோம்" என்னும் விஷயத்தைத் தான் வீட்டுக்காரர்கள் அத்தனை தந்திரமாக தெரிவித்திருக்கிறார்கள் என்பது சிலருக்குத்தான் தெரிகிறது. திடீரென்று வாடகையை உயர்த்தினால் சர்க்கார் ஆக்ஷேபிப்பார்கள் என்று இந்த தந்திரத்தைக் கையாள ஆரம்பித்திருக்கிறார்கள் சிலர்.

என் வீட்டுக்காரர் சென்ற ஒரு வருஷ காலத்துக்குள் எட்டுத தடவை தாம் "குடிவர உத்தேசித்தார்" என்றால் எத்தனை தடவை வாடகையை உயர்த்தியிருப்பார் என்று நீங்களே எண்ணிப் பாருங்களேன்!

வீட்டு வாடகை விஷயம்தான் இப்படி என்றால் பால்காரன் விஷயம் கேட்கவே வேண்டியதில்லை. தான் எத்தனைக் கெத்தனை தண்ணீர் அதிகமாக ஊற்ற ஆரம்பித்திருக்கிறானோ, அத்தனைக் கத்தனை விலையையும் உயர்த்த ஆரம்பித்து விட்டான்.

கறிகாய்கள் விஷயமோ, வீசை எத்தனை அணா என்று கேட்ட இடத்தில் எத்தனை ரூபாய் என்று கேட்கவேண்டி யிருக்கிறது.

இப்படி எல்லா சாமான்களின் விலையும் நான்கு மடங்கும், ஐந்து மடங்கும், பத்து மடங்குமாக உயர்ந்திருக்கையில், சம்பளம் மட்டும் எங்கேயும் இரண்டு மடங்குக்கு மேல் உயர்ந்ததாகத் தெரியவில்லை. ஆகவே வழக்கம்போல் கடன் வாங்கத்தான் வேண்டி யிருக்கிறது. சாமான்களின் விலை ஏகத் தாராக உயர்ந் திருப்பதால் கடன் வாங்கியும் பட்டினி கிடக்கவேண்டி யிருக் கிறது.

அப்படியாவது தைரியமாக முதலாளிகளைப் பார்த்து, "சாமான் பண்டங்களின் விலை ஐந்து மடங்காக உயர்ந்து விட் டதே. சம்பளத்தையும் ஐந்து மடங்காக உயர்த்துங்கள்" என்று கேட்க முடிகிறதா? கிடையாது. அத்தனைக்கும் சரசு தினம் என் னோடு சண்டை போட்டுக்கொண்டு தான் இருக்கிறாள். "இப்படி கடன் வாங்கிக்கொண்டே போனால் குடித்தனம் எப்படி நடக் கிறது என்று நினைக்கிறீர்கள்? ஒன்று மில்லாததற்கெல்லாம் என் னோடு கச்சை கட்டிக்கொண்டு சண்டைக்கு வந்து விடுகிறீர்களே! சாமான் பண்டங்கள் எத்தனை மடங்கு உயர்ந்திருக்கிறதோ அத் தனை மடங்கு சம்பளத்தையும் உயர்த்தத்தான் வேண்டும் என்று உங்கள் காரியாலய முதலாளியோடு சண்டை போடுவதற்கு என்ன?" என்று கேட்கிறாள்.

சரசு இப்படிக் கேட்கும்போதெல்லாம் எனக்கு வெட்கமாய் இருக்கிறது. நானும் எத்தனையோ தடவைகள் முதலாளியோடு சண்டை போடவேண்டும் என்றுதான் பார்த்தேன். என்னமோ தைரியம் வரவில்லை.

முன்னெல்லாம் ரூபாய் ஒன்றும், இரண்டும், ஐந்தும், பத்து மாகவே சம்பள உயர்வு கொடுத்து முதலாளிகள் நம்மைப் பழக்கி விட்ட படியால், இப்பொழுது சம்பளத்தை இரண்டு மடங்கு

ஆக்கியிருக்கிறதே ஒரு பெரிய காரியம்போல் தோன்றுகிறது. மேற்கொண்டு சம்பள உயர்வு கேட்க யோசனையாய் இருக்கிறது. தைரியம் வரவில்லை.

ஆகக்கூடி இந்த யுத்தம் வரப்போக எல்லாருக்குமே, அதாவது சம்பளம் வாங்கிப் பிழைக்கும் எல்லாருக்குமே ஒரு பெரிய தர்ம சங்கடம் ஏற்பட்டுவிட்டது. காரியாலயத்திலோ மேற்கொண்டு சம்பள உயர்வு கேட்பதற்கு யோசனையாய் இருக்கிறது. கேட்டாலும் இப்பொழுதுதானே சம்பளத்தை உயர்த்தினோம் என்கிறார்கள். ஆனால் சம்பளமோ நம் செலவுக்குத் துளிக்கூடப் போதவில்லை. பழைய சம்பளம் பற்றின அளவுகூடப் பற்றவில்லை.

இந்த நிலைமையில் "யுத்தம் எப்பொழுது முடியும்!" என்று கேட்கத் தோன்றுமா, தோன்றாதா, நீங்களே சொல்லுங்கள்!



# பிளாக் மார்க்கட்

"நானும் கொஞ்ச காலமாகப் பார்த்துக்கொண்டு வருகிறேன். என்னைக் கட்டோடு மறந்து விட்டீர்களே! என்னைப் பற்றி ஒரு கட்டுரையிலாவது ஒரு வார்த்தை எழுதுவீர்களோ என்று பார்த்தால் ஒன்றிலும் காணுமே" என்று நேற்று அடுத்த வீட்டு அண்ணுசாமி அய்யர் என்னிடம் வருத்தப்பட்டுக் கொண்டார்.

உண்மையில், நான் அடுத்த வீட்டு அண்ணுசாமி அய்யரை மறக்கவே முடியாதபடி செய்து விட்டது இந்த யுத்தம். சுயராஜ்யத்தை எடுத்துக் கொண்டு வராத இந்த யுத்தம், அதற்குப் பதில் பிளாக் மார்க்கட்டை (கள்ள மார்க்கட்டை) எடுத்துக்கொண்டு வந்தாலும் வந்தது, நான் அடுத்த வீட்டு அண்ணுசாமி அய்யரை மறக்கவே முடியாதபடி ஆகிவிட்டது.

நான் அண்ணுசாமி அய்யரைப் பார்த்துப் பழித்ததுபோய் இப்பொழுது அவர் என்னைப் பார்த்துப் பழிக்கும்படியான நிலைமை வந்து விட்டது! அது போதாது என்று அவருக்கு வக்காலத்து வாங்கிக்கொண்டு அவர் மனைவியும், அது போதாதென்று சரசுவும் சேர்ந்து பழிக்கும்படியான நிலைமை வந்துவிட்டது!

முன்பெல்லாம் அடுத்த வீட்டு அண்ணுசாமி அய்யரைக் கண்டால் எனக்கு ஒரு விதத்தில் எளக்காரம். கடையில் போய் ஏதாவது சாமான் வாங்கிக்கொண்டு வா என்றால் நான் என்ன பண்ணுவேன் தெரியுமா?

"காசிக்குப் போனேன், காவடி கொணர்ந்தேன்" என்பது போல் ஏதோ ஒரு கடைக்குள் நுழைவேன். எனக்கு வேண்டிய சாமானைக் கேட்பேன். அவன் கேட்ட பணத்தைக் கொடுப்பேன். சாமானைத் தூக்கிக்கொண்டு வீட்டுக்குத் திரும்புவேன். (வீட்டுக்குத் திரும்புவதுடன் நிறுத்திக் கொள்கிறேன். நான் சாமான் வாங்கிக்கொண்டு வரும் லட்சணத்தைப் பற்றி சரசு சாங்கோபாங்கமாக எடுத்துச் சொல்வதை உங்களிடம் சொல்லி என் மானத்தை நானே போக்கிக்கொள்ள விரும்பவில்லை.)

ஆனால் அண்ணாசாமி அய்யர் அப்படியில்லை. ஒரு சின்ன சாமான் வாங்குவதற்கு ஊரில் இருக்கிற எல்லாக் கடைகளுக்கும் ஒவ்வொரு கடையாக நுழைந்து புறப்படுவார். ஒரு கடைக்குப் பத்துக் கடையாக விசாரித்தால் தான் அவருக்குச் சாமான் வாங்கினதுபோல் இருக்கும். திருப்தி ஏற்படும்.

யுத்தம் வருவதற்கு முன்பு, இதைக் குறித்து நான் அண்ணா சாமி அய்யரைப் பழித்துக் கொண்டிருந்தேன். ஆனால் இப்பொழுதோ, ஒவ்வொரு சாமானுக்கும் அண்ணாசாமி அய்யர் பத்துக் கடை நுழைந்தால் நான் நூறு கடை நுழைகிறேன். அவர் ஒவ்வொரு கடையிலும் கால்மணி தங்கினால் நான் முக்கால் மணி தங்குகிறேன். அவருக்கோ ஒரு கடைக்குப் பத்துக் கடையாக நுழைந்தால் திருப்தி ஏற்பட்டது. எனக்கோ நூறு கடை நுழைந்தும் திருப்தி ஏற்படுகிறதில்லை. காரணம், சாமான்கள் எல்லாம் பிளாக் மார்க்கட்டுக்குப் போய்விட்டதுதான்.

விஷயம் தெரியாதவர்கள் சிலர் சாமான்கள் விற்பதற்குச் சாதாரண மார்க்கட் என்று ஒன்று இருக்கிறதே, அது போதாதா, பிளாக் மார்க்கட் என்று ஒன்று தனியாக ஏற்பட வேண்டுமா என்று கேட்கிறார்கள். பிளாக் மார்க்கட் என்றால் ஏதோ தனியாகப் போர்டு மாட்டியிருப்பதுபோல் இவர்கள் நினைத்துக் கொண்டு பேசுகிறார்கள்.

ஏன், நான்கூட முதலில் அப்படித்தான் நினைத்துக் கொண்டிருந்தேன். என் புஸ்தகம் ஒன்று அச்சிடுவதற்காக காகிதத்துக் காகத் திண்டாடிக் கொண்டிருந்தேன். யார் யாரையோ கேட்டுப் பார்த்தேன். பிரயோஜனமில்லை.

கடைசியில் ஒருவர் சொன்னார் "ஏன் ஸார், பிளாக் மார்க்கட்டில் கேட்டுப் பார்ப்பதுதானே?" என்றார்.

"பிளாக் மார்க்கட்டா? அது எங்கிருக்கிறது. தெரியாதே" என்றேன்.

"சரியாப் போச்சு! இது தெரிந்துகொள்ளாமலா புஸ்தகம் அச்சிட ஆரம்பித்தீர்கள்? நான் காட்டுகிறேன்" என்று என்னை அழைத்துக்கொண்டு போனார்.

என்ன ஆச்சரியம்! நான் முதல் நாள் தான் "காகிதம் இருக்கா?" என்று ஒரு தடவைக்கு நான்கு தடவையாகக் கேட்டு,

அவர்கள் நான்கு தடவைக்கு நாற்பது தடவையாக "இல்லை" யென்று சொன்ன அதே கடைக்குத்தான் அழைத்துக்கொண்டு போனார்.

பிளாக் மார்க்கட் என்று யாரும் தனிக்கடை வைத்துக்கொண்டிருக்கவில்லை. சாதாரணக் கடை என்று நாம் நினைத்துக் கொள்ளும் கடைதான் நடுவில், நடுவில் ஆள், சந்தர்ப்பம், சமயம் இவற்றைப் பார்த்துக்கொண்டு பிளாக் மார்க்கட் கடையாக மாறுகிறது.

நான் காலேஜில் வாசித்துக்கொண்டிருந்த காலையில் ஷேக்ஸ்பியர் நாடகம் நடித்துக் காண்பிப்பதற்காகச் சில நடிகர்கள் எங்கள் காலேஜுக்கு வருவதுண்டு. அதில் சில நடிகர்கள் இரண்டு பேர் பேசும் பாகத்தைத் தாங்கள் ஒருவரே பேசிக் காண்பிப்பார்கள்.

வெனிஸ் வர்த்தகனும், அவனுக்குக் கடன் கொடுத்த ஷைலாக் என்னும் யூதனும் பேசும் கட்டத்தை நடித்துக் காண்பிக்க வேண்டியிருக்கிறது என்று வைத்துக்கொள்ளுங்கள். அப்பொழுது நடிகர் மேடையில் இந்த மூலையிலிருந்து அந்த மூலைக்கும், அந்த மூலையிலிருந்து இந்த மூலைக்கும் மாறிக்கொண்டே யிருப்பார். இந்த மூலையிலிருந்து பேசும்போது வெனிஸ் வர்த்தகன் பேசுகிறான் என்று அர்த்தம். அந்த மூலையிலிருந்து பேசும்போது ஷைலாக் பேசுவதாக அர்த்தம்.

இதைப் போலத்தான் பிளாக் மார்க்கட்டும். ஒன்றுக்கு மூன்றாக லாபம் கிடைத்தால் போதும் என்றால் சாதாரணக் கடையாக இருக்கும். ஒன்றுக்கு மூன்று போதாது, முப்பது வேண்டும் என்றால் அது பிளாக் மார்க்கட் கடையாக மாறிவிடும். சாதாரணமாக நம்மைப்போன்ற ஆசாமிகள் போய்க் கேட்டால் பிளாக் மார்க்கட் கடையாக இருக்கும். ஆனால் யாராவது போலீஸ் அதிகாரிகள் போய்க் கேட்டால் அது சடாரென்று சாதாரண மார்க்கட் கடையாக மாறிவிடும்.

நாம் உள்ளே நுழைந்ததும், நுழையாததுமாக, "எங்கப்பா குதிருக்குள் இல்லை" என்பதுபோல் "இல்லை" என்ற சப்தம் வந்தாலே அது பிளாக்மார்க்கட் என்று நிச்சயம் பண்ணிவிடலாம்.

பிளாக் மார்க்கட் என்றால் விலைதானே ஏகத் தாராகக் கேட்கிறார்கள், சாமான் நிச்சயமாகக் கிடைக்கும் என்று நினைத்தீர்களோ, ஏமாந்துதான் போவீர்கள். பிளாக் மார்க்கட்டில் சாமான் வாங்குவதற்குக் கையில் பணம் மாத்திரம் இருந்தால் போதாது.

சில பெரிய சங்கங்களில் ஒரு வழக்கம் உண்டு. யாராவது சங்கத்தில் அங்கத்தினராகச் சேரவேண்டும் என்றால் இன்னொரு அங்கத்தினர் அவர்களை அறிமுகம் செய்துவைக்க வேண்டும். அதைப் போலவே பிளாக் மார்க்கட்டிலும், அந்த மார்க்கட்டில் முன்கூட்டியே அனுபவம் உள்ள யாராவது அறிமுகம் செய்து வைத்தால்தான் சாமான்கள் வாங்கமுடியும்.

பிளாக் மார்க்கட்டில் சாமான்கள் விற்பதைத் தடுப்பதற்காகச் சர்க்கார் என்னென்னமோ நூற்றெட்டு சட்டம் போட்டிருக்கிறார்கள். ஒவ்வொரு கடையிலும் ஒவ்வொரு சாமான் என்னென்ன விலை விற்கிறது என்று விலை ஜாபிதா ஒன்று எல்லாருக்கும் தெரியும்படியாக எழுதி வைக்கவேண்டும் என்று உத்தரவிட்டிருக்கிறார்கள்.

அதன்படியே எத்தனையோ கடைகளில் விலை ஜாபிதா தொங்குவதைப் பார்த்திருக்கிறேன். ஆனால் ஜாபிதாவில் கண்டுள்ள சாமான்களைத்தான் காணோம். எத்தனைக்கெத்தனை ஜாபிதா எல்லாரும் பார்க்கும்படியான இடத்தில் இருக்கிறதோ, அத்தனைக்கத்தனை கடையில் சாமான்கள் இருக்காது. கேட்டால், "எல்லாம் ஆகிவிட்டதே, ஸார்" என்பார்.

என்ன பணம் ஆனாலும் சரி, சாமான் முக்கியமாக வேண்டும் என்று இருக்கிறவர்கள் இந்தப் பதிலைக் கேட்டு உடனே, வெளியே போய்விட மாட்டார்கள். ஏனெனில் வேறு எந்தக் கடைக்குப் போனாலும் இதே பதில்தான் கிடைக்கும்.

ஆகவே, அங்கேயே நின்று விடுவார்கள். பக்கத்தில் இருக்கும் நாற்காலியை இழுத்துப் போட்டுக்கொண்டு உட்கார்ந்தும் விடுவார்கள்.

இதிலிருந்து கடைக்காரர், "சரி, பிளாக் மார்க்கட் விலை கொடுக்க ஆசாமி தயாராய்த்தான் இருக்கிறார்" என்று தெரிந்து கொள்வார். ஆனால் கடைக்காரருக்கு இன்னொரு சந்தேகம்!

ஆசாமி நிஜமாகவே சாமானைத் தேடி வந்தவர்தானு, இல்லை தம் கடை பிளாக் மார்க்கெட் கடையா என்று கண்டு பிடித்துப் போலீசாருக்குப் பிடித்துக் கொடுப்பதற்காக வந்தவரா என்று தெரியவேண்டும் அல்லவா?

அதற்காக லேசில் சாமான் இருக்கிறது என்று ஒப்புக் கொள்ளமாட்டார். நம்மிடம் அரை மணி நேரம் பேச்சுக் கொடுத்து, நம் குலம், கோத்திரம், உத்தியோகம், சம்பளம் முதலிய பல விஷயங்களைத் தெரிந்துகொண்டு, நம்மை நம்பலாமா, வேண்டாமா என்ற முடிவுக்கு வருவார்.

கடைசியில் நம்பலாம் என்ற முடிவுக்கு வந்தாலும், "சாமான் இருக்கிறது" என்று உடனே கொடுத்துவிடுவார் என்று நினைக்கிறீர்களா? மாட்டார். "சாமான் என்னிடம் இல்லை. பிளாக் மார்க்கட்டிலிருந்து வேண்டுமானுல் வரவழைத்துத் தருகிறேன்" என்பார்.

"சரி, வாருங்கள் பிளாக் மார்க்கட்டுக்குப் போவோம்" என்று நீங்கள் எழுந்தால், "சரியாய்ப் போச்சு! உங்களைப் பார்த்தாலே இல்லை என்று சொல்லி விடுவான். நான் நம்ப பையனை அனுப்பி வரவழைக்கிறேன்" என்று பையனை அனுப்புவார். பையன் அந்தக் கடையின் பின்புறத்திலேயே ஒரு கால் மணி நேரம் உட்கார்ந்துவிட்டுக் கடைசியில் அங்கிருந்தே சாமானை எடுத்துக்கொண்டு வருவான்.

பிளாக் மார்க்கெட்டில் சாமான்கள் வாங்குவதில் இத்தனை தொல்லைகள் இருக்கின்றன.

இது தெரியாமல் சரசு இந்த சமயம் பார்த்து ஒரு பெண்ணைப் பெற்று வைத்துக்கொண்டிருக்கிருள். பெண்ணு, பிறந்ததிலிருந்து 'குளுகோஸ் டீ'யைக் கொண்டா, 'க்ரைப்வாட்ட'ரைக் கொண்டா என்று எந்த சாமான்கள் கிடைக்காதோ, அந்த சாமான்களாகப் பார்த்துக் "கொண்டா" என்று சண்டித்தனம் பிடிக்கிறது, நானும் குழந்தை பிறந்ததிலிருந்து 'குளுகோஸ் டீ' இருக்கிறதா. 'கிரைப் வாட்டர்' இருக்கிறதா என்று ஒவ்வொரு கடையாக நுழைந்து புறப்பட்டுக் கொண்டிருக்கிறேன்.

இப்படி நானும், என்னைப்போல் இன்னும் எத்தனையோ பேரும் அவஸ்தைப் பட்டுக்கொண்டிருக்கிருேம். இப்படி அவஸ்தைப் படும்போது "யுத்தம் எப்பொழுது முடியும்?" என்று கேட்கத் தோன்றுமா, தோன்ருதா, நீங்களே சொல்லுங்கள்!

# வேண்டாம் ஐயா, வேண்டாம்!

"வேண்டாம் ஐயா, வேண்டாம்! இன்னும் ஏழேழு ஜன்மத்துக்கு வேண்டாம்!"

"ஏன் ஸார் வேண்டாம் என்கிறீர்கள்? பரவாயில்லை ஸார்! வாங்கிக்கொள்ளுங்கள் ஸார்!"

"ஊஹூம், வேண்டாம் ஐயா, வேண்டாம். இன்னும் ஏழேழு ஜன்மத்துக்கு வேண்டாம்."

"அதெல்லாம் முடியாது. நீங்கள் வாங்கிக்கொண்டுதான் ஆகவேண்டும்" என்று அடுத்த வீட்டு அண்ணுசாமி அய்யர் தம் கையில் வைத்திருந்த இலவச சினிமா டிக்கட்டை என் கையில் வைக்கப் பார்த்தார்.

எங்கே இலவச டிக்கட்டைத் தலையில் கட்டிவிடப் போகிறாரோ என்று பயந்துகொண்டு அங்கிருந்து ஓட்டம் எடுத்தேன். தெனாலிராமன் பூனை கூடப் பாலைக் கண்டு அத்தனை வேகமாக ஓட்டம் பிடித்திருக்காது. ஆனால் அடுத்த வீட்டு அண்ணுசாமி அய்யரா விடுபவர்? அவரும் என்னைப் பின் தொடர்ந்தார். ஓட்டப் பந்தயத்தில் நான் தான் ஜெயித்தேன் என்று சொல்ல வேண்டியதில்லை. ஓட்டப் பந்தயத்தில் சரசு எனக்கு அளித்திருக்கும் பயிற்சி அண்ணுசாமி அய்யரின் மனைவி அவருக்கு அளித்ததில்லை.

"ஓட்டப் பந்தயத்தில் சரசு அளித்த பயிற்சி" என்றதும் சரசுவைக் கண்டு பயந்து ஓடி, ஓடித்தான் நான் வேகமாக ஓடக் கற்றுக்கொண்டிருக்கிறேனோ என்று நினைத்துவிடாதீர்கள். சரசுவைக் கண்டு பயந்து வீட்டுக்குள்ளே தானே ஓடி ஒளிய முடியும்? வீட்டுக்கு வெளியே ஓடி வரமுடியுமா? வந்தால் அடுத்த வீட்டு அண்ணுசாமி அய்யர் கண்டு சிரிக்கமாட்டாரா!

சரசு எனக்கு அளித்த பயிற்சியே வேறு. இஷ்டப்பட்டால் உங்கள் மனைவியைக்கூட உங்களுக்கு இந்தப் பயிற்சியை அளிக்கும்படி நீங்கள் கேட்டுக்கொள்ளலாம்.

காரியாலயம் போவதற்காக நான் தினம் காலை பத்து மணி வண்டியைப் பிடிக்கவேண்டியிருக்கிறது. பத்து மணி வண்டியைப் பிடிக்கும் எனக்கு தினம் 9-55 க்குத் தான் சாப்பாடு போடுவது என்று சரசு வைத்திருக்கிருள். ஆகவே ஐந்து நிமிஷத்துக்குள் விடு, விடென்று சாப்பிட்டு, குடு, குடு என்று ஓடி, கடு, கடு என்று முகத்தை வைத்துக்கொண்டு, கிறு, கிறு என்று ஓடிக் கொண்டிருக்கும் ரயில் வண்டியைப் பிடிப்பேன். ரயில் வண்டியைப் பிடிப்பதற்காக ஓடி, ஓடி, நான் இப்பொழுது ஓட்டப் பந்தயத்தில் கெட்டிக்காரனுகிவிட்டேன்.

சாதாரணமாக, மின்சார வண்டி புறப்பட்டதும், அவசரமாக ஓடிவந்து ஏறும் பிரயாணிகளை, "ஏருதே! ஏருதே!" என்று கூச்சலிட்டு எச்சரிப்பதற்காகவே போர்ட்டர்கள் நிறுத்தி வைக்கப் பட்டிருக்கிருர்கள் அல்லவா? அவர்கள்கூட என்னைக் கண்டால் ஏருதே என்று கத்தமாட்டார்கள். அதிகம் சொல்வானேன்? ஓடும் ரயிலைப் பிடிக்கத் தெரிந்துகொண்டிருக்கும் நான் ரயில்வே கார்டு வேலைக்குப் போகாமல், எழுத்து வேலையை ஒப்புக்கொண்டு விட்டேனே என்று வருத்தப்படும் ரயில்வே அதிகாரிகளும் இருக்கிருர்கள் என்ருல் பார்த்துக்கொள்ளுங்களேன் ! இது நிற்க.

கடைசியில் அண்ணுசாமி அய்யர் ஓட்டப்பந்தயத்தில் தோற்று மனமுடைந்து வீடு திரும்பினுர்.

இனும் டிக்கட்டைக் கண்டு இத்தனை பயப்படுவானேன் என்று நீங்கள் கேட்கலாம். தெனுலிராமன் பூனை பாலைக்கண்டு ஏன் அத்தனை பயந்தது? அதே காரணம் தான்.

கொஞ்ச நாளைக்கு முன்னர் ஒரு நாள் சரசுவை "சினிமாவுக்குப் போய்விட்டு வரலாம்" என்று கூப்பிட்டேன்.

"ஐயோ, சினிமாவா? நான் மாட்டேன்" என்ருள்.

"ஏன்?"

"நீங்கள் பணம் கொடுத்தல்லவா டிக்கட் வாங்குவீர்கள்?"

"பின் பணம் கொடுக்காமலும் டிக்கட் வாங்க முடியுமா?"

"ஏன் முடியாது! அடுத்தவீட்டு அண்ணுசாமி அய்யர் வீட்டில் பணம் கொடுத்தா டிக்கட் வாங்குகிருர்கள்? யாரிடமோ பாஸ் வாங்கிக்கொண்டல்லவா வீட்டில் உள்ள அத்தனை பேரும் பட்டாளமாகப் போகிருர்கள்?" என்ருள்.

சரசு சொன்னதைக் கேட்டதும் யாரிடமாவது பாஸ் வாங்கிக் கொண்டு சினிமாவுக்குப் போனால்தான் என்ன என்று எனக்கும் ஆசை தோன்றிற்று. முன்பாய் இருந்தால் "சட்! எதற்காக ஒருவனைப் பாஸுக்காகக் கெஞ்ச வேண்டும்?" என்று தோன்றும். ஆனால் அனு பிறந்தாலும் பிறந்தாள், "இனிமேல் டாம், டூம் என்று குடித்தனம் பண்ணக்கூடாது. செட்டாக இருக்கவேண்டியது தான்" என்று தோன்ற ஆரம்பித்துவிட்டது. பெண் பிறந்தாலே இப்படித் தோன்றும் போலும்.

ஆகவே பாஸுக்காக வேண்டி என் நண்பர் ஒருவரைத் தேடிப் போனேன். இவருக்குத் தூர பந்து ஒருவர் சினிமாக் கொட்டகையில் வேலையாக இருப்பதால் பாஸ் வாங்கிக் கொடுக்க முடியும் என்று இவரிடம் போனேன்.

முதல் நாள் நண்பர் வீட்டில் இல்லை. இரண்டாம் நாளும் வீட்டில் இல்லை. மூன்றும் நாள் யாருடனோ பேசிக் கொண்டிருந்தார். ஆகவே பாஸ் விஷயத்தைப் பிரஸ்தாபிக்க முடியவில்லை. நாலாம் நாள் கண்டு பேசினேன். "நாளைக்கு வாருங்கள்" என்றார். அடுத்த நாளும் "நாளைக்கு வாருங்கள்" என்றார். இதற்கடுத்த நாளும் "நாளைக்கு வா" என்று தான் அலைக்கழிக்கப் போகிறார் என்று நினைத்துப் போனேன். ஆனால் அவர் "நாளைக்கு வாருங்கள்" என்று சொல்லவில்லை, "நாளையன்றைக்கு வாருங்கள்" என்று சொன்னார்.

எனக்கா அலுத்து விட்டது. இப்படி அலைக்கழிக்கிறாரே என்று இருந்தது. முயற்சி உடையார் இகழ்ச்சி அடையார் என்பது பழமொழி. ஆனாலும் என் முயற்சி அதிகரிக்க, அதிகரிக்க அவரிடம் நான் பட்ட இகழ்ச்சியும் அதிகரித்துக் கொண்டு வந்தது. ஒரு நாள் நான் போன சமயம், என்னைக் கண்டதும், சட்டையை மாட்டிக்கொண்டு "ஒரு அவசர காரியமாகப் போக வேண்டி யிருக்கிறது" என்று சொல்லிவிட்டுப் புறப்பட்டார். என்னைக்கண்டு ஓடி ஒளியவேண்டிய அவசர காரியத்தைத் தவிர அவருக்கு வேறு ஒரு அவசர காரியமும் இருந்ததாகத் தெரியவில்லை.

"சட்! இனிமேல் இந்த மனுஷன் முகத்தில் விழிக்கக்கூடாது" என்று தோன்றிற்று. ஆனால் அதுவரை நான் நண்பரைப் பார்ப்பதற்காகச் செலவழித்த டிராம் சத்தத்தையும் ரிக்ஷா சத்தத்

தையும் நினைத்துப் பார்த்தபோது வயிறு பகீர் என்றது. "ஐயோ! இந்தப் பணத்தைக் கொடுத்து இரண்டு சினிமாவுக்குப் பணம் கொடுத்தே டிக்கட் வாங்கி யிருக்கலாமே" என்று பட்டது. அத்தனை பணம் நண்பரைப் பார்ப்பதற்காகச் செலவழித்த பிறகு, டிக்கட் வாங்காமல் போவதா என்று மேலும் அவரை நெருக்கத் தொடங்கினேன்.

கிட்டத்தட்ட இத்தகைய நெருக்கடி பணம் கடன் கொடுக்கிறவர்களுக்கும் வருவது உண்டு. கடன் வாங்கினவன், வாங்கின கடனைத் திருப்பிக் கொடுக்காமல் மாட்டேன் என்று சொல்லிவிட்டால் என்ன பண்ணுவது என்று பயந்துகொண்டு, நாம் மேலும், மேலும் அவனுக்கே கடன் கொடுப்பது உண்டல்லவா? அதைப் போலவே நண்பரைத் தேடிக்கொண்டு, திரும்பவும், திரும்பவும் போனேன். கடைசியில் என் சங்காத்தம் பொறுக்கமாட்டாமல் சினிமாவுக்குப் பாஸ் கொடுத்தார் என்று வைத்துக்கொள்ளுங்களேன்.

பாஸில் எந்த வகுப்பு என்று குறிப்பிடப்படவில்லை. "என்ன ஸார்! எந்த வகுப்பு என்று போடவில்லையே?" என்று கேட்டேன்.

"போடாவிட்டால் என்ன ஸார்! பாஸ் என்றாலே இரண்டரை ரூபாய் வகுப்பு என்றுதான் அர்த்தம்" என்றார்!

ஆனால் பாஸுக்காக நான் பட்ட சிரமத்தையெல்லாம் சரசுவிடம் சொல்லவில்லை. எந்தப் புருஷனாவது தான் பட்ட அவமானத்தை மனைவியிடம் சொல்வானா என்ன?

எனக்குள்ள செல்வாக்கினால்தான் பாஸ் வாங்கிக்கொண்டு வந்திருக்கிறேன் என்று நினைத்துச் சரசு சந்தோஷப்பட்டாள். அன்றைய சாயந்திரமே சினிமாவுக்குப் புறப்பட வேண்டுமென்று துடியாய் நின்றாள். அன்று சாயந்திரமே, நான், சரசு, இன்னும் வீட்டில் உள்ள எல்லாரும் சினிமாவுக்குப் புறப்பட்டோம்.

கொட்டகையில் எனக்குத் தெரிந்த நண்பர் ஒருவர் தம் குடும்பத்துடன் வந்திருந்தார். என்னையும், என் குடும்பத்தினரையும் கண்டதும் "வாருங்கள் ஸார்! உள்ளே போகலாம்" என்று கூப்பிட்டார். வழக்கமாக நாங்கள் ஒரு ரூபாய் இரண்டணா வகுப்புக்குப் போவது வழக்கம், அதற்குத்தான் கூப்பிட்டார். ஆனால் நான் பெருமையாக, "எனக்கு இரண்டரை ரூபாய் வகுப்புக்குப் பாஸ் இருக்கிறது ஸார்!" என்று சொல்லிவிடவே அவர் உள்ளே போய்விட்டார். பாஸை அங்கிருந்த ஒருவரிடம் காண்பித்தேன்.

பாஸைப் பார்த்ததும் அவர் என்னையும், என்கூட வந்தவர்களையும் ஏற இறங்கப் பார்த்தார். பார்த்துவிட்டு, "அதோ அங்கே இருக்கிறாரே, அவரிடம் கொடும்" என்றார். உடனே அவரிடம் போனேன். அவர் இன்னொருவரிடம் அனுப்பினார். இன்னொருவர் மற்றொருவரிடம் அனுப்பினார். இப்படியாக, மாறி, மாறிக் கடைசியில் மானேஜர் அறைக்குப் போனேன்.

அந்த சீட்டில் மானேஜர் கையெழுத்திட்டால்தான் உள்ளே விடுவார்களாம். ஆனால் ஆறரை மணி ஆட்டத்துக்கு ஏழுமணி ஆகியும் மானேஜர் வரவில்லை. அவர் ஏன் வருகிறார்? இம்மாதிரி ஓசி டிக்கட்டுகள் வாங்கிக் கொண்டு ஆஸாமிகள் காத்துக் கொண்டிருப்பார்கள் என்று அவருக்குத் தெரியாதா, என்ன?

மணியோ ஏழு ஆகிவிட்டது. எனக்கா அவமானம் பொறுக்க முடியவில்லை. மனைவி முன்னிலையிலேயே இப்படி அவமானப் படுவது என்றால்? சரி, வீடு திரும்ப வேண்டியதுதான் என்று திரும்புகையில் மானேஜர் வந்தார். கடைசியில் பாஸில் கையெழுத்திட்டார்.

உடனே அங்கிருந்த ஒரு ஆள் எங்களை இரண்டரை ரூபாய் வகுப்புக்கு அழைத்துச் சென்றான். இரண்டரை ரூபாய் வகுப்புக்குள் சென்றதும் பெருமையினால் என் தலை நிலை கொள்ளவில்லை. பாஸினால் நான் பட்ட எல்லா அவமானங்களையும் மறந்தேன்.

ஆனால் ஐந்து நிமிஷம் ஆகி யிருக்காது, இன்னொருவர் வந்தார். "ஸார், மன்னிக்கணும்" என்றார்.

"ஏன்?"

"இல்லை, வந்து,......" என்று ஏதோ குழறினார்.

"என்ன, தைரியமாகச் சொல்லும்" என்றேன்.

"இல்லை, வந்து......இந்த இடம் யாரோ ரிஸர்வ் பண்ணியிருக்கிறார்களாம். ஆகவே மானேஜர் உங்களுக்கு வேறு இடம் கொடுக்கச் சொன்னார்" என்றார்.

"அப்பாடா! இதைச் சொல்வதற்குதானா உங்களுக்கு நடுக்கம்? வேறு இடமே கொடுங்களேன்" என்றேன்.

அப்படியே வேறு இடத்துக்கு அழைத்துப் போனார். அந்த வேறு இடம் ஒன்பது அணா வகுப்பு என்று தெரிந்ததும் சரசுவுக்கு ஏற்பட்ட அவமானம் கொஞ்சம் நஞ்சமல்ல. அவமானத்தினால் அப்படியே நாற்காலியில் அமர்ந்தவள் படம் முடிகிறவரை நாற்காலியை விட்டு எழுந்திருக்கவே இல்லை.

இப்பொழுது நீங்களே, சொல்லுங்கள், இலவசச் சினிமா டிக்கட்டைக் கண்டு எனக்குப் பயமாய் இருக்குமா, இருக்காதா? இனும் டிக்கட் வேண்டாம் ஐயா, வேண்டாம்?

# நல்ல நடை

நல்ல நடை கையாள வேண்டுமென்று எனக்கு எழுத ஆரம்பித்ததிலிருந்தே ஆசை! இதற்காக நல்ல நடையைக் கையாண்டு வந்த ஒரு பெரிய எழுத்தாளர் என்ன செய்கிறார் என்று கவனிக்க ஆரம்பித்தேன்.

அந்தப் பெரிய எழுத்தாளர் தாம் என்னஎழுத வேண்டியிருந்தாலும் சரி, டக்கென்று உட்கார்ந்து சடக்கென்று எழுத ஆரம்பிக்க மாட்டார். எழுத வேண்டிய விஷயங்களைப் பற்றித் தீர்க்காலோசனை பண்ணுவதற்காக, கொஞ்ச நேரம் மேலும் கீழும் உலாவுவார். அதற்குப் பிறகே உட்கார்ந்து எழுத ஆரம்பிப்பார்.

இதைப் பார்த்து, எழுத ஆரம்பிப்பதற்கு முன் மேலும் கீழும் நடக்க வேண்டியது மிகவும் அவசியம் என்று நான் உணர்ந்தேன். அப்படியே நடக்கவும் ஆரம்பித்தேன்.

என்ன ஆச்சரியம்! நான் எங்கள் வீட்டுக் கூடத்தில் பத்து நடை மேலும், கீழும் நடந்திருக்க மாட்டேன், நான் எதைப் பற்றிக் கட்டுரை எழுதவேண்டும் என்று நினைத்திருந்தேனோ, அதைப் பற்றிய கருத்துக்கள் என் மனதில் சட, சடவென்று உதயமாயின. உடனேயே உட்கார்ந்து கட்டுரையைச் சட, சடவென்று எழுதி முடித்தேன். கட்டுரையைப் பின்னால் வாசித்தவர்கள், "நடை வெகு அழகாக அமைந்திருக்கிறது" என்று என்னைப் பாராட்டினார்கள்.

அதிலிருந்து அந்தப் பெரிய எழுத்தாளர் நல்ல நடை கையாளுவதன் ரகசியம் எனக்குப் புரிந்து விட்டது. எழுதுவதற்கு முன் அதைக் குறித்து யோசனை பண்ணிக் கொண்டே அவர் நடக்கும் நடைக்கும், பின்னால் அவர் எழுத்தில் காணப்படும் நடைக்கும் நெருங்கிய சம்பந்தம் இருக்கிறது. அது தான் அவர் விடாமல் நடக்கிறார். நாமும் நல்ல நடை எழுத வேண்டுமானால், அந்தப் பெரிய எழுத்தாளருக்கு மேல் நடக்க வேண்டும் என்று தீர்மானித்து, அதன்படி நடக்கவும் ஆரம்பித்தேன்.

ஒரு கட்டுரை எழுதுவதற்கு அந்தப் பெரிய எழுத்தாளர் எவ்வளவு தூரம் நடக்கிறார் என்று கணக்குப் போட்டுப் பார்த்தேன். அவர் கூடத்தின் நீளத்தை அவர் இல்லாத சமயம் பார்த்து அளந்து, அதை அவர் எத்தனை நடை கீழும் மேலும், வந்தாரோ அந்த எண்ணிக்கையால் பெருக்கியதில் (அதாவது கணக்கில் மிகக் கெட்டிக்காரரான என் நண்பர் ஒருவரைக் கொண்டு பெருக்கிச் சொல்லப் பார்த்ததில்—ஏனெனில் எனக்கும் கணக்குக்கும் தான் வெகு தூர மாயிற்றே!) ஒரு பர்லாங்கு தூரம் வந்தது.

ஒரு பர்லாங்கு தூரம் நடந்துவிட்டு அவர் அத்தனை நல்ல நடை எழுதினால் ஒரு மைல் தூரம் நடந்தால் எத்தனை நல்ல நடை எழுத முடியும் என்று தீர்மானித்து ஒவ்வொரு கட்டுரைக்கும் ஒரு மைல் தூரம் நடக்க ஆரம்பித்தேன்.

ஒரு மைல் தூரத்தையும் கட்டுரையின் ஆரம்பத்திலேயே நடப்பதை விடுத்து, கட்டுரையின் ஆரம்பத்தில் கொஞ்சம், நடுவில் கொஞ்சம், கடைசியில் கொஞ்சம் என்று இப்படி நடக்க ஆரம்பித்தேன்.

நடை அதிகரிக்க, அதிகரிக்க, என் கட்டுரையின் நடையும் நன்கு அமைந்து கொண்டு வந்தது.

ஆனால் குருவுக்கு மிஞ்சின சிஷ்யனாக நான் பண்ணின காரியம் சீக்கிரம் கிணறு வெட்டப் பூதம் புறப்பட்ட கதையாக மாறும் என்று நான் கனவிலும் கருதவில்லை.

கொஞ்ச நாளானதும் என் நடை, அதாவது என் கட்டுரையின் நடை தளர ஆரம்பித்தது. கட்டுரையின் நடை தளரவே அதுவரை கட்டுரைக்கு ஒரு மைல் நடந்து கொண்டிருந்தவன் இரண்டு மைல் நடக்க ஆரம்பித்தேன். உடனே கட்டுரை பழைய நிலைமைக்கு வந்து நின்றது.

ஆனால் இந்த நிலைமை வெகு நாள் நீடிக்கவில்லை. கொஞ்ச நாளானதும் இதுவரை இரண்டு மைல் நடந்துகொண் டிருந்தவன் மூன்று மைல் நடக்கவேண்டி வந்தது. பிறகு மூன்று மைல் நான்கு மைலாகி, பிறகு நான்குமைல் ஐந்து மைலாகி, இப்படி அதிகரித்துக் கொண்டே வந்து இப்பொழுது பத்து மைலில் வந்து நிற்கிறது.

ஆரம்பத்தில் ஒவ்வொரு கட்டுரைக்கும் ஒரு நடை போட்டது, மெள்ள, மெள்ள ஒரு பாராவுக்கு ஒரு நடையாக மாறி அதிலிருந்து

வாக்கியத்துக்கு ஒரு நடையாகத் திரிந்து இப்பொழுது வார்த்தைக்கு ஒரு நடையில் வந்து நிற்கிறது!

இம்மாதிரி கட்டுரை முழுவதும் நடக்க வேண்டி யிருப்பதால், முதலில் மூன்று மைல் வேகத்தில் ஜோராக ஆரம்பிக்கும் நடை கட்டுரையின் நடுவில் இரண்டு மைல் வேகமாக மாறி, கட்டுரையின் முடிவில் ஒரு மைல் வேகத்தில் வந்து நிற்கும்.

ஆனால் இந்த நடை இங்கேயே நிற்காமல் இன்னும் அதிகரித்துக்கொண்டு போகுமோ என்று பயமாக இருக்கிறது. போதை தரும் பொருள்கள் எப்படி நாளாக, நாளாக அதிகரித்துக் கொண்டே போனால்தான் போதை அளிக்குமோ அந்த மாதிரி ஆகிவிடுமோ என்று நடுக்கமாக இருக்கிறது.

இப்படி நடை அதிகரிக்க, அதிகரிக்க நான் படும் அவதி சொல்லி முடியாது. முன்னைப்போல் எப்பொழுது வேண்டுமானாலும் கட்டுரை எழுத முடிவதில்லை. பத்து மைல் நடக்க எப்பொழுது காலில் வலு இருக்கிறதோ அப்பொழுதுதான் எழுத முடிகிறது.

இது தெரியாமல் மாதம் ஒரு புத்தகம் போடுகிறவர்களும், வருஷம் ஒரு மலர் போடுகிறவர்களும் என்னை ஏதாவது கட்டுரை எழுதி அனுப்பும்படி கழுத்தை அறுக்கிறார்கள். "ஐயா! அவ்வளவு தூரம் உங்களுக்கெல்லாம் எழுதி அனுப்பும்படி எனக்குக் காலில் அவ்வளவு வலு இல்லை" என்று உண்மையைச் சொல்ல முடிகிறதா? இல்லை. அதற்குப் பதில் எனக்கு ஓய்வே இல்லை போலும், எப்பொழுது பார்த்தாலும் வேலையிலேயே மூழ்கி யிருப்பது போலவும் பாசாங்கு பண்ணவேண்டி யிருக்கிறது.

ஆனால் அந்த மாதம் ஒரு புத்தகக்காரர்களுக்குத் தெரியாதா நான் பாசாங்கு பண்ணுகிறேன் என்றும், எனக்கு வேலையே கிடையாது என்றும், ஆகவே அவர்கள் என்னை "ராங்கிக்காரன், அகம்பாவக்காரன்" என்றெல்லாம் தூற்றத் தொடங்கி விட்டார்கள்.

இவர்கள் தூற்றினால் தூற்றிவிட்டுப் போகிறார்கள், வழக்கமாக எழுதும் கட்டுரைகளை எழுதிவிட்டுப் போவோம் என்றால் அதுவும் எங்கேயும் எழுத முடிவதில்லை. எங்கள் வீட்டுக் கூடத்தில் உலாவினால்தான் எனக்குக் கணக்குத் தெரிகிறது, அதாவது

பத்து மைல் கணக்குக்கு எவ்வளவு நடை மேலும், கீழும் நடக்க வேண்டும் என்று தெரிகிறது. கட்டுரையும் எழுத வருகிறது.

வேறு எங்கேயாவது போய் விட்டாலோ, முதலில் உலாவவே முடிவதில்லை. என்னடா இப்படிப் பயித்தியம் மாதிரி மேலும் கீழும் வருகிருன் என்று நினைத்துக் கொள்வார்களோ என்று பயமாக இருக்கிறது.

ஒரு தடவை இப்படித்தான் ஒரு நண்பர் வீட்டுக்குள் அகப் பட்டுக் கொண்டு விட்டேன். எப்படியாவது ஒரு கட்டுரை எழுதி அடுத்த நாள் தபாலில் அனுப்பியாக வேண்டும் என்ற நிலைமை ஏற்பட்டு விட்டது. என்ன பண்ணுவது என்று தெரியவில்லை.

நாம் கட்டுரை எழுதும் ரகசியம் நண்பருக்குத் தெரிந்தாலும் தெரிந்துவிட்டுப் போகட்டும் என்று நண்பரைப் பார்த்துக் கூடத் தின் நீளம் என்ன என்று கேட்டேன். நண்பருக்குக் கூடத்தின் நீளம் தெரியவில்லை. அளந்து பார்ப்பதற்கு அடிக்கோலும் இல்லை.

அந்தச் சமயம் நான் திகைத்த திகைப்பைப் பார்த்துவிட்டு நண்பர் விஷயம் என்ன வென்று விசாரித்தார். நான் உண்மை யைச் சொன்னேன்.

நண்பர் தம் மனதுக்குள் கட்டாயம் சிரித்திருப்பார் என்பதில் சந்தேகமில்லை. இருந்தாலும் அவர் தம் சிரிப்பை வெளிக் காட் டாமல் ஒரு புது யோசனை சொல்லிக் கொடுத்தார்.

"பக்கத்தில் ஒருசாலை இருக்கிறது. அதில் மைல் கற்கள் நாட்டப்பட் டிருக்கின்றன. அதில் ஐந்து மைல் போய் ஐந்து மைல் திரும்பி வந்து விடுங்களேன்!" என்றார்.

இதுவும் ஒரு நல்ல யோசனை தான், எப்படியோ கட்டுரைக் காகப் பத்து மைல் நடக்க வேண்டும், அதைச் சேர்த்து ஒரே நடை யாக ரஸ்தாவில் நடந்தால் என்ன, கொஞ்சம், கொஞ்சமாக மேலும், கீழும் கூடத்தில் நடந்தால் என்ன என்று நினைத்தேன். அதோடு ரஸ்தாவில் நடப்பதால் உடம்பிலும் நல்ல காற்றுபடும், ஒரு கல்லில் இரண்டு மாங்காய் அடித்த மாதிரி என்று சந்தோஷப் பட்டேன்.

ஆனுல் இந்த எண்ணம் எவ்வளவு தவறான எண்ணம் என்பது கால் ஒடிய, அந்த ரஸ்தாவில் பத்து மைல் நடந்துவிட்டுத் திரும்பிய பிறகுதான் தெரிந்தது. கட்டுரைக்கு வேண்டிய கருத்

துக்கள் தோன்றவே இல்லை. உடனேயே வீட்டுக்குத் திரும்பி எங்கள் வீட்டுக் கூடத்தில் வழக்கம்போல் பத்து மைல் நடந்த பிறகு தான் கட்டுரை எழுத முடிந்தது.

நல்ல நடை எழுதவேண்டும் என்பதற்காக நான் நடந்த நடை இப்படி அதிகரித்துக் கொண்டே போனதால் இன்னொரு சங்கடமும் நேர்ந்தது. அதாவது சுண்டைக்காய் கால் பணம், சுமைக்கூலி முக்கால் பணம் என்பது மாதிரி ஒரு மணி நேரத்தில் எழுதி முடியும் கட்டுரைக்காக நான்கு மணி நேரமும் ஐந்து மணி நேரமும் நடையில் செலவழிக்க வேண்டி வந்து விட்டது.

கொஞ்ச நாட்களாக இன்னொரு தொல்லையும் ஏற்பட்டு விட்டது. நான் குடி யிருக்கும் வீட்டின் சொந்தக்காரர், தாம் குடிவரப் போவதாகவும், நான் உடனே வீட்டைக் காலி செய்து விடவேண்டும் என்றும் நிர்ப்பந்தம் செய்து கொண்டிருக்கிறார். இந்தக் கூடத்தை விட்டுப் போய் விட்டால் என்னால் கட்டுரையே எழுத முடியாது, என் பிழைப்பே போய் விடும் என்று என்ன சொல்லியும் வீட்டுக்காரர் கேட்க மாட்டேன் என்கிறார். வேறு வீட்டுக்குக் குடிபோனாலும், கட்டுரை எழுதுவதற்காகக் கூடத்தை மாத்திரம் வைத்துக் கொள்கிறேன் என்று சொன்னாலும் கேட்க மாட்டேன் என்கிறார். எனக்கு என்ன பண்ணுவது என்றே தெரிய வில்லை.

அதோடு.........ஊஹூம்! எனக்குக்கால் வலிக்கிறது. இனி ஒரு வார்த்தை கூட எழுத முடியாது!



# அதிகப் பிரசங்கம்

நம் நாட்டில் இப்பொழுது எங்கு பார்த்தாலும் பேச்சு மய மாகத்தான் இருக்கிறது. எங்கு பார்த்தாலும் கூட்டங்கள்! எங்கு பார்த்தாலும் பிரசங்கங்கள்! சில புள்ளிக் கணக்கு நிபுணர்கள் சொல்லும் பாணியில் சொன்னால்தான் இது விஷயம் உங்களுக்குப் புரியும்.

அதாவது, தமிழ் நாட்டில் ஒரு நாளில் பிரசங்கம் செய்பவர் களை யெல்லாம் ஒருவர் கால் இன்னொருவர் தலையில் இடிக்கும்படி காலை நீட்டிப் படுக்கச் சொன்னால், முதல் பிரசங்கியின் தலை சென்னையில் இருந்தது என்றால், கடைசி பிரசங்கியின் கால் லண்டன்மா நகரத்தில் இருக்கும். அவர்கள் பேசும் பேச்சை யெல்லாம் அப்படியே எடுத்துப் புத்தகமாகப் போட்டு, அந்தப் புத்தகத்துக்காகக் கோக்கப்படும் அச்சு எழுத்தை அடுக்கிக் கொண்டே போனால் அது சூரிய மண்டலத்தைப் போய் இடிக்கும். பிரசங்கிகளின் குரல் எல்லா வற்றையும், ஒரே தனிக் குரலாக மாற்றினால் அந்தக் குரல் இங்கிலாந்தில் வசிக்கும் எல்லார் காதையும் செவிடாக்கி விடும். பிரசங்கிகளுக்குப் போடப்படும் பூமாலைகளை யெல்லாம் மலைபோல் குவித்தால் அது இமயமலையின் உயரத்தை எட்டிப் பிடித்து விடும்.

ஆக இவ்வளவு பெரும் தொகையான பிரசங்கிகள் நம் நாட்டில் இருந்தும் பிரசங்கம் என்றால் என்னமோ என்று பயப்படும் ஜனங்களும் இல்லாமலில்லை. அவர்களை உத்தேசித்துத்தான் இக் கட்டுரை எழுதுகிறேன். பிரசங்கம் செய்வது எப்படி என்பதைப் பற்றிச் சற்றுப் பிரசங்கம் செய்யப் போகிறேன்.

பிரசங்கிகளை இரண்டு வகையாகப் பிரிக்கலாம். ஒரு சாரா ருக்கு நன்றாகப் பேச வேண்டும், சபையோர் கைதட்டி மெச்ச வேண்டும் என்று ஆசை. இன்னொரு சாராருக்கு அன்றையக் கூட் டத்தைப் பற்றியே கவலை. இல்லை, அடுத்த நாள் பத்திரிகையைப் பற்றித்தான் கவலை. தாங்கள் பேசிய விஷயம் அடுத்த நாள் பத்திரிகையில் வருகிறதா என்பதைப் பற்றித்தான் இவர்களுக்கு விசாரம்.

ஆகவே நீங்கள் பிரசங்கி யாவதற்கு முன் எந்த வகுப்புப் பிர சங்கியாக விரும்புகிறீர்கள் என்பதை நிர்ணயித்துக் கொள்ள வேண்டும்.

பெயர் பத்திரிகையில் வந்தால் போதும் என்ற இனத்தைச் சேர்ந்தவர்களா யிருந்தால் எப்படிப் பிரசங்கம் செய்வது என் பதைப் பற்றிக் கவலைப்படத் தேவையில்லை. நீங்கள் பேசப்போகும் கூட்டத்தில் இன்னும் யார், யார் பேசப் போகிறார்கள், அல்லது அந்தக் கூட்டத்துக்கு யார் தலைமை வகிக்கப் போகிறார்கள் என் பதைப் பற்றித்தான் நீங்கள் கவலைப்பட வேண்டும்.

யாராவது நல்ல பெரிய மனிதர் நீங்கள் பேசப் போகும் கூட் டத்துக்குத் தலைவராகவோ, அல்லது கூடப் பேசப் போகிறவ ராகவோ வந்தால் உங்கள் பாடு கொண்டாட்டம் தான். கூட்டத் தின் நடவடிக்கைகளைப் பற்றிப் பத்திரிகைக்குச் செய்தி அனுப்பு வதற்கு யாராவது நிருபர் கட்டாயம் வருவார். அப்பொழுது "ஸ்ரீ—அவர்களும் பேசினார்" என்று உங்கள் பெயர் பத்திரிகை யில் வெளி வரும். சில சமயம் நீங்கள் பேசாத விஷயங்களெல் லாம் கூடப் பேசினதாக உங்கள் பெயருக்கு அடியில் வெளிவரும்.

இதற்குக் காரணம் நிருபர் உங்கள் பேச்சைக் கேளாமல் விட்டு விட்டதுதான். பத்திரிகை நிருபர்கள் இதுமாதிரி நம் போன்ற எத்தனையோ குட்டிப் பிரசங்கிகளைக் கேளாமல் விட்டு விடுவது உண்டு. அதற்காக அவர்கள், "ஐயோ! கேளாமல் விட்டு விட்டோமே! அதைப் பற்றிப் பத்திரிகைக்கு எப்படிச் செய்தி அனுப்புவது!" என்று கவலைப் படுவதில்லை.

இதற்கென்றே அவர்கள் ஒரு டெக்னிக் வைத்திருக்கிறார்கள். அரசியல் பிரசங்கமாய் இருந்தால் "எல்லா கட்சிகளும் ஒன்று பட்டு வேலை செய்ய வேண்டியதன் அவசியத்தை வற்புறுத்திப் பேசினார்" என்று போடுவார்கள். இல்லை, இலக்கியப் பிரசங்க மாக இருந்தது, "நாம் எல்லாரும் தமிழ் பாஷை மீது ஆர்வம் கொண்டு படிக்க வேண்டியதன் அவசியத்தை வற்புறுத்தினார்" என்று போட்டு விடுவார்கள். ஆக எப்படியோ உங்கள் பெயர் பத்திரிகையில் வந்து விடும்.

பத்திரிகையில் பெயர் வந்தால் போதும் என்று பிரசங்கம் செய்ய விரும்பும் நண்பர்கள் நான் மேலே சொன்ன வழிகளைக் கையாண்டால் போதும்.

ஆனால் இதற்காக நன்றாகப் பேசிச் சபையோரிடமிருந்து கர கோஷம் வாங்க வேண்டும் என்று ஆசைப்படும் நண்பர்கள் பாடு சற்றுக் கஷ்டம்தான் என்று நினைக்காதீர்கள்.

இந்தக் கோஷ்டியைச் சேர்ந்த சிலர் அப்படித்தான் நினைத்துக் கொண்டு அவதிப்படுகிறார்கள். காரணம், என்ன விஷயத்தைப் பற்றிப் பேசவேண்டும் என்று போட்டிருக்கிறதோ, அதைப் பற்றியே இவர்கள் பேச முயல்வதுதான்.

இதைப்போலப் பயித்தியக்காரத் தனம் வேறு கிடையாது என்று சொல்லலாம். நல்ல அனுபவம் உள்ள பிரசங்கிகள் விஷயத்தைப் பற்றியே கவலைப்பட மாட்டார்கள். விஷயத்தின் பெயர் என்னவாகத்தான் இருக்கட்டும், காந்தி ஜயந்தியாகத்தான் இருக்கட்டும், அல்லது தற்கால அரசியல் நிலைமையாகத்தான் இருக்கட்டும், பாரதி விழாவாகட்டும், முதலாளிகள் மகாநாடாக இருக்கட்டும், அல்லது தொழிலாளிகள் மகாநாடாக இருக்கட்டும், இவர்களுக்கு எல்லாம் ஒன்றுதான்.

இந்த எல்லாக் கூட்டங்களுக்கும் இவர்கள் தாங்கள் இதற்கென்றே முன் கூட்டித் தாயாரித்து வைத்திருக்கும் ஒரு பிரசங்கத்தைத்தான் பேசுவார்கள்.

இப்படி முன்கூட்டித் தயாரித்து வைத்துக் கொள்ளும் பிரசங்கம் எவ்வளவுக் கெவ்வளவு பொதுப்படையாக இருக்கிறதோ, அவ்வளவுக்கு அவ்வளவு நல்லது.

எந்தக் கூட்டத்திலும் நாம் எல்லாரும் ஒன்றுபட்டு வேலை செய்ய வேண்டியதன் அவசியத்தைப் பற்றிக் கூறலாம். எந்தக் கூட்டத்திலும் நாம் சுயராஜ்யத்துக்காகப் பாடுபட வேண்டியதன் அவசியத்தை வற்புறுத்தலாம். எந்தக் கூட்டத்திலும் நம்முடைய இன்றைய கஷ்டங்களுக் கெல்லாம் மூலகாரணமான பிரிட்டிஷ் யதேச்சாதிகாரத்தைத் திட்டலாம்.

இந்த மூன்று விஷயங்களையும் கொண்ட ஒரு பிரசங்கம் தயாரித்து, அதை நெட்டுருப் பண்ணி வைத்துக் கொண்டு விடுங்கள். நடுவில், நடுவில் பாரதியிலிருந்து ஒரு பாட்டு, திருக்குறளிலிருந்து ஒரு மேற்கோள், கம்பனிலிருந்து ஒரு அடி போட்டு வைத்தீர்களானால், பிரசங்கம் பலே ஜோரா யிருப்பதுடன் சபையோரும் நீங்கள் மிகவும் படித்தவர் என்று நினைத்துக் கொள்வார்கள்.

பேசுவதற்காகக் கொடுக்கப்பட்டுள்ள விஷயத்தையும், நீங்கள் முன்கூட்டித் தயாரித்து வைத்திருக்கும் இந்தப் பிரசங்கத்தையும் எப்படி இணைப்பது என்று கேட்க மாட்டீர்கள் என்று நினைக்கிறேன்.

இதைப்போலச் சுலபமான காரியம் வேறு ஒன்றும்கிடையாது. எந்த விஷயமாகத்தான் இருக்கட்டும், கவலையில்லை. உதாரணத்துக்காக, உங்கள் பிரசங்கத்துக்கும், அதற்கும், மலைக்கும் மடுவுக்கும் உள்ள வித்தியாசம் கொண்ட ஒரு விஷயத்தை எடுத்துக் கொள்ளுங்கள். "ஜப்பானில் மக்ஆர்தரின் கொள்கை" என்பது விஷயம் என்று வைத்துக் கொள்ளுங்கள்.

எடுத்த எடுப்பிலேயே "இது விஷயத்தைப் பற்றி நான் உங்களுக்கு அதிகம் சொல்ல வேண்டியதில்லை. இது விஷயம் உங்கள் எல்லாருக்கும் தெரிந்ததே" என்று சபையோரை உச்சி குளிர வையுங்கள். பிறகு இப்படிப்பட்ட நிலைமைக்கு பிரிட்டிஷ் ஏதேச்சாதிகாரம் தான் காரணம், பிரிட்டிஷ் ஏதேச்சாதிகாரத்தினால்தான் நாம் இன்று சுயராஜ்யம் இன்றி வாடுகிறோம், நாம் எல்லாரும் ஒத்துப் போனால்தான் சுயராஜ்யம் கிடைக்கும் என்று இப்படி நாம் நெட்டுருப் பண்ணி வைத்திருக்கும் பிரசங்கத்தை ஒப்பித்தால் போச்சு!

தமிழ் நாட்டுப் பிரசங்கிகளின் அதிர்ஷ்டமோ. என்னவோ, இன்று உலகில் என்ன காரியம் நடந்தாலும் சரி, அதில் பிரிட்டிஷ் ஏதேச்சாதிகாரம் சம்பந்தப் பட்டுத்தான் இருக்கிறது. ஆகவே பேசுவதற்காக நமக்கு என்ன விஷயம் கொடுக்கப் பட்டாலும் சரி, பிரிட்டிஷ் ஏதேச்சாதிகாரத்தில் ஆரம்பித்து, சுயராஜ்யத்தின் அவசியத்துக்கு வந்து, நாம் ஒற்றுமையாய் இருக்க வேண்டியதின் முக்கியத்துவத்தில் முடித்தால் போச்சு!

ஆனால் ஒரு எச்சரிக்கை! ஒரே இடத்தில் ஒரு வாரத்துக்குள் இரண்டு பிரசங்கம் ஒப்புக் கொண்டு விட்டீர்களோ, வந்தது ஆபத்து! உங்கள் குட்டு வெளிப்பட்டுப் போய்விடும்!



# தலைவர்களுக்கு ஒரு யோசனை

சுயராஜ்யத்துக்காகப் பாடுபட்டுக் கொண்டிருக்கும் நம் தலைவர்களுக்கு நான் வெகு தாழ்மையாக ஒரு யோசனை சொல்ல விரும்புகிறேன்.

போயும், போயும் இவ்வளவு பெரிய தலைவர்களுக்கு நாம் யோசனை சொல்வதாவது என்று இத்தனை நாளும் வாயைமூடிக் கொண்டிருந்தேன். ஆனால் தலைவர்களுக்கோ வயதாகிக் கொண்டு போகிறது. எனக்கும் வயதாகிக் கொண்டு வருகிறது. அதோடு கூட, " இன்றைக் கிருப்பாரை நாளைக்கு இருப்பார் என்று எண்ணவோ திடமில்லையே " என்று எங்கள் வீட்டுக்கு வரும் பிச்சைக்காரன் தினம் எனக்கு ஞாபகப் படுத்திக் கொண்டே வருகிறான். ஆகவே என்னுடைய யோசனையைக் காலதாமத மின்றித் தெரிவித்துக் கொள்ளுவது மிகவும் நலம் என்று தோன்றுகிறது.

சுயராஜ்யம் அடைவதற்காக நம் தலைவர்கள் வெகு காலமாகப் பிரயத்தனம் பண்ணிக்கொண்டு வருகிறார்கள். இதுவரை என்னென்னமோ வழிகளும் கையாண்டு பார்த்து விட்டார்கள். ஆனால் சுயராஜ்யம் என்பது என்னமோ வந்த பாடில்லை.

இதற்குக் காரணம் நம் தலைவர்கள் நம் ஜனங்களைச் சரியாகப் புரிந்து கொள்ளாததுதான் என்று கூறுவேன்.

ஜனங்கள் இன்னின்ன காரியங்கள் செய்தால்தான் சுயராஜ்யம் வரும் என்று தலைவர்கள் தினம் சொல்லி வருகிறார்கள்.

நாற்பது கோடி மக்களும் கதர் கட்ட ஆரம்பித்தால் சுயராஜ்யம் வரும் என்கிறார்கள். நாற்பது கோடி மக்களும் ஹிந்துஸ்தானி பேசக் கற்றுக் கொண்டால் சுயராஜ்யம் தன்னைப்போல் பறந்தோடி வரும் என்கிறார்கள். இன்னும் நாற்பது கோடி மக்களும் நூல் நூற்க ஆரம்பித்தால் சுயராஜ்யம் வரும் என்கிறார்கள்.

நாற்பது கோடி மக்களும் இந்தக்காரியங்களைச் செய்ய வேண்டும் என்று நம் தலைவர்கள் காத்துக் கொண்டிருக்கும் பட்சத்தில் அவர்கள்காத்துக் கொண்டே இருக்கவேண்டியதுதான்,

ஏனெனில் நாற்பது கோடி மக்களும் சேர்ந்தாற்போல் மேற்படி காரியங்களைச் செய்யப் போவதில்லை.

கெட்டிக்காரத் தலைவர்களா யிருந்தால் இந்த மாதிரி நாற்பது கோடி மக்கள் இனிமேல் செய்ய வேண்டிய காரியத்தை நம்பி சுய ராஜ்யத்துக்குத் திட்டம் போட மாட்டார்கள். நம் ஜனங்கள் என்ன செய்ய வேண்டும் என்று எண்ணுவதை விடுத்து, நம் ஜனங்கள் என்ன செய்து கொண்டிருக்கிறார்கள், எந்தக் காரியம் செய்வதில் கெட்டிக்காரர்கள் என்பதைக் கவனித்து, அதைப் பயன் படுத்திக் கொள்ளப் பார்ப்பார்கள்.

உதாரணமாக, ஒரு சேனாதிபதியிடம் ஆகாய விமானங்களே இல்லை, டாங்கிகள் தான் இருக்கின்றன என்று வைத்துக் கொள்ளுங்கள். டாங்கிகளைக் கொண்டே எதிரியை முறியடிப்பது எப்படி என்று தீர்மானம் பண்ணுவதை விடுத்து, ஆகாய விமானங்கள் இருந்தால் எவ்வளவு எளிதில் ஜயிக்கலாம் என்று அந்த சேனாதிபதி மனக்கோட்டை கட்ட ஆரம்பித்தால் என்ன பிரயோஜனம்?

ஆகவே தான் நம் தலைவர்களை நான் வெகு தாழ்மையுடன் கேட்டுக் கொள்கிறேன். நம் ஜனங்கள் இப்பொழுது செய்து கொண்டிருக்கும் காரியத்தைக் கவனித்து, அதைப் பயன்படுத்திக் கொள்ளும்படி கேட்டுக் கொள்கிறேன்.

எனக்குத் தெரிந்த வரையில் நம் ஜனங்கள் ஒரு காரியத்தில் வெகு அசகாய சூரர்களாக விளங்குகிறார்கள். கூச்சலிடுவதிலும், கோஷமிடுவதிலும், வீரா வேசமாகப் பேசுவதிலும் நம்மை மிஞ்சக் கூடியவர்கள் நாமே.

மணிக் கணக்காகப் பேசக் கூடிய பிரசங்கிகளும், நாளொன்றுக்கு நாற்பது கூட்டங்களில் பேசக் கூடிய சூரர்களும் நம் நாட்டில் தான் இருக்கிறார்கள்.

இன்னும் கூட்டங்களில் மகாத்மா காந்தியில் ஆரம்பித்து, அன்றையக் கூட்டத்துக்குத் தலைமை வகிக்கும் நபர் வரைக்கும் 'ஜே' போடும் வழக்கமும் நம் நாட்டில் இருப்பதுபோல் வேறு எந்த நாட்டிலும் இருப்பதாகத் தெரியவில்லை. இன்னும் பிரசங்கி உணர்ச்சி வேகத்துடன் பேசும்போது நம் நாட்டவர் கை தட்டுவது போல் வேறு எந்த நாட்டினரும் கை தட்டுவதாகத் தெரியவில்லை.

அதோடு நாளுக்கு நாள் புதுப் புது கோஷங்கள் தோன்றிக் கொண்டிருப்பதால் நாம் கோஷமிடுவதும் அதிகரித்துக் கொண்டு வருகிறது.

பிரசங்கத்தின் நடுவில் 'மைக்' கெட்டுப் போனாலும் அதற்காக நம் பிரசங்கிகள் மனம் உடைந்து பிரசங்கத்தை முடித்துக் கொண்டு விடுவதில்லை. மைக்கின் ஒலிக்கு மேல் தங்களால் உரத்துப் பேச முடியும் என்று அதை நிரூபித்தும் காட்டுகிறார்கள்.

வெறும் பேச்சையும், கோஷத்தையும் வைத்துக் கொண்டு என்ன பண்ணுவது என்று நம் தலைவர்கள் திகைக்கலாம்.

இதில்தான் நம் தலைவர்கள் செய்யும் ஒரு பெரிய தப்பிதம் இருக்கிறது. அவர்கள் செயல் வேறு, பேச்சு வேறு என்று நினைக்கிறார்கள். பேச்சே ஒரு செயல்தான் என்பதை அவர்கள் உணரவில்லை.

விஞ்ஞானம் தெரிந்தவர்கள் எப்படி சலனம், உஷ்ணம், மின்சாரம், காந்தம் முதலியவை சக்திகளோ அதே மாதிரி சப்தமும் ஒரு சக்திதான் என்று கூறுவார்கள். எப்படி ரூபாயை அணாவாகவும், அணாவை ரூபாயாகவும் மாற்ற முடியுமோ, அதே மாதிரி இந்த சக்திகளையும் ஒன்றை ஒன்றாக மாற்றவும் முடியும்.

உதாரணமாக, சலன சக்தியை சப்த சக்தியாக மாற்றலாம், சப்த சக்தியை சலன சக்தியாக மாற்றலாம். ஆகாய விமானம் பறந்தால் எப்படி சப்தம் உண்டாகிறதோ, அதேமாதிரி சப்தத்தைக் கொண்டே ஆகாய விமானத்தைப் பறக்கச் செய்யலாம்.

ஆகவே இதை மனதில் வைத்துக் கொண்டு யோசித்துப் பார்க்கும்போது சுயராஜ்யத்துக்காக நமக்கு இப்பொழுது தேவை ஒரு சிறந்த விஞ்ஞானி, அதுவும் சப்த சக்தியை எல்லாம் ஒன்று திரட்டி ஒரே பெரிய சலன சக்தியாக மாற்றக்கூடிய விஞ்ஞானி.

அப்பொழுது நாம் எத்தனை வந்தே மாதரம் கத்தினாலும், அல்லது 'ஜே ஹிந்த்!' கோஷம் போட்டாலும், அது காற்றில் மறைந்து வீணாகிப் போய் விடாது. அதை இந்த விஞ்ஞானி தற்காலத்திய கிராமபோன் ரிகார்டுகளில் பாட்டைப் பிடித்து வைத்துக்

கொள்கிறார்களே அதைப்போல் பிடித்து வைத்துக் கொண்டு விடுவார். இப்படியே நாடு முழுவதும் போய்ப் பிடித்து வைத்துக் கொள்வார்.

இந்தச் சப்த ரிசர்வ் பாங்கிக்கு உதவி செய்ய நான் முந்தி, நீ முந்தி என்று நம் ஜனங்கள் போட்டி போடுவார்கள் என்பதில் சந்தேகமில்லை.

அதிலும் கெட்டிக்கார விஞ்ஞானியாய் இருந்தால், இரண்டு கட்சிகளுக்குள் ஏதாவது சண்டை மூட்டி விட்டால் போதும், ஒருவரை யொருவர் ஏசும் சப்தமும், தங்களைத் தாங்களே புகழ்ந்து கொள்ளும் சப்தமும், வாழ்க சப்தமும், வீழ்க சப்தமும் எல்லாம் சேர்ந்து காதைத் துளைக்கும் என்பதில் தடையில்லை. இதையெல்லாம் அந்த விஞ்ஞானி பிடித்து வைத்துக் கொள்ளலாம்.

இன்னும் நம் சுதந்திர இயக்கங்களில் ஸ்திரீகள் இதுவரை போதிய பங்கு வகிக்கவில்லை.

நம்முடைய தேசபக்தியை நம்முடைய தொண்டை பலத்தைக் கொண்டு கணக்கிட்டால் ஒவ்வொரு ஸ்திரீக்கும் பத்து புருஷர்களுக்கு உள்ள தேசபக்தி இருக்கிற விஷயம் புலப்படும்.

இன்னும் சாதாரண காலங்களில் புருஷர்கள் விடிந்ததும் விடியாததுமாக வயிற்றில் சோற்றைக் கொட்டிக்கொண்டு காரியாலயங்களுக்கு ஓடுவதே இந்த ஸ்திரீகளின் வாய்க்குப் பயந்து தான். விடுமுறை நாட்களில் கூட வீட்டில் தங்காமல் சிட்டாய்ப் போய் விடுவதும் இதே காரணத்தினால்தான்.

ஆக, ஸ்திரீகளின் குரலை எல்லாம் ஒன்று சேர்த்தாலே போதும். அதைச்சலன சக்தியாக மாற்ற வேண்டிய சிரமத்தைக் கூட எடுத்துக்கொள்ள வேண்டிய தில்லை. இந்த ஒன்று திரண்ட சப்தத்தைக் கேட்டாலே போதும்; "வெள்ளையனே! வெளியே போ" என்று கூடச்சொல்ல வேண்டியதில்லை; அவர்களாகவே, "செத்தோம், பிழைத்தோம்" என்று ஓடிப்போய் விடுவார்கள்.

ஆகவே நாட்டின் எல்லாப் பாகங்களுக்கும் போய், எல்லா சப்தத்தையும் ஒன்று சேர்த்து ஒரு பெரிய சப்த சக்தியாகவோ, அல்லது ஒரு பெரிய சலன சக்தியாகவோ மாற்ற வேண்டும்.

பெரிய சப்த சக்தியாக மாற்றினால், அது அண்ட பேரண்டங்களும் அதிர்ந்து விழும்படியாக இருக்கும். அண்ட பேரண்டங்களும் அதிர்ந்து விழும்போது இங்கிலாந்து எம்மாத்திரம்?

இல்லை, இத்தனை சப்தத்தையும், சலன சக்தியாக மாற்றினாலோ, இந்த சக்தி அணு குண்டுகளை யெல்லாம் சிதற அடித்து விடும் என்பதிலும் தடையில்லை.

ஆகவே அத்தகைய விஞ்ஞானி யொருவரைக் கண்டு பிடிக்குமாறு தலைவர்களைக் கேட்டுக் கொள்கிறேன். அதற்கிடையில் எத்தனை சப்தம் போட்டுக் கத்த முடியுமோ, அத்தனை சப்தம் போட்டுக் கத்திப் பழகிக் கொள்ளும்படி நம் மக்களைக் கேட்டுக் கொள்கிறேன்.



# “இதோ வந்து விட்டேன்!”

எனக்கு வர, வர நண்பர்கள் வீட்டுக்குப் போவதென்றாலே பிடிக்க மாட்டேன் என்கிறது. எந்த நண்பர் வீட்டுக்குப் போனாலும் சரி, அவர்கள் நம்மோடு முகம் கொடுத்துப் பேசினால்தானே?

ஆளைக் கண்டதும், “வாங்கோ ஸார், வாங்கோ ஸார்!” என்று பல்லை இளித்துக் கொண்டே நாற்காலியை இழுத்துப் போட்டு விட்டு, “சௌக்கியந்தானா?” என்று ஒரு வார்த்தை கேட்கிறார்களே, அவ்வளவுதான் அவர்கள் நம்மோடு பேசும் பேச்சு!

அப்படித்தான், அன்றொரு நாள் ஒரு நண்பர் வீட்டுக்குப் போயிருந்தேன். என்னைக் கண்டதும், “வாங்கோ ஸார்! வாங்கோ ஸார்!” என்று பல்லை இளித்தார். உடனே பக்கத்தில் இருந்த நாற்காலியில் உட்காரச் சொன்னார். நான் உட்கார்ந்தேன். நண்பரும் ஒரு நாற்காலியை இழுத்துப் போட்டுக் கொண்டு உட்கார்ந்தார்.

அப்பாடா, இந்த ஒரு நண்பராவது முகம் கொடுத்துப் பேசுவார் போலிருக்கே என்று நான் சந்தோஷப் பட்டுக் கொண்டிருக்கையில், “இதோ வந்து விட்டேன் ஸார்!” என்றார். அவ்வளவு தான். மின்னலைப்போல் பாய்ந்து எங்கேயோ மறைந்தார்.

நான் ஒரு கணம் திகைத்தேன். நண்பர் அத்தனை வேகமாக எங்கு மறைந்திருப்பார் என்று புரியவில்லை. பிறகு கொஞ்ச நேரம் கழித்துச் சமையலறையிலிருந்து ஏதோ கசு, முசு என்று சப்தம் கேட்கவே, “அட ஈஸ்வரா! இந்த நண்பர் வீட்டிலும் அந்தப் பழைய தொல்லைதானா?” என்று நான் அங்கலாய்த்தேன்.

ஏனென்னில் அந்தக் கசு, முசு சம்பாஷணைக்கு என்ன அர்த்தம் என்பது எனக்குத் தெரியும். எனக்கு என்ன டிபன் கொடுப்பது என்பதைப் பற்றிக் கணவனுக்கும் மனைவிக்கும் மந்திராலோசனை நடக்கிறது என்று நான் அதிலிருந்து தெரிந்து கொண்டேன்.

கொஞ்ச நேரம் கழித்து நண்பர் சமையலறையிலிருந்து வெளியே வந்தார். வரும் போதே ஒரு அசட்டுச் சிரிப்பு சிரித்துக்

கொண்டே வந்தார். வந்து திரும்பவும் நாற்காலியில் அமர்ந்து ஏதோ பேசத் தொடங்கினர். நானும் பேசத் தொடங்கினேன். ஆனல் நான் என்ன பேசினேன் என்று அவர் கவனித்தாரா என்பது சந்தேகந்தான். அவர் ஞாபகம் எல்லாம் சமையலறைப் பக்கமே இருந்ததே யொழிய என் பக்கமே இல்லை.

திடீரென்று சமையலறைப் பக்கம் சற்று நிழல் தட்டியது. "இதோ வந்து விட்டேன், ஸார்!" என்றார் நண்பர். அவ்வளவு தான். மின்னலைப்போல் உள்ளே மறைந்தார். திரும்பவும், பழையபடி சமையலறையிலிருந்து கசு, முசு சப்தம் கேட்டதும், திரும்பவும் டிபன் விஷயமாக மந்திராலோசனை நடக்கிறது என்று தெரிந்து கொண்டேன்.

முன் நடந்த கூட்டத்தில் நண்பர் இன்ன டிபன் வேண்டும் என்று ஏதோ ஜம்பமாகச் சொல்லிவிட்டு வந்துவிட்டாரே யொழிய, அதற்கு வேண்டிய பண்டங்கள் வீட்டில் இருக்கின்றனவா என்று கவனிக்கவில்லை போலும்! அதுதான் அம்மாளின் குரல் சற்று உரத்துக் கேட்டது!

மந்திராலோசனை முடிந்து நண்பர் வெளியே வந்தார். முன்னல் காணப்பட்ட அசட்டுச் சிரிப்புக்கூட இந்தத் தடவை காணேம். ஏதோ பெரிய கவலையில் ஆழ்ந்து விட்டவர்போல் முகத்தை வைத்துக் கொண்டு வந்தார். என்னைக் கண்டதும், "இதோ வந்து விட்டேன், ஸார்" என்றார். அவ்வளவுதான். எங்கேயோ வாசல் பக்கம் சிட்டாய்ப் பறந்தார்.

நண்பர் திரும்பி வருவதற்கு ஒரு அரை மணி நேரம் ஆயிற்று. அந்த அரை மணி நேரமும் எனக்கு அரை யுகமாகப் போயிற்று.

வீட்டிலோ என்னையும், நண்பர் மனைவியையும் தவிர வேறு யாரும் கிடையாது. என்னமோ காரணம் தெரியாமல் நெஞ்சு திக் திக் என்று அடித்துக் கொண்டது. பேசாமல் வீட்டுக்குத் திரும்பி விடலாம் என்றாலோ, நண்பர் திரும்பி வந்ததும் ஏதாவது நினைத்துக் கொள்வார். ஆகவே வேறு வழியின்றி மேலேயுள்ள உத்தரங்கள் எத்தனை என்று திரும்பத் திரும்பக் கூட்டிப் பார்த்துக்கொண்டிருந்தேன்.

ஆனால் உத்தரங்களை எத்தனை தடவை தான் கூட்டிப் பார்க்கிறது? ஒவ்வொரு கட்டிடங்களைச் செங்கற்கள் தெரியும்படி ஒரு புது மோஸ்தராகக் கட்டியிருக்கிறார்களே, அதே மாதிரி இந்த வீட்டையும் கட்டித் தொலைத்திருக்கக் கூடாதா என்று வீட்டின் சொந்தக்காரரையும், வீட்டைக் கட்டிய கொத்தனார்களையும் சபித்தேன். ஏனெனில் அப்பொழுது நண்பர் திரும்பி வரும் வரை பக்கத்துக்கு எத்தனை செங்கற்கள் என்று எண்ணிக் கொண்டிருக்கலாம் அல்லவா?

கடைசியில் நண்பர் ஏதோ சாமான்களைத் தூக்கிக்கொண்டு திரும்பி வந்தார். பாவம், தாம் வாங்கிக்கொண்டு வந்த சாமான்களை மறைப்பதற்காக அவர் தவியாய்த் தவித்தது பார்க்க மிகக் கண்றாவியாய் இருந்தது.

கூடத்தில் உட்கார்ந்து கொண்டிருக்கும் என்னைத் தாண்டிக் கொண்டுதானே சமயலறைக்குப் போகவேண்டும்? பாவம், தம் கையில் இருந்த சாமான்களை நான் பார்க்காமல் இருப்பதற்காக தம் எண் ஜாண் உடம்பை ஒரு ஜாணாகக் குறுக்கிக் கொண்டார். இருந்தும் என்ன பிரயோசனம்? நான்தான் கூர்ச்சம் மாதிரி வழியில் உட்கார்ந்திருக்கிறேனே?

ஆகவே என்னைக் கண்டதும், "இதோ வந்துவிட்டேன், ஸார்!" என்று சமையலறைக்குள் நுழைந்தார். உள்ளே திரும்பவும் கசு, முசு சப்தம்.

கொஞ்ச நேரம் கழித்து வெளியே வந்தார். பக்கத்தில் இருந்த நாற்காலியில் உட்கார்ந்து பேச ஆரம்பித்தார்.

அப்பாடா! இனிமேல் கவலையில்லை, நண்பரோடு சாவகாசமாகப் பேசலாம் என்று நான் நினைக்கத் தொடங்கியதுதான் தாமதம், சமையலறையில் நிழல் தட்டியது. உடனே நண்பர், "இதோ வந்து விட்டேன்" என்று அடுத்த கணமே வேதாளம், முருங்கை மரத்துக்குத் தாவுவது போல் தாவினார்.

கொஞ்ச நேரம் கழித்துச் சமையலறையிலிருந்து திரும்பி வந்தார். சரி, நம்மோடு பேசத்தான் வருகிறாராக்கும் என்று நான் சந்தோஷப்பட்டுக் கொண்டிருக்கையில், "இதோ வந்து விட்-

டேன்" என்று சொன்னார். அவ்வளவுதான். திரும்பவும் நான் மேலே எத்தனை உத்தரங்கள் இருக்கின்றன என்று எண்ண வேண்டி வந்தது!

இந்த மாதிரி நான் என் நண்பர்களிடம் எவ்வளவோ அவதிப் பட்டிருக்கிறேன். வந்தவனுக்கு டிபன் பண்ணிக் கொடுத்துவிட்டுத்தான் மறு காரியம் என்று அவர்களுக்கு இருக்கும் ஆவலில் என்னோடு பேசவே மாட்டார்கள். ரவை வாங்குவதற்கு ஒரு நடை, பால் வாங்குவதற்கு ஒரு நடை, சர்க்கரை வாங்குவதற்கு ஒரு நடை, இம்மாதிரி ஒவ்வொன்றுக்கும் "இதோ வந்து விட்டேன்" என்று வெளிக் கிளம்பிக் கொண்டே யிருப்பார்கள்.

இல்லை, எல்லாச் சாமான்களும் வாங்கிக்கொடுத்த பிறகாவது நம்முடன் நிம்மதியாக உட்கார்ந்து பேசுவார்கள் என்கிறீர்களா? கிடையாது. எப்பொழுது பார்த்தாலும் சமையலறைப் பக்கமே பார்த்துக்கொண்டு, ஆத்துக்காரிக்குக் கூடமாட ஏதாவது ஒத்தாசை செய்வதற்காக "இதோ வந்து விட்டேன்" என்று சொல்லி விட்டுச் சமையலறைக்குக் கம்பி நீட்டி விடுவார்கள். இந்த ஆத்துக்காரிகளுக்கு இப்பொழுது என்றுதான் ஒவ்வொரு காரியத்துக்கும் ஆத்துக்காரின் ஒத்தாசை தேவையாக இருக்கும்!

மனைவியுடன் தனிக் குடித்தனம் பண்ணும் நண்பர்களிடம் இந்த மாதிரி அவதிப் பட நேரிடுகிறது என்றால், குழந்தை, குட்டிகள் உள்ள நண்பர்கள் நமக்குக் கொடுக்கும் அவதி அத்தனைக் கத்தனை அதிகம்!

ஆனால் முதலில் என்னமோ குழந்தை குட்டிகள் உள்ள இந்த நண்பர் தேவலை என்றுதான் நினைத்து நான் ஏமாந்து போனேன். ஏனெனில் "இதோ வந்து விட்டேன்" என்று சொல்லிவிட்டு இவர் சமையலறைக்குள் நுழைந்து விட்டுத் திரும்பும் போதெல்லாம் இவர் கூடவே ஒரு குழந்தை வெளியில் வரும். நண்பர் நேரே என் பக்கத்து நாற்காலிக்கு வருவார். குழந்தை சாமான் வாங்கிக் கொண்டு வருவதற்காக வாசலுக்குப் போகும். முதலில் சொன்ன குழந்தை வெளியில் போய் ஒரு நிமிஷங்கூட ஆகி யிருக்காது, நண்பர், "இதோ வந்து விட்டேன்" என்று சொல்லிவிட்டுச் சமையலறைக்குள் நுழைவார். திரும்பி வரும்போது இன்னொரு

குழந்தையுடன் வருவார். நண்பர் நேரே என் பக்கத்து நாற் காலிக்கு வருவார். குழந்தை சாமான் வாங்குவதற்காக வெளியில் செல்லும்.

இப்படியாகத்தானே நண்பர் உள்ளே செல்லும் ஒவ்வொரு நடைக்கும் ஒரு குழந்தை வெளியே வந்து சாமான் வாங்கப் போகும்.

"போனால் போகிறது, இருக்கிற குழந்தைகள் அத்தனையை யும் கடைக்கு விரட்டும் வரையில் தானே மாறி, மாறி, சமைய லறைக்குள் நுழைந்து கொண்டிருப்பார்; அதற்குப் பிறகாவது நம்மோடு நிம்மதியாகப் பேசுவார் அல்லவா?" என்று நான் நினைத் தேன். ஆனால் என்ன ஏமாற்றம்!

டிபனுக்கு வேண்டிய எல்லாச் சாமான்களும் வீட்டுக்கு வந்த பிறகு கூட நண்பர், "இதோ வந்து விட்டேன்" "இதோ வந்து விட்டேன்" என்று சொல்லிக் கொண்டும், உள்ளே போய்க் கொண்டு மிருந்தார்.

மனைவியுடன் தனிக் குடித்தனம் பண்ணும் நண்பர் ஒரு அரை மணி நேரத்துக்குள் அறுபது "இதோ வந்து விட்டேன்" சொன்னால் இவர் அறுநூறு "இதோ வந்து விட்டேன்" சொன்னார்.

என்ன டிபன் கொடுக்கலாம் என்பதற்கு ஒரு "இதோ வந்து விட்டேன்," அழும் குழந்தையைச் சமாதானப் படுத்துவதற்கு ஒரு "இதோ வந்து விட்டேன்," துஷ்டத்தனம் பண்ணும் பிள்ளையை அடக்குவதற்கு ஒரு "இதோ வந்து விட்டேன்," வாசலில் பம்பரம் விளையாடிக் கொண்டிருக்கும் பையனை அதட்டுவதற்கு ஒரு "இதோ வந்து விட்டேன்!" ஆக இப்படி எடுத்ததற் கெல்லாம் "இதோ வந்து விட்டேன்" என்று கொல்லிவிட்டு ஓடிப் போய்க் கொண்டே இருந்தார்.

ஐயோ! ஏண்டா இந்த நண்பரிடம் அகப்பட்டுக் கொண் டோம் என்று எனக்கு ஆகிவிட்டது. லூட்டி அடித்த அந்தக் குழந்தைகள் மீது எனக்கு ஆத்திரம் ஆத்திரமாக வந்தது.

இத்தகைய நண்பர்களைக் கண்டு, நானும் "இதோ வந்து விட்டேன்" என்று சொல்லி விட்டு ஓடி ஒளிவதைக் கண்டு நீங்கள் ஆச்சரியப்பட மாட்டீர்கள் என்று நம்புகிறேன்.



# கடன் தீர்ந்தது!

அப்பாடா!... கடன் தீர்ந்தது!... இதனால் எனக்கு ஏற்பட்ட சந்தோஷத்தை எப்படி விவரிப்பேன்! காணாமற்போன ரேஷன் கார்டு கண்ணில் பட்டது போலவும், ஏறப்போன ரயில் வண்டியில் இடம் கிடைத்தது போலவும் ஆனந்தப் பட்டேன்.

வீணாகக் கடன் வாங்குவானேன்? பிறகு கடன் தீர்ந்தது என்று களிக்கூத்தாடுவானேன் என்று நீங்கள் கேட்கலாம்.

கடன் நான் வாங்கவில்லை, ஐயா! நான் வாங்கவில்லை. நான் கொடுத்த கடன் இத்தனை நாளைக்குப் பிறகு திரும்பி வந்தது. அது தான் இப்படிச் சந்தோஷப் படுகிறேன்.

"யாராவது கொடுத்த கடன் திரும்பி வந்ததற்கு இப்படிச் சந்தோஷப் படுவார்களா?" என்று கேட்கிறீர்களோ?

என் நண்பர் (என் நண்பரா அவர்?) அண்ணாமுத்துவை உங்களுக்குத் தெரியாது. இல்லை, தெரிந்திருக்கலாம். ஆனால் என்னைப்போல் கடன் கொடுத்திருக்க மாட்டீர்கள்.

ஊஹூம். அண்ணாமுத்து அத்தனை அசடு அல்லவே! தமக்குத் தெரிந்த யாரிடமிருந்தும் அவர் கடன் வாங்காமல் விடமாட்டாரே? ஆகவே உங்களுக்கு அவரைத் தெரியாது என்றுதான் வைத்துக்கொள்ள வேண்டும்.

அதுதான் இப்படிக் கேட்கிறீர்கள். இல்லாவிடில் நீங்கள் எனக்குமேல் தலைகால் தெரியாமல் குதித்துக்கொண்டிருப்பீர்களே!

அண்ணாமுத்துவிடம் நான் கடன் கொடுத்த மறு நாளே என் நண்பர் ஒருவர் சொன்னார்:

"அண்ணாமுத்துவிடம் கடன் கொடுத்துவிட்டீர்களே, ஐயா! அந்த மனுஷன் லேசில் திருப்பித் தரமாட்டாரே! ஒரு அரை டஜன் செருப்பாவது பிரயோகப் படுத்தினால்தான்—"

"என்ன ஐயா, செருப்பை எடுத்து அடிக்கச் சொல்கிறீர்கள்? அவர் அப்படியே நம்மைத் திருப்பி வாங்கிவிட்டால்?"

"என்ன ஐயா, பயித்தியக்காரராக இருக்கிறீர்? அவரையா நான் அடிக்கச் சொன்னேன்? பணம் திருப்பி வாங்குவதற்காக

அடிக்கடி அலையவேண்டி நேரிடும், அதனால் அரை டஜன் செருப் பாவது தேயுமே என்று சொல்ல வந்தால்—" என்று வாக்கியத்தை முடிக்காமலேயே நண்பர் போய்விட்டார்.

இவர் அண்ணாமுத்துவைப் பற்றி எவ்வளவு தவறுதலான அபிப்பிராயம் கொண்டிருக்கிறார் என்பது எனக்கு இப்பொழுது தான் தெரிந்தது அரை டஜன் செருப்பு தேயும் என்றல்லவா சொன்னார்? அத்தனையும் பொய்.

நான் நேற்றுக் கணக்குப் பார்த்ததில் ஒரு டஜன் செருப்புகள் தேய்ந்திருக்கின்றன என்று தெரிந்தது.

ஆம்; அண்ணாமுத்து விடமிருந்து கொடுத்த பணத்தைத் திருப்பி வாங்குவதற்காக அத்தனை நடைகள் நடந்தேன்.

ஒவ்வொரு தடவையும் அண்ணாமுத்து 'வீட்டில் இருக்க மாட்டார்'—அதாவது 'வீட்டில் இல்லை' என்று தான் பதில் வரும். ஆனால் இந்தப் பதிலைப் பொருட்படுத்தாமல் திண்ணையிலேயே சத்தியாக்கிரகம் செய்தால் கட்டாயம் அவரைச் சந்தித்து விடலாம்.

வீட்டிற்குள் இருக்கிறவர் கட்டாயம் ஏதாவது ஒரு காரியத் துக்காக வெளியே வந்துதானே ஆகவேண்டும்? இல்லை, அப்படித் தான் வெளியில் போயிருந்தார்—வீட்டுக்காரர்கள் "இல்லை" யென்று சொல்லும் தகவல் நடுவில் எப்பொழுதாவது உண்மை யாகவும் இருக்கலாம் அல்லவா?—கட்டாயம் வீடு திரும்பித்தானே ஆகவேண்டும்?

ஆகவே நான் அண்ணாமுத்துவைத் தேடிக்கொண்டு போகும் ஒவ்வொரு சமயமும் அவர் தரிசனம் கிடைக்க ஒரு மணி நேரமா வது ஆகும்.

கடைசியில் அண்ணாமுத்து வெளியில் வருவார். வரும் போதே தம் முப்பத்திரண்டு பற்களையும் காட்டிக்கொண்டுதான் வருவார்.

"என்ன ஐயா! காப்பி சாப்பிட்டாச்சா! காப்பி வாங்கிக் கொண்டு வரச் சொல்லட்டுமா?" என்பார்.

அவ்வளவுதான்! "காப்பி" என்ற இந்த சப்தம் காதில் விழுந்ததுமே எனக்கு அண்ணாமுத்துவின் மேல் இருந்த கோப மெல்லாம் பறந்தோடிப் போய்விடும். பாவம், நல்ல மனுஷன், இவரிடம் பணத்தை நல்ல முறையில்தான் கேட்க வேண்டும் என்று தீர்மானித்து விடுவேன்.

அத்தனைக்கும் அத்தனை நாளாக அலைக்கழித்து, பணம்கொடாமல் ஏமாற்றிக் கொண்டு வருவதற்காக அண்ணாமுத்துவை எப்படியெல்லாம் வையவேண்டும் என்று அன்று காலையில்தான் ஒத்திகை செய்து பார்த்திருப்பேன். எந்தெந்த வசவுகளை உபயோகப்படுத்தினால் கை கலக்கும்படியான நிலைமை ஏற்படாது, எந்தெந்த வசவுகளை உபயோகப்படுத்தினால் நிலைமை முற்றிவிடும் என்றெல்லாம் நினைத்துப் பார்த்திருப்பேன். அண்ணாமுத்து எத்தனை சாமர்த்தியமாகப் பேசினாலும் ஏமாந்து விடுவதில்லை, கண்டிப்பாகவே பேசித் தீர்த்து விடுவது என்று கங்கணம் கட்டிக் கொண்டிருப்பேன்.

ஆனால் என்ன பிரயோஜனம்? அந்தக் 'காப்பி' என்ற வார்த்தை என்னை அப்படியே நல்லவனாக மாற்றித் தொலைத்து விடுகிறதே, என்ன பண்ணலாம்!

ஆகவே அவரிடம் சுமுகமாகவே பேச ஆரம்பிப்பேன். "என்ன அண்ணாமுத்து! உங்கள் வியாபாரம் எல்லாம் எப்படி நடக்கிறது?" என்று வெகு அக்கரையாக விசாரிக்க ஆரம்பிப்பேன். (அவர் வியாபாரம் எப்படி நாசமாகப் போய்த் தொலைந்தால் என்ன? இந்தப் பணத்துக்காக இப்படியெல்லாம் கேட்டுத் தொலைக்க வேண்டி யிருக்கிறது!) இன்னும் அவருடன் சேர்ந்து கொண்டு, அவருக்குப் பிடிக்காதவர்களை யெல்லாம் நானும் ஒரு பாட்டம் வைவேன்.

நாங்கள் இருவரும் பேசும் முக்கால்வாசி நேரம் இதுமாதிரிப் பேச்சுக்களிலேயே போய்விடு மாகையால் பண விஷயத்தைக் கடைசியில் தான் பிரஸ்தாபிக்க முடியும்.

கொடுத்த கடனைத் திருப்பிக் கேட்பதில் உள்ள இன்னொரு கஷ்டத்தைப் பாருங்கள்.

இதுவரை எத்தனையோ பேரைப் பார்த்திருக்கிறேன். நான் கடன் வாங்கி அலைய விட்டவர்களையும் கவனித் திருக்கிறேன். ஒருவராவது, "கொடுத்த பணம் என்னுடையது. ஆகவே அதைத் திருப்பிக்கொடு" என்று அதிகாரமாகக் கேட்பதில்லை. ஏதோ யாசகத்துக்கு வந்தவர்கள்போல், "எனக்கு இந்தச் செலவு இருக்கிறது, எனக்கு அந்தச் செலவு இருக்கிறது, தயிர்க்காரிக்குப் பாக்கியிருக்கிறது, பால்காரனுக்குப் பாக்கியிருக்கிறது" என்று பஞ்சப் பாட்டுத்தான் பாடுகிறார்கள்.

"ஊரோடு ஒத்து வாழ்" என்னும் வாக்கியத்தை நான் வேறு இனங்களில் கடைப் பிடிக்காவிட்டாலும் இது விஷயத்தில் கடைப் பிடிக்கத்தான் வேண்டி யிருக்கிறது.

அண்ணாமுத்துவிடம் நானும் இதே பஞ்சப் பாட்டைத்தான் பாடுவேன்.

வீட்டுக்காரனுக்கு ஆறுமாத வாடகை பாக்கி என்று அழுவேன்.

(இது விஷயம் என் வீட்டுக்காரர் காதில் விழுந்தால் அவர் இடி, இடி என்று சிரிப்பார். ஆறுமாத வாடகையைப் பாக்கி விட்டுவைக்க நான் என்ன பயித்தியக்காரனா என்று கேட்பார்.)

வைத்தியருக்குப் பணம் பாக்கி என்பேன். பாட்டியார் செத்துவிட்ட பத்தாவது நாள் என்பேன்.

ஆனால் இத்தனைக்கும் அண்ணாமுத்து மசியமாட்டார். என்னை அப்படியே சொக்குப்பொடி போட்டு மசிய வைக்க ஒரு நல்ல வழி கண்டுபிடித்து வைத்திருக்கிறார்.

"என்ன ஐயா! கதை விடுகிறீர்? உமக்கு எங்கே ஐயா வந்தது பணக் கஷ்டம்? உமக்குத்தான் மாதம் பிறந்தால் சொளை சொளையாகச் சம்பளம் கிடைத்து விடுகிறதே?" என்று நான் வாங்கும் சம்பளத்தை நான்கு மடங்கு மிகைப்படுத்திக் கூறுவார்.

உங்களைத்தான் கேட்கிறேன். நான்கு பேருக்கு நடுவில் ஒருவர் நம் சம்பளத்தை இப்படி அதிகப்படியாகச் சொல்லும் போது "எனக்கு அத்தனை சம்பளம் இல்லை. குறைச்சல்தான்" என்று சொல்ல மனவருமா? அத்தனை சம்பளம் வாங்குகிறவர்கள் போலவும், உண்மையில் நமக்குப் பணக் கவலையே கிடையாது போலவும் தானே நடிக்கத் தோன்றும்?

ஆகவே நானும் அப்படியேதான் நடிப்பேன். பணத்தைப் பற்றி அதிகம் நச்சரிக்காமல் வீட்டுக்குத் திரும்பி விடுவேன்.

'கடன் கேட்காமல் கெட்டது, நிலம் பார்க்காமல் கெட்டது' என்று வசனம் சொல்வார்கள். அந்த வசனம் எனக்கும் தெரியும். இருந்தும் அதற்காக அண்ணாமுத்துவை அடிக்கடி கேட்க முடி கிறதா? முதலில் காரியாலய வேலையை யெல்லாம் கெடுத்துக் கொண்டு, அவரைப் பார்ப்பதற்கென்றே மூன்று மணி நேரம் ஒதுக்கிவைக்க வேண்டியிருக்கிறது.

இரண்டாவது, அடிக்கடி இதே பண விஷயமாகவே போய்ப் பார்த்தால் சள்ளென்று விழுவாரோ என்று பயமாக இருக்கிறது.

இதற்காக நான் அண்ணுமுத்துவை வேறு காரியம் இருந்தால் கூடப் பார்க்கப் போவதில்லை. பணம் கேட்கத்தான் வந்திருக்கிறேனே என்று நினைத்துக்கொண்டு விட்டால் என்ன பண்ணுவது என்று பயம்! தெருவில்கூடத் தப்பித் தவறி எதிரே தென்பட்டால் இதேமாதிரி நினைத்துக் கொண்டுவிடப் போகிருரோ என்று பயந்துகொண்டு தெருவில் பார்த்துத்தான் நடப்பேன்.

சில சமயங்களில் இவருக்குப் பயந்துகொண்டு பக்கத்தில் உள்ள ஏ. ஆர். பி. ஷெல்டருக்குள் நுழைந்திருக்கிறேன். அண்ணுமுத்து அப்பால் போகும் வரை, ஜப்பான் எதிரியின் குண்டுகளிடமிருந்து நம்மைக் காப்பாற்றுவதற்காகக் கட்டப்பட்ட ஏ. ஆர். பி ஷெல்டர்கள், இப்பொழுது அண்ணுமுத்துவிடமிருந்து என்னைக் காப்பாற்றும் விந்தையைக் குறித்து வியந்து கொண்டே நிற்பேன்.

இப்பொழுது ஏ. ஆர். பி. ஷெல்டர்கள் இடிக்கப்பட்டு விட்டதால் நான் நேர் வழியை விட்டுச் சந்து பொந்துகளில் புகுந்து. பிறகு திரும்பிவர வழி தெரியாமல் திண்டாடவேண்டியிருக்கிறது. ஆனுல் எத்தனை நாளைக்குத்தான் இந்தமாதிரி கஷ்டப் படுவது?

ஒரு நாள் எனக்குக் கோபம் தாங்கவில்லை. உடனே புறப்பட்டேன். விடு, விடென்று நடந்தேன். பக்கத்தில் இருந்த பிள்ளையார் கோவிலுக்குள் நுழைந்தேன்.

நான் இப்படிக் கஷ்டப் படுவதைக் குத்துப் பிள்ளையாராட்டம் பார்த்துக் கொண்டிருக்கிறீர்களே என்று பிள்ளையாரை நொந்து கொண்டேன்.

அடுத்த நாளே பிள்ளையார் ஒரு நண்பர் உருவத்தில் வந்து சேர்ந்தார். நான் அண்ணுமுத்துவை அடிக்கடி பார்க்கப் போவதைக் கவனித்துக் கொண்டிருந்த ஒரு நண்பர், தாம் அண்ணுமுத்துவுக்குக் கொடுக்கவேண்டிய பணத்தை என்னிடம் கொடுத்துக் கொடுக்கச் சொன்னுர். அந்தப் பணத்தை நானே வைத்துக் கொண்டு 'கடன் தீர்ந்தது' என்று அண்ணுமுத்துவுக்குக் கடிதம் எழுதி விட்டேன். அப்பாடா! கடன் தீர்ந்தது!

# கண்ணன் வரக்காணேன்!

வீட்டில் யாரும் இல்லை. எல்லாரும் சினிமாவுக்குப் போய் விட்டார்கள். போகும் போது, "நானும் கூடத்தான் வருவேன்" என்று அனு அடம் பிடித்து அழுததால் என் தாயார் அவளையும் தூக்கிக் கொண்டு போய்விட்டாள். வீட்டில் சரசு மாத்திரம் இருந்தாள்.

இந்த மாதிரி தனியாக விடப்பட்ட இளம் தம்பதிகள் சற்று அசட்டுப் பிசட்டென்று தான் நடந்து கொள்வார்கள் என்பது இம்மாதிரித் தனியாக விடப்பட்ட எல்லா இளம் தம்பதிகளுக்கும் தெரிந்திருக்கும்.

அப்பொழுது என்றுதான் அவர்களுக்குப் பேசுவதற்கு மூட்டை மூட்டையாக விஷயங்கள் காத்திருப்பதுபோல் தோன்றும். அப்பொழுது என்றுதான் ஒருவரை விட்டு ஒருவர் வெகுநாள் பிரிந்திருந்தது போலவும் அப்பொழுதுதான் சந்தித்தது போலவும் தோன்றும். கலியாணத்தின் போது நடந்த சின்னச் சின்ன விஷயங்கள், பெண்ணைக் கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு போன போது பெண்ணின் கையை நாம் சற்று அவசியத்துக்கு அதிகமாகவே பிடித்து அழுத்தியது, மணப் பந்தலில் உத்தரீயத்தைச் சரிப்படுத்திக்கொள்ளும் போது பக்கத்தில் உட்கார்ந்திருந்த பெண்ணின் கன்னத்தில் தவறுதலாகக் கை பட்டு விட்டது போல், நாம் வேண்டுமென்றே பெண்ணின் கன்னத்தில் இடித்தது, மாமனாரைத் தேட வந்ததுபோல் பெண் தனியாக உட்கார்ந்திருந்த அறையில் நுழைந்தது ஆகிய இது போன்ற அநேக சின்னச் சின்ன விஷயங்கள் ஞாபகத்துக்கு வரும்.

நானும் சரசுவும் இந்த விஷயங்களை இது வரையில் ஒரு லட்சம் தடவைக்குக் குறையாமல் ஞாபகப் படுத்திக் கொண்டிருப்போம்.

அன்று லட்சத்து ஓராவது தடவையாக ஞாபகப்படுத்திக் கொண்டிருக்கையில் சரசுவின் பார்வை என் கிராப்பின் மீது சென்றது.

"ஐயையோ!" என்றாள்.

"என்ன?" என்றேன்.

"என்ன, உங்கள் தலை அதற்குள் நரைத்து விட்டதே! இதோ நெற்றிப் பொட்டுக்குப் பக்கத்தில் நாலைந்து நரை காணப் படுகிறதே! அதற்குள் இப்படி நரைப்பானேன்?"

"எல்லாம் கவலைதான்."

"கவலையா! என்ன கவலை?"

"பெண்ணைப் பெற்ற பிறகு என்ன கவலை என்று கேட்கிறாயே? இன்னும் பதினேழு வருஷம் போனால் அனுவுக்குக் கலியாணம் பண்ண வேண்டாமா? அந்தக் கவலைதான்."

"ரொம்ப அழகுதான். இங்கே பக்கத்தில் வாருங்கள். அந்த நரையை எடுத்து விடுகிறேன்."

நான் பக்கத்தில் நெருங்கினேன். அந்தச் சமயம் ஏதோ நிழல் தட்டவே இருவரும் திடுக்கிட்டுத் திரும்பினோம். வாசல் நிலைப்படியில் என் பால்ய நண்பன் கண்ணன் நின்று கொண்டிருந்தான். கண்ணனைக் கண்டதும் சரசு வெட்கப்பட்டுச் சுருட்டி வாரி எழுந்து, சமையலறைக்குள் போய் ஒளிந்து கொண்டாள்.

என் பால்ய நண்பன் கண்ணன் எப்பொழுதும் இப்படித்தான். சிவபூஜையில் கரடி நுழைந்தது போல் நுழைவதில் அவனை யாரும் மிஞ்ச முடியாது. நானும் இத்தனை வருஷங்களாகப் பார்க்கிறேன், வேறு யாரும் வரக்கூடாது என்று நான் நினைத்துக் கொண்டிருக்கும் சமயம்தான் அவன் வந்து நிற்பான்.

"ஒன்றை நினையாத போது முன்வந்து நிற்பினும் நிற்கும்" என்று வசனம் சொல்வார்களே, அது கண்ணனைப் பார்த்துத் தான் சொன்னார்களோ, என்னமோ?

சில சமயங்களில் வீட்டில் யாரும் இல்லாத சமயத்தில் சரசுவுக்குக் கூடமாட ஏதாவது ஒத்தாசை செய்து கொண்டிருப்பேன். அனுவைத் தூளியில் போட்டு ஆட்டிக்கொண்டிருப்பேன். அல்லது சமயலறையில் 'சித்துக் காரியம்' செய்து கொண்டிருப்பேன். அப்பொழுது என்று கண்ணன் வந்து எதிரே நிற்பான். ஏதோ அவனவன் மனைவிக்கு அவனவன் காரியம் செய்து கொடுத்துவிட்

டுப் போகிருன், நமக்கென்ன என்று பேசாமல் இருப்பாஞ, மாட்டான். இந்தச் சமாசாரத்தை ஊர் முழுவதும் டமாரம் அடித்து விடுவான்.

நம் சமூகத்தில், எல்லாரும் அங்கங்கே ரகசியமாக, மனைவி ஆட்டிவைத்த படியெல்லாம் ஆடிக் கொண்டிருந்தாலும், வெளியில் ஜம்பமாக அதைப் போலத் தப்பான காரியம் வேறு கிடையாது என்று சொல்லி வருகிறார்கள் அல்லவா? ஆகவே கண்ணன் சொன்னதைக் கேட்ட எல்லாரும் என்னைக் கண்டு ஏளனம் பண்ணுவார்கள்.

இந்த மாதிரியெல்லாம் கண்ணன் எக்கச்சக்கமான வேளைகளில் வந்து கழுத்தை அறுத்துக் கொண்டிருந்ததால் அவன் மீது எனக்கு ஆத்திரம், ஆத்திரமாக வந்தது. அவனை எப்படியாவது நம் வீட்டுக்கு வரவொட்டாமல் அடிக்க வேண்டும் என்று நினைத்தேன். ஆனல் பால்யத்திலிருந்தே நண்பனுகையால் அவனிடம் தாட்சண்யம் பார்க்காமல் எப்படி "வராதே!" என்று சொல்வது?

ஒரு மாதத்துக்கு முந்தி இருக்கும். கண்ணனை எப்படி வீட்டுப் பக்கம் வரவொட்டாமல் அடிப்பது என்ற எண்ணத்திலேயே மூழ்கினவனுய், அனுவின் சட்டைகளுக்குச் சோப்புப் போட்டுக் கொண்டிருந்தேன்.

அந்தச் சமயம் பார்த்து எதிரே வந்து நின்ருன் கண்ணன்.

என்னைப் பார்த்து ஒரு ஏளனச் சிரிப்பு சிரித்தான்.

"ஓஹோ! நிலைமை இத்தனை மோசத்துக்கு வந்து விட்டதோ?" என்ருன்.

"என்ன மோசம்?"

"அதுதான், பட்டப் பகலில், இத்தனை பகிரங்கமாகக் கிணற்றடியில் சோப்புப் போட்டுத் துவைக்கும் மோசம்."

"என் குழந்தையின் சட்டைகளை நான் துவைப்பதில் என்ன மோசம்? வண்ணுன் வர நாளாகி விட்டால் குழந்தை சட்டையை நான் சோப்புப் போட்டுத் துவைக்கக் கூடாதா என்ன! வண்ணுன்

வருகிறமட்டும் அழுக்காவே போட்டுக் கொண்டிருப்பது தான் மோசம்" என்று நான் ஒரு குட்டி 'லெக்சர்' அடித்தேன்.

கண்ணன் என் பிரசங்கத்தை வெகு பொறுமையாகக் கேட்டுவிட்டுக் கடைசியாகச் சொன்னான்.

"குழந்தை சட்டைகளைத் தோய்ப்பதில் ஒன்றும் மோசம் இல்லை. ஆனால்—" என்று இழுத்தான்.

"ஆனால் என்ன? சொல்லேன்."

"ஆனால் மனைவியின் ஜாக்கெட்டையும், பகிரங்கமாகக் கிணற்றடியில் சோப்புப் போட்டுக் துவைப்பதுதான் மோசம்!" என்றான்.

இதைக் கேட்டதும் தேள் கொட்டினவன் போல நான் துள்ளிக் குதித்தேன். நான் கசக்கிக் கொண்டிருந்த சட்டைகளைக் கவனித்தேன். குழந்தையின் சட்டைகளுடன் சரசுவின் ஜாக்கெட்டும் ஒன்று இருந்தது! தன் ஜாக்கெட்டுக்கு வாங்கின துணியிலேயே குழந்தை அனுவுக்கும் சட்டை தைத்ததனால் விளைந்த விபரீதம் இது!

கண்ணன் வீட்டுக்குத் திரும்பியதும் சரசுவைப் பிரமாதமாகக் கோபித்துக் கொண்டேன்.

"இதோ பார்! இன்று உன்னால் என் மானமே போய்விட்டது. குழந்தை சட்டைகளுடன் கலந்துதானா உன் ஜாக்கெட்டையும் வைக்க வேண்டும்?" என்றேன்.

"நான் வைத்தால் உங்களைக் கவனிக்க வேண்டாம் என்று சொன்னேனா? இல்லை, குழந்தை சட்டைக்குத்தான் உங்களைச் சோப்புப் போடச் சொன்னேனா?" என்று சரசு திருப்பிக் கேட்டாள்.

சரி, இனிமேல் கண்ணனை வீட்டுப் பக்கம் வரவொட்டாமல் பார்த்துக் கொண்டால் தானாச்சு, இல்லாவிடில் நம் மானம் கப்பலேறி வெளி தேசத்துக்குப் போய்விடும் என்ற தீர்மானத்துக்கு வந்தேன்.

*கடைசியில் ஒருநாள் நானும் சரசுவும் சேர்ந்து இதைப் பற்றியே யோசித்துக்கொண்டிருந்தோம். அப்பொழுது சரசு திடீரென்று துள்ளிக் குதித்தாள். திடு, திடு என்று காகிதமும் பேனவும் எடுத்தாள். ஏதோ இரண்டு வரி எழுதினுள். இந்தா ருங்கள், இந்தக் கடிதத்தில் ஒரு கையெழுத்துப் போட்டுக் கண்ணனுக்கு அனுப்பி விடுங்கள் " என்றுள்.*

*அப்படியே கண்ணனுக்கு அந்தக் கடிதத்தை அனுப்பினேன். அன்று கிணற்றங்கரையில் என் மானத்தை வாங்கிவிட்டுப் போனவன்தான், இன்னும் கண்ணன் வரக் காணேன் !*

*நான் கண்ணனுக்கு அனுப்பிய கடிதம் என்ன தெரியுமா ? இதோ, இதுதான் :*

என் பிரியமுள்ள கண்ணனுக்கு,

இப்பவும் எனக்கு அவசரமாக நூறு ரூபாய் வேண்டி யிருப்பதால், நீ அடுத்த தடவை என்னைப் பார்க்க வரும் போது அத் தோகையைக் கையில் எடுத்துக் கோண்டு வருவாய் என்று நம்புகிறேன்.

இப்படிக்கு,
உன் பிரியமுள்ள
நாடோடி.



# வேலைக்கேற்ற வேஷம்

எங்கே, உங்கள் நெஞ்சைத் தொட்டுக் கொள்ளுங்கள். அந்தச் சட்டையைக் கழற்றி விட்டுத்தான் தொடுங்களேன்! ஆ, தொட்டுவிட்டீர்களா? சரி, இப்பொழுது சொல்லுங்கள். உங்களைப் பார்த்துப் படித்தவர், மேதாவி என்று எல்லோரும் சொல்லிக் கொள்ள வேண்டும் என்று உங்களுக்கு ஆசை இருக்கிறதா, இல்லையா?

ஆனால் இந்த ஆசை உங்களுக்கு மட்டும்தான் இருக்கிறது என்று நினைக்க வேண்டாம். நமது முன்னோர்களுக்கும் இருந்தது. "ஆஹா! அவாளைப்போல் உண்டா? அவாள் படிக்காத சாஸ்திரம் ஒன்றும் கிடையாதுன்னா!" என்று அப்பா சாஸ்திரிகள் குப்பா சாஸ்திரிகளிடம் சொல்ல குப்பா சாஸ்திரிகள் ராமா சாஸ்திரிகளிடம் சொல்ல, ராமா சாஸ்திரிகள் கிருஷ்ணா சாஸ்திரிகளிடம் சொல்ல, இப்படியாக இது பரவி, கடைசியாகத் தீக்ஷிதர் காதில் எட்ட, அவர் அதை "அவாள்" காதில் படும்படியாகச் சொன்னால் தான் அவர்களுக்குத் திருப்தி.

ஆகவே இந்த ஆசையைத் திருப்தி செய்வது மிகவும் அவசியமாகிறது. இது விஷயத்தில் பெரியவர்கள் நமக்கு ஏதாவது வழி காட்டியிருக்கிறார்களா என்றால், ஒன்றும் இல்லை. அவர்களுக்குத் தெரிந்திருந்தது எல்லாம் அநாகரீகமான ஒரே ஒரு வழிதான். படித்தவன் என்று எல்லோரும் சொல்ல வேண்டுமா? சரி, பத்து வருஷங்களோ, இருபது வருஷங்களோ உயிரைக் கொடுத்துப் படிக்கவேண்டியது!

ஆனால் நாகரீகம் பரவியுள்ள இந்த இருபதாம் நூற்றாண்டிலே இந்த வழியை யாரும் ஒப்புக்கொள்ள மாட்டார்கள். "கஷ்டப்பட்டுப் படித்துப் படித்தவன் என்று பெயர் வாங்கிக்கொள்வதில் என்ன கெட்டிக்காரத்தனம் இருக்கிறது? அதற்கு உங்களைத்தான் கேட்கணுமா?" என்று என்னைக் கேட்பார்கள். ஆகவே படிக்காமலே காரியத்தைச் சாதிக்கும் வழியைத்தான் யோசிக்க வேண்டும்.

முதலில் இந்தச்சின்ன விஷயத்தை எடுத்துக் கொள்ளுங்கள். தெருக்களில் போகும்போது வக்கீலைப் பார்த்து டாக்டர் என்றோ, அல்லது டாக்டரைப் பார்த்துப் போலீஸ்காரன் என்றோ நீங்கள் நினைத்துக் கொள்வதில்லை ஏன்? ஒவ்வொருவரும் 'வேலைக்கேற்ற வேஷம்' தரித்துக்கொண்டிருப்பதால் தான்.

அதைப்போலவே படித்தவன் என்று காட்டிக்கொள்வதற்கும் ஒரு தனி வேஷம் இருக்கிறது! இந்த வேஷத்தில் ஒரு தனி விசேஷம் என்னவென்றால் இதைப் போட்டுக்கொண்டால் நீங்கள் வேஷம் போட்டுக்கொண்டிருப்பதாகவே தெரியாது. ஜிப்பாவும், மூக்குக் கண்ணாடியும் தான் இந்த வேஷம். "பூ! இவ்வளவு தானா?" என்று உதட்டைப் பிதுக்காதீர்கள். தொடர்ச்சியாக கொஞ்ச நாளைக்கு சேர்ந்தாற்போல் இதைப் போட்டுக்கொண்டு பார்த்தால் தான் விஷயம் தெரியும். அப்பொழுது நீங்களே சொல்லுவீர்கள்.

படித்தவர் எல்லாம் ஸூட்டும் ஹாட்டும் போட்டுக் கொள்வது தானே வழக்கம் என்று நீங்கள் கேட்கலாம். தயவு செய்து அப்படி நினைத்து ஏமாந்து போகாதீர்கள். இது எல்லாம் ஜிப்பாக் காலம். மல் ஜிப்பா, கதர் ஜிப்பா, சில்க் ஜிப்பா, அடையாறு ஜிப்பா, அந்த ஜிப்பா, இந்த ஜிப்பா, ஆக எந்த ஜிப்பாவாகவேணும் இருக்கலாம், ஆனால் ஜிப்பா போடவேண்டும் என்பதில் மட்டும் சந்தேகம் இல்லை.

இந்த ஜிப்பாக்களுக்குள் பொறுக்கி எடுப்பதிலும் கெட்டிக்காரத்தனம் இருக்கிறது. "பெற்றதெல்லாம் பிள்ளையாகுமா" என்பதுபோல் (உங்களுக்குப் பிள்ளைகள் இல்லாவிட்டால் "நட்டதெல்லாம் பயிராகுமா" என்று வைத்துக் கொள்ளுங்கள். உங்களுக்கு நில புலன்களும் கிடையாது என்றால் "குடித்ததெல்லாம் காபியாகுமா?" என்று தான் வைத்துக்கொள்ளுங்களேன்!) தைத்ததெல்லாம் ஜிப்பாவாகாது.

என்னைக் கேட்டால் ஜிப்பா சாமுத்திரிகாலட்சணம் கொண்டதாய் இருக்கவேண்டும் என்று கூறுவேன்.

ஜிப்பாவுக்காவது, சாமுத்திரிகா லட்சணமாவது என்று நீங்கள் கேட்கலாம். மனிதனுக்குத்தான் சாமுத்திரிகா லட்சணங்கள் சொல்லியிருக்கின்றன, ஜிப்பாவுக்கும் உண்டா என்று சந்தே

கப்படலாம். ஆனால் நான் சொல்வது என்னவென்றால் மனித னுக்குச் சொல்லப்பட்ட சாமுத்திரிகா லட்சணங்கள் ஜிப்பாவுக் கும் இருக்கவேண்டும்; அதாவது, அதன் கைகள் நம் முழங்கால் களைத் தொடவேண்டும். ஜிப்பாவின் கைகள் எத்தனைக்கெத்தனை முழங்கால்களைத் தொடப் பார்க்கின்றனவோ அத்தனைக்கத்தனை மற்றவர்கள் நம்மை மேதாவி என்று நினைத்துக் கொள்வார்கள் என்பதில் தடையில்லை.

சிலர் தலையணைக்கு உறை தைப்பதுபோல் ஜிப்பா தைத்துப் போட்டுக்கொள்கிறார்கள். குளிக்கப் போய்ச் சேற்றைப் பூசிக் கொண்ட மாதிரிதான் இது.

படித்தவர்கள் என்று சொல்வதற்குப் பதில் ஜட்காவண்டிக் காரர்கள் என்று நம்மைப் பார்த்து நினைத்துக்கொண்டாலும் அவர்களைக் கோபித்துக் கொள்வதற்கில்லை. ஆகவே கண்ணை மூடிக்கொண்டு, எல்லாரும் நான்கு ஜிப்பாக்களுக்குச் செலவழிக் கும் துணியை நீங்கள் ஒரு ஜிப்பாவுக்கே செலவழியுங்கள்.

ஜிப்பாவை விட முக்கியமான பாகம் அந்த மூக்குக் கண்ணாடி யாகும். மூக்குக் கண்ணாடியால் நம்முடைய முகத்துக்கு ஒரு தனி அழகும், சோபையும் ஏற்படுகின்றன என்பதில் சந்தேகமில்லை. இல்லாவிடில் நமது நாரீமணிகள் அதைப் போட்டுக்கொள்ள ஆரம்பித்திருப்பார்களா? நமது பெண்மணிகள் மூக்குக் கண்ணாடி போட்டுக்கொள்ள ஆரம்பித்திருக்கும் தீவிரத்தைப் பார்க்கும் போது இன்னும் கொஞ்சம் நாட்களில் கல்யாண காலத்தில் பெண்ணுக்கு நகைகள் பண்ணிப் போடும்போது அப்படியே ஒரு மூக்குக் கண்ணாடியும் வாங்கிக் கொடுத்துவிடுவார்கள் என்று தோன்றுகிறது. இது நிற்க.

இந்த மூக்குக்கண்ணாடி நமது முகத்திற்கு எவ்வளவு அழகு கொடுக்கிறது என்பதைப் பார்க்கும்போது மூக்குக் கண்ணாடி போட்டுக்கொள்வதற்காக மூக்கைக் கொடுத்த கடவுள் அத்துடன் ஏன் ஒரு மூக்குக் கண்ணாடியும் கொடுக்கவில்லை என்று வருத்தமா யிருக்கிறது.

கண் கெட்டுப் போனால் தான் மூக்குக் கண்ணாடி போட்டுக் கொள்ளலாம் என்று சிலர் நினைத்துக்கொண்டிருக்கிறார்கள். இதைப்போல பயித்தியக்காரத்தனமான எண்ணம் வேறு ஒன்றும் இல்லை. ஏதாவது ஒரு கண்ணாடியை எடுத்து மாட்டிக்கொண்டால் தன்னைப்போல கண் கெட்டுப்போகிறது. பிறகு சரியான கண் ணாடியாகப் பார்த்துப் போட்டுக்கொண்டால் போகிறது.

நான் மூக்குக் கண்ணாடி போட்டுக்கொள்ள ஆரம்பித்தது இந்த வகையில்தான். என் தம்பி எனக்கு முன்னால் கண்ணாடி போட்டுக்கொள்ள ஆரம்பிக்கவே எனக்கு மிகவும் வெட்கமாய் போய்விட்டது எல்லோரும் என் தம்பிதான் மேல் கிளாஸில் வாசிக்கிறான் என்றும், நான் கீழ் கிளாஸ் என்றும் நினைத்துக் கொண்டு விட்டார்கள். அதனால் நான்கு நாளைக்கு என் தம்பி தூங்கப்போன பிறகு (தூங்கும்பொழுதுகூட கண்ணாடி போட்டுக்கொள்ளும் வழக்கத்தை என் தம்பி இன்னும் கற்றுக்கொள்ள வில்லை.) அவன் கண்ணாடியை நான் எடுத்துப் போட்டுக்கொண் டேன். அவ்வளவுதான்! ஐந்தாம் நாள் கண் டாக்டரைப் பார்க் கப் புறப்பட்டேன்.

கண்ணாடி போட்டுக் கொள்வதிலும் ஒரு முக்கியமான விஷயத் தைக் கவனிக்க வேண்டி யிருக்கிறது. கண்ணாடிக்கு 'மூக்குக் கண்ணாடி' என்று பெயரே ஒழியக் 'காதுக் கண்ணாடி' என்பதில்லை. ஆகவே காதின் தயவைக் கொண்டுதான் போட்டுக்கொள்ள முடி யும் என்று சில கர்நாடக காலத்துக் கண்ணாடிகள் இருக்கின்ற னவே அவற்றைக் கண்ணாலும் கூடப் பார்க்காதீர்கள். இரண்டு கண்ணாடி வில்லைகள், மூக்கைப்பிடித்துக் கொள்ள ஒரு 'ஸ்பிரிங்'— இவ்வளவுதான் கண்ணாடி என்று பெயர் சொல்லிக்கொள்ள விரும்பும் மூக்குக் கண்ணாடிக்கு இருக்கவேண்டும்.

அப்படிப் போட்டுக் கொள்வதிலும் கறுப்புக் கண்ணாடியாக இருந்தால், பழம் நழுவி பாலில் விழுந்த மாதிரிதான். இந்தக் கறுப்புக் கண்ணாடியால் ஒரு பெரிய சௌகரியம் இருக்கிறது. தெருவில் போகும்பொழுது உங்களுக்குப் பிடிக்காதவர்களைக் கண் டால் அவர்களைப் பார்க்காதது போலவே போய் விடலாம்.

கடைசியாக ஒரு வார்த்தை. கண்ணாடி போட்டுக்கொள்ள வேண்டும் என்றால், எப்பொழுதும் போட்டுக்கொண்டு நிற்க வேண்டும் என்று இல்லை. அப்படிப் போட்டுக்கொண்டு நிற்பது அநாகரீகம்; படிக்காதவன் என்றுதான் குறிக்கும். என்னைக் கேட் டால் கண்ணாடியை மூக்கில் போட்டுக்கொண்டிருப்பதைவிட அதைக் கையில் வைத்துக் கொண்டிருப்பதுதான் நல்லது.

அப்படி கையில் வைத்திருப்பதிலும் அதைத் தங்கள் கைக் குட்டையால் துடைத்துக்கொண்டே நிற்பதுதான் சிலாக்கியம். அதிலும் தாங்கள் கண்ணை மூடிக்கொண்டே நின்றீர்களோ, தாங்கள் படித்தவன் என்று அந்தச் சமயம் பார்த்துத் தங்கள் மணி பர்ஸை 'அபேஸ்' பண்ணும் ஆசாமிகூடச் சத்தியம்பண்ணத் தயாராகயிருப்பான் என்பதில் சந்தேகமில்லை.

# கல்யாணப் பரிசு

"தாங்கள் இஷ்டமித்திர பந்து ஜனங்களுடன் வந்திருந்து முகூர்த்தத்தை நடத்தி வைத்துத் தம்பதிகளை ஆசிர்வதிக்க வேணு மாய்க் கேட்டுக்கொள்கிறேன்."

என்று முடியும் கல்யாணப் பத்திரிகையைப் படித்து முடித்த தும் என்னைத் தூக்கி வாரிப்போட்டது.

அப்பாடா! இந்த மனுஷர் தம் பிள்ளைக்குக் கல்யாணம் பண் ணப் போகிறார் என்பதற்காக நமக்கு எத்தனை வேலை!

முதலில் இஷ்டமித்திர பந்து ஜனங்களை அழைத்துவர வேண்டுமாம்! இது முடிகிற காரியமா என்ன? நம் நாட்டில் இஷ்ட மித்திர பந்து ஜனங்கள் ஒருவரோடொருவர் எவ்வளவு 'அன்னியோன்னிய'மாகப் பழகுகிறோம் என்று தெரிந்த யாரும் இந்தக் கட்டளையை இடவே மாட்டார்கள்.

போன வருஷம் தான் நாமும் நம் இஷ்டர்களும் கோர்ட்டில் சந்தி சிரித்ததை நாம் மறந்தாலும் நம் இஷ்டர்கள் மறப்பார்களா, என்ன? போன வாரம்தான் நாமும் நம் மித்திரர்களும் சிண்டைப் பிடித்துக்கொண்டதை நம் மித்திரர்கள் மறக்கத் தயாராக இருந் தாலும் நாம் மறப்போமா, என்ன? நேற்றுத் தான் நாமும், நம் பந்து ஜனங்களும் அடித்துக் கொண்டதை, நாம் இருவரும் மறக்கத் தயாராக இருந்தாலும், அக்கம் பக்கத்தில் உள்ளவர்கள் மறப்பார்களா, என்ன? வேறு யார் மறந்தாலும் இந்த அடுத்த வீட்டு அண்ணுசாமி அய்யர் மறப்பாரா, என்ன?

ஆனால் நல்ல வேளையாகக் கல்யாணப் பத்திரிகை போடும் யாரும் நாம் இஷ்டமித்திர பந்து ஜனங்களுடன் வருவோம் என்று எதிர்பார்ப்பதில்லை. வந்தால்கூட முகத்தைச் சற்று சின்னதாகத் தான் வைத்துக்கொள்வார்கள் என்பதிலும் தடையில்லை.

இன்னும் கொஞ்ச நாள் போனால் இந்தப் பதங்கள் கட்டாயம் கல்யாணப் பத்திரிகைகளிலிருந்து விடுபட்டுப் போகும் என்பதி லும் சந்தேகமில்லை.

" நாலு நாள் முன்னதாக வந்திருந்து " என்று முன்னெல்லாம் கல்யாணப் பத்திரிகைகளில் போடுவார்களே, இப்பொழுது யாராவது போடுகிறார்களா, பாருங்கள். கழுதை தேய்ந்து கட்டெறும்பானதுபோல், நாலுநாள் இரண்டு நாளாக மாறி, பிறகு ஒரு நாளாகக் குறைந்து, பிறகு அதுவும் இல்லாமல் போய்விட்டதல்லவா? அதே மாதிரி இதுவும் போய்விடும்.

ஆக, இஷ்ட மித்திர பந்து ஜனங்களை அழைத்து வருவதில் இத்தனை தொல்லை இருக்கிறது.

அடுத்தபடியாக அவர்கள் நமக்குக் கொடுக்கும் வேலையைக் கவனியுங்கள்.

முகூர்த்தத்தை நடத்தி வைக்க வேண்டுமாம்! " கல்யாணத்துக்கு வந்திருந்து " என்று மட்டும் சொன்னால் போதாதா, எதற்காக முகூர்த்தத்தையும் நடத்திவைக்க வேண்டும் என்று சொல்லுகிறார்கள் தெரியுமா? இதில் தான் பெரிய தந்திரம் இருக்கிறது. " கல்யாணத்துக்கு வந்திருந்து " என்று சொன்னால் வெறும் மரியாதைக்குச் சொன்னதாகக் கொண்டு, வராமல் இருந்துவிட்டால் என்ன பண்ணுவது என்றுதான், நம்மை முகூர்த்தத்தையும் நடத்தி வைக்கும்படி சொல்கிறார்கள்.

ரயில் நெருக்கடி அதிகமாக உள்ள இந்த நாளில் கல்யாணத்துக்கு வருவதற்காக மிதியும், இடியும் நன்றாகப் படட்டுமே என்பதுதான் கல்யாணப் பத்திரிகைகள் அனுப்புகிறவர்களின் நோக்கம்.

சரி, எப்படியோ சமாளித்துக் கொண்டு, இஷ்ட மித்திர பந்து ஜனங்களைக் கல்யாணத்துக்கு அழைத்துக் கொண்டு போகிறோம், முகூர்த்தத்தையும் நடத்தி வைக்கிறோம் என்று வைத்துக் கொள்ளுங்கள்.

அத்துடன் விடுகிறார்களா? மூன்றாவதாக ஒரு வேலை இடுகிறார்களே, அது லேசில் செய்ய முடிகிற காரியமா என்ன என்று யோசித்துப் பாருங்கள்.

தம்பதிகளை ஆசீர்வதிக்க வேண்டுமாம்! இதை நினைக்கும் போது தான் எனக்குப் பகீர் என்கிறது.

இதுவரையில் நான் எத்தனையோ கல்யாணங்களுக்குப் போய் எத்தனையோ தம்பதிகளை ஆசீர்வதித்தாகி விட்டது. என்னுடைய சிறு வயதிலிருந்தே நான் இந்த ஆசீர்வாதம் செய்யும்

வேலையைத் தொடங்கி விட்டபடியால், வயதில் என்னைவிடப் பெரியவர்களான தம்பதிகளைக் கூட ஆசீர்வதித்திருக்கிறேன்.

ஆனால் ஒருவராவது அதற்காக என்னை வாழ்த்த வேண்டுமே கிடையாது. அதனால் தான் ஆசீர்வாதத்தை நினைக்கும்போதெல்லாம் எனக்குப் பகீர் என்கிறது என்றேன்.

ஆசீர்வாதம் பண்ணுவதில் என்ன சிரமம் இருக்கிறது, மங்கள அட்சதையைத் தம்பதிகளின் தலையில் போடவேண்டியதுதானே என்று நீங்கள் கேட்கமாட்டீர்கள் என்று நம்புகிறேன்.

"தம்பதிகளை ஆசீர்வதிப்பது" என்றால் மங்கள அட்சதையைத் தலையில் போடுவது என்று அர்த்தமில்லை. கல்யாணப் பத்திரிகை அனுப்பிய பெற்றோர்களுக்கு இந்தக் காரியத்தைத் தங்களுக்கே செய்யத் தெரியாதா? கல்யாணத்துக்கு வருகிறவர்கள் எல்லாருக்குமாகச் சேர்ந்து ஒரு கூடை அட்சதையைத் தம்பதிகள் தலையில் கொட்டத் தெரியாதா, என்ன!

பின் ஆசீர்வாதம் பண்ணுவது என்றால் என்ன அர்த்தம் தெரியுமா? தம்பதிகளுக்கு ஏதாவது கல்யாணப் பரிசு வழங்குவது என்றுதான் அர்த்தம்.

கல்யாணப் பரிசு பொறுக்கி எடுப்பதைப் போன்ற திண்டாட்டம் உலகில் வேறு எந்தக் காரியத்துக்கும் கிடையாது என்று நிச்சயமாகச் சொல்லலாம்.

ஒன்றுக்கொன்று நேரடியான இரண்டு விஷயங்களை இது விஷயத்தில் கவனித்தாக வேண்டி யிருக்கிறது.

முதலில் பணம் குறைவாக இருக்கவேண்டுமே என்று கவனிக்க வேண்டி யிருக்கிறது. இரண்டாவதாகப் பரிசு கணிசமாக இருக்க வேண்டுமே என்றும் பார்க்கவேண்டி யிருக்கிறது.

உலகில் சாமான்களுக்கு விலை நிர்ணயிக்கப்பட்டிருக்கும் 'அழகை'ப் பார்க்கும்போது இந்த இரண்டு விஷயங்களும் ஒத்து வருவதில்லை. இதற்காகவே அநேகர் பணமாகவே ஓதிக் கொடுப்பது என்று வைத்திருக்கின்றனர்.

பணம் ஓதிக் கொடுப்பவர்கள் முக்கியமாகக் கவனிக்க வேண்டிய விஷயம் ஒன்று இருக்கிறது.

உதாரணமாக பெண்ணுக்கு நாம் ஓதிக் கொடுக்கிறோம் என்று வைத்துக் கொள்ளுங்கள்.

பெண் நமக்கு மிகவும் வேண்டியவளா, அல்லது பெண்ணின் பெற்றோர்கள் வேண்டியவர்களா என்று கவனிக்க வேண்டும். பெண்ணின் பெற்றோர்கள் நமக்கு மிகவும் வேண்டியவர்கள் என்றால், கட்டாயம் பணமாகத்தான் ஓதிக்கொடுக்க வேண்டும். அப்பொழுது தான் அது பெண்ணுக்குப் போய்ச் சேராமல் பெற்றோர்களுக்குப் போய்விடும்.

சில பெற்றோர்கள் இருக்கிறார்கள். தங்கள் பிள்ளைக்கோ, பெண்ணுக்கோ கல்யாணப் பரிசாக வரும் பணத்தையும் தாங்கள் ஸ்வீகரித்துக் கொண்டு விடுவார்கள்; சாமான்களையும் அபகரித்துக்கொண்டு விடுவார்கள்.

கல்யாணத்துக்காக இத்தனை செலவழித்திருக்கிறேனே, அதில் ஒரு பகுதியாவது கல்யாணப் பரிசாகத் திரும்பி வரட்டுமே என்று அதை எடுத்துக்கொண்டு விடுவார்கள். சாமான்களை யெல்லாம் தாங்கள் பிறருடைய கல்யாணங்களுக்குக் கல்யாணப் பரிசாகத் திருப்பிக் கொடுப்பதற்குப் பத்திரப்படுத்தி வைப்பார்கள். கூடிய வரையில் அந்தந்த வீட்டிலிருந்து வந்த பரிசை அந்தந்த வீட்டுக்கே ஞாபகமாகத் திருப்பி யடிப்பது என்று இவர்கள் வைத்திருக்கிறார்கள்.

இது தெரிந்து சிலர், பரிசு கொடுக்கும்போது, பெண்ணுக்கோ பிள்ளைக்கோ உபயோகப்படவேண்டும், ஆனால் பெற்றோர்களுக்குத் துளிக்கூட உபயோகப்படக் கூடாது என்று, அப்படிப்பட்ட பொருள்களைப் பார்த்துப் பரிசாகக் கொடுப்பார்கள்.

உதாரணமாக வெகு ஆசார சீலரான ஒருவரின் பிள்ளைக்கு வெள்ளி சிகரெட் பெட்டி பரிசு அளித்தால் அதைத் தகப்பனார் பிடுங்கிக் கொள்ள முடியுமா?

பாக்கி எல்லா விஷயங்களிலும் பாஷன்கள் மாறுவதுபோல் கல்யாணப் பரிசு விஷயங்களிலும் பாஷன் மாறிக்கொண்டு வருவதாகத் தெரிகிறது. சில வருஷங்களுக்கு முன் நடந்த கல்யாணத்தில் கவனித்திருக்கிறேன். பரிசு கொடுத்தவர்கள் எல்லாரும் ஆளுக்கொரு சின்ன வெள்ளி கப் பரிசாக அளித்தார்கள். பிறகு வெள்ளி கப், வெள்ளித் தட்டாக மாறியது. பிறகு அது வெள்ளி டம்ளராக உருவெடுத்தது. பிறகு வெள்ளி டீ செட் வந்தது. டீ செட் மாறி இப்பொழுது 'டாய்லெட் செட்' வந்திருக்கிறது.

ஆனால் இதை விட இன்னும் குறைந்த பணத்தில் அதிகக் கனிசமாகப் பரிசு அளிப்பதற்கு ஒரு நல்ல வழி எனக்குத் தோன்று கிறது. வெள்ளியை விட மரம் கனிசமல்லவா? ஆகவே வெள்ளி யில் போடும் பாதிப் பணத்தில் மரத்தில் ஒரு கனிசமான சாமான் கிடைக்கிறது. அதை ஏன் எல்லாரும் பரிசாகக் கொடுக்கக் கூடாது என்று கேட்கிறேன்?

வெள்ளி டம்ளர்கள் ஏராளமாக வந்து விட்டால் அதை வைத்துக்கொண்டு என்ன பண்ணுவது என்ற திண்டாட்டம் இதில் இல்லை. எத்தனை வந்தாலும் எல்லாருக்கும் உபயோகத் துக்குக் கொடுக்கலாம். அதனால் அது தேய்ந்துவிடாது. இன்னும் அதை வைத்துக்கொண்டு பணம் கூடச் சம்பாதிக்கலாம். அது என்ன தெரியுமா?

பன்னிரண்டு ரூபாய் விலையில் விற்கும் அழகான பெட்டி ராட்டை. அந்தப் பெட்டியின் அழகையும், நேர்த்தியையும் பார்க்கும்போது, அதைப் பரிசாக இன்னொருவருக்குக் கொடுக்க மனது வராது. அத்தனை நேர்த்தி!

ஆகவே அடுத்த கல்யாண அழைப்பு வரும்போது கல்யா ணப் பரிசு என்ன கொடுப்பது என்று மண்டையை உடைத்துக் கொள்ள வேண்டாம். பேசாமல், ஒரு அழகான பெட்டி ராட்டை வாங்கிக் கொடுத்து விடுங்கள். மலிவுக்கு மலிவு, கனிசத்துக்குக் கனிசம்! மகாத்மா காந்தியின் புதிய நிர்மாணத் திட்டத்துக்கும் உதவி செய்ததுபோல் ஆகும்.

ஆமாம், கட்டுரையின் ஆரம்பத்தில் ஏதோ கல்யாணப் பத் திரிகை வந்ததாக எழுதியிருக்கிறீர்களே, அதற்கு என்ன பரிசு கொடுத்தீர்கள் என்று கேட்கிறீர்கள்? பெட்டி ராட்டைதான் கொடுத்தேன். மாப்பிள்ளை பரமானந்தமும் பரமானந்தமாக ஏற்றுக் கொண்டார். பிறருக்கு உபதேசம் பண்ணுவது ஒன்று, தான் செய்வது இன்னொன்று என்னும் நிலைமைக்கு நான் இன்னும் பெரிய மனிதன் ஆகவில்லை!



# அடுத்த வீட்டு அம்மாள்

அடுத்த வீட்டு லக்ஷ்மிக்குக் கல்யாணம் நிச்சயமாகி விட்டது என்று தெரிந்ததும், நான் அடியற்ற தென்னை மரம்போல் கீழே விழுந்தேன். ['அடியற்ற பனை மரம்போல்' என்பதுதான் வழக்கு என்பது எனக்குத் தெரியும். இருந்தாலும் என்ன பண்ணுவது? நான் அடியற்ற தென்னை மரம் கீழே விழுவதைத்தான் பார்த்திருக்கிறேனே யொழிய, அடியற்ற பனைமரம் விழுந்ததைப் பார்த்ததில்லை.] கீழே விழுந்ததோடு இல்லை. "ஐயோ! லக்ஷ்மி! உன் பிரிவை நான் எப்படிச் சகிப்பேன்! நீ போய் விட்டால் என் வாழ்வே நிர்மூலமாகி விடுமே?" என்று கதறவும் செய்தேன்.

லக்ஷ்மியைப் "பார்ப்பதற்காக" யாராவது வந்து விட்டுப் போகும் போதெல்லாம் அவர்கள் மீது எனக்கு ஆத்திரம், ஆத்திரமாக வரும். "ஐயோ! இந்தத் தடியன்கள் லக்ஷ்மியைக் கல்யாணம் பண்ணிக்கொண்டு போய் விடுவார்கள் போலிருக்கிறதே, பிறகு என் கதி என்ன!" என்று ஏங்குவேன்.

சென்ற நான்கு வருஷங்களாகத் தினம் ராத்திரி, "ஏன்னு, உங்களைத்தானே!" என்று அபாய எச்சரிக்கை செய்துகொண்டு, அடுத்த வீட்டு அம்மாள் தன் புருஷனை அடுத்த வீட்டு அண்ணுசாமி அய்யரை அணுகும் போதெல்லாம் நான் குடு குடு என்று ஓடிப்போய்க் கூடத்தில் மாட்டப்பட்டிருக்கும் எங்கள் வீட்டுக் கடியாரத்தின் முள்ளைச் சரியாகப் பத்து மணியில் திருப்பி வைப்பேன். சொல்லி வைத்தாற்போல் தினம் 'டாண்' என்று இரவு பத்து மணிக்கு அடுத்த வீட்டு அம்மாள் தன் பெண் லக்ஷ்மியின் கல்யாண விஷயத்தைப் பற்றித் தன் புருஷனைக் கண்டிப்பது என்று வைத்திருந்தாள்.

நான் என் கடியாரத்தைச் சரி பார்த்துக்கொள்வதற்கு உதவியாய் இருந்த இந்தக் கல்யாணப் பேச்சு இனிமேல் நின்றுவிடுமே என்பதற்காகத்தான், நான் லக்ஷ்மிக்குக் கல்யாணம் நிச்சயம் ஆகி விட்டதைப் பற்றிக் கவலைப்பட்டேன். வேறு ஒன்றும் இல்லை.

அது என்னமோ தெரியவில்லை, பெண்களுக்குக் கல்யாணம் பண்ணி வைக்கும் விஷயத்தில், தகப்பனருக்கு இல்லாத அக்கரை தங்களுக்கு இருப்பதுபோல் எல்லாத் தாய்மார்களும் காண்பித்துக் கொள்கிறார்கள். கல்யாணத்துக்கு நிற்கும் பெண்கள் உள்ள எந்த வீட்டுக்குத் தான் போங்கள், சமயம் நேர்ந்த போதெல்லாம் அந்த வீட்டுத் தாயார் அந்த வீட்டுத் தகப்பனரைப் பார்த்து, "ஏன்னா! உங்களைத்தானே! இப்படியே பேசாமல் இருந்தால் என்ன பண்ணுவது!" என்று கடிந்து கொள்வதைக் கவனிக்கலாம்.

ஆனால் பாவம், தகப்பனர்கள் என்ன செய்வார்கள்! காரியாலய வேலையைக் கவனிப்பார்களா, அல்லது மாப்பிள்ளை வேட்டையில் இறங்குவார்களா? இல்லை, அப்படித்தான் காரியாலயங்களில் காஷுவல் லீவ், மெடிகல் லீவ் என்று என்னென்னமோ லீவ் கொடுக்கிறார்களே, அதே மாதிரி கல்யாணத்துக்கு நிற்கும் பெண்களை வைத்துக்கொண்டு தவிக்கும் தகப்பனர்களுக்கு 'மாப்பிள்ளை வேட்டை லீவ்' என்று ஒன்று கொடுக்கிறார்களா?

சுயராஜ்யம் வந்ததும் இத்தகைய லீவ் ஒன்று கிடைக்க வேண்டுமென்பதற்காகப் பெண்ணைப் பெற்ற பெற்றோர்கள் எல்லாம் (நான் உள்பட, ஏனெனில் இன்னும் பதினேழு வருஷங்கள் போனால் என் பெண் அனு கல்யாணத்தைப் பற்றி நான் யோசனை பண்ணவேண்டும் அல்லவா?) கிளர்ச்சி செய்வார்கள் என்று எதிர்பார்க்கிறேன்.

அடுத்த வீட்டு அம்மாளும் சென்ற நான்கு வருஷங்களாகத் தன் புருஷனை அடுத்த வீட்டு அண்ணாசாமி அய்யரை அப்படித் தான் கடிந்துகொண்டாள். ஆனால் பாவம், அடுத்த வீட்டு அண்ணாசாமி ஐயர் என்ன பண்ணுவார்? கள்ள மார்க்கெட்டில் சாமான்களின் விலை உயர்ந்திருப்பதுபோல், மாப்பிள்ளைகளின் விலையும் உயர்ந்துவிட்டதானாலும், கள்ள மார்க்கெட்டில் சாமான்கள் கிடைக்கும் லகுவில் மாப்பிள்ளைகள் கிடைக்கிறார்களா, என்ன?

அதோடு எத்தகைய கணவன் தனக்குக் கிடைக்கவேண்டும் என்பதைப் பற்றி லக்ஷ்மி தனக்குள் ஒருவித முடிவுக்கு வந்திருந்தாள்.

இந்த முடிவை அடுத்த வீட்டு அண்ணுசாமி அய்யரும் ஒப்புக் கொண்டிருந்தார். அதாவது பையன் பார்ப்பதற்குக் கண்ணுக்கு லட்சணமாக இருக்கவேண்டும். குறைந்த பட்சம் பி.ஏ. யாவது பாஸ் பண்ணி இருக்கவேண்டும். இருநூறு ரூபாயாவது சம்பாதித்துக் கொண்டிருக்க வேண்டும்.

லக்ஷ்மியின் குணத்துக்கும், அழகுக்கும், படிப்புக்கும், புத்தி சாலித்தனத்துக்கும் அவள் எதிர்பார்த்தது அதிகம் என்று யாரும் சொல்லமாட்டார்கள். ஆனால் அத்தகைய புருஷன் லக்ஷ்மிக்குக் கிடைக்கவில்லை.

இத்தகைய யோக்யாதாம்சங்கள் உள்ள எத்தனையோ பையன்கள் லக்ஷ்மியைப் பார்ப்பதற்கு வந்தார்கள். ஆனால் வந்து என்ன பிரயோசனம்? அவர்கள் லக்ஷ்மி எப்படி இருக்கிறாள் என்றோ, என்ன படித்திருக்கிறாள் என்றோ அல்லது அவள் புத்தி சாலிதானா என்றோ கவனித்தால் தானே! அவர்கள் குறியாக இருந்தது எல்லாம் மாமனாருக்கு என்ன சம்பளம், அவருடைய மாப்பிள்ளை என்று சொல்லிக்கொண்டால் அந்தஸ்தா யிருக்குமா, மாமனாரிடமிருந்து நிறைய வரும்படி கிடைக்குமா, வரதட்சிணை கிடைக்குமா என்றுதான். ஆனால் அவர்களைக் குற்றம் சொல்லியும் பிரயோசனம் இல்லை.

"எனக்கு வரதக்ஷிணையில் துளிக்கூட ஆசையில்லை ஸார்! ஆனால் எங்க அம்மா வாங்கித்தான் ஆகவேண்டும் என்கிறாள், எங்கப்பா வாங்கித்தான் ஆகவேண்டும் என்கிறார்" என்று மாதுர் வாக்கிய பரிபாலனமும் பிதுர் வாக்கிய பரிபாலனமும் செய்வதற்காக வரதக்ஷிணை வாங்கும் எத்தனை பேரை நாம் பார்த்திருக்கிறோம்?

ஆக, முதல் வருஷம் கல்யாணம் ஒன்றும் நிச்சயமாகாமற் போகவே அடுத்த வீட்டு அண்ணுசாமி அய்யரின் பாடு திண்டாட்டமாகி விட்டது. "ஏன்னா? உங்களைத்தானே! இப்படியே பேசாமல் இருந்தால் என்ன பண்ணுவது?" என்று தினம் ராத்திரி பத்து மணிக்கு அடுத்த வீட்டு அம்மாள் குடைய ஆரம்பித்து விட்டாள்.

தன்னால்தானே அப்பா இப்படி அவதிப்படுகிறார் என்று லக்ஷ்மி தன் கோரிக்கைகளைத் தளர்த்திக் கொண்டு, ஒரு படி கீழே

இறங்கி வந்தாள். சம்பளம் என்ன வாங்கிக்கொண்டிருந்தாலும் பரவாயில்லை, தனக்கு வரப்போகும் கணவன் பீ. ஏ. யாவது பாஸ் பண்ணி யிருக்கட்டும் என்று சொன்னாள்.

அப்படியே பி. ஏ. பாஸ் பண்ணிவிட்டு, முப்பது ரூபாய் குமாஸ்தா வேலையிலும், நாற்பது ரூபாய் குமாஸ்தா வேலையிலும் திருப்திப் பட்டுக் கொண்டிருந்த எத்தனையோ பட்டதாரிகள் வந்து பார்த்தார்கள். ஆனால் அவர்களுக்கு அடுத்த வீட்டு அண்ணாசாமி அய்யர் வாங்கும் சம்பளம் திருப்திகரமாக இல்லாமற் போகவே பெண் வேண்டாம் என்று போய் விட்டார்கள்.

ஆனால் அடுத்த வீட்டு அம்மாளின் ரோதனை மாத்திரம் நிற்க வில்லை. "ஏன்னா, இப்படியே பேசாமல் இருந்தால் என்ன பண்ணு கிறது!" என்று புருஷனைப் பிடுங்கித் தின்றுகொண்டே யிருந் தாள். அப்பா படும் அவதியைப் பொறுக்காமல் லக்ஷ்மி தன் கோரிக்கைகளை இன்னும் ஒரு படி தளர்த்திக் கொண்டாள். "நான் பாஸ் பண்ணியிருக்கும் இன்டர் அவர் பாஸ் பண்ணியிருந்தாலும் போதும் அப்பா!" என்றாள்.

இதேமாதிரி இன்டர் மாத்திரம் பாஸ் பண்ணிவிட்டு வேலை யில்லாமல் திண்டாடிக்கொண்டிருந்த எத்தனையோ யுவர்கள் லக்ஷ்மியை வந்து பார்த்துவிட்டுப் போனார்கள். ஆனால் அவர்களும் லக்ஷ்மியைக் கல்யாணம் பண்ணிக்கொள்ள இசையவில்லை. அடுத்த வீட்டு அண்ணாசாமி ஐயர் குடியிருந்த வீடு அவருக்குச் சொந்தம் தானா என்று அவர்கள் விசாரித்தார்கள். "இல்லை, வாடகை வீடுதான்" என்று அவர் உண்மையைச் சொல்லவே பெண் வேண் டாம் என்று போய்விட்டார்கள்.

ஆனால் அடுத்த வீட்டு அம்மாளா விடுபவள்? தன் புருஷனை மேலும், மேலும் நொந்துகொள்ள ஆரம்பித்தாள். ஒவ்வொரு சமயம் லக்ஷ்மியையும் சபிக்க ஆரம்பித்தாள். "ஒவ்வொரு வீட் டில் உன் வயதொத்த பெண்கள் இரண்டு குழந்தைக்கும், மூன்று குழந்தைக்கும் தாயாராக இருக்க நீ இன்னும் கல்யாணம் ஆகா மல் பனைமரம் போல் நிற்கிறாயே!" என்று பெண்ணை இடித்தாள், கிள்ளினாள், சில சமயம் அடிக்கவும் செய்தாள்.

தாயாரின் தொணதொணப்பு பொறுக்காமல் இந்த வருஷம் லக்ஷ்மி, தாயார் பார்த்துச் சொல்லும் யாரையும் கல்யாணம் பண்

ணிக்கொள்ளத் தயாராக இருந்தாள். அவன் படித்தவனாய் இருந்தாலும் சரி, படிக்காதவனாய் இருந்தாலும் சரி, கறுப்பாய் இருந்தாலும் சரி, சிவப்பாய் இருந்தாலும் சரி, சம்பாத்தியம் உள்ளவனாய் இருந்தாலும் சரி, சம்பாத்தியம் இல்லாதவனாக இருந்தாலும் சரி, யாரையும் கல்யாணம் பண்ணிக்கொள்ளத் தயாராக இருந்தாள். அப்படியே யாரோ ஒரு உதவாக்கரைப் பையனை அடுத்த வீட்டு அம்மாள் தேர்ந்தெடுத்தாள். லக்ஷ்மி அவனையே கல்யாணம் பண்ணிக் கொள்ள இசைந்து விட்டாள்.

தன் பெண்ணுக்குக் கல்யாணம் நிச்சயம் ஆகிவிட்டதைப் பற்றி இப்பொழுது அடுத்த வீட்டு அம்மாள் அடித்துக் கொள்ளும் பெருமை கொஞ்சம் நஞ்சமல்ல. "ஏன்னு, நானே பார்த்துப் பொறுக்காவிட்டால் நம்ப லக்ஷ்மிக்கு எங்கே கல்யாணம் நிச்சயம் ஆகி யிருக்கப்போகிறது" என்று அடுத்த வீட்டு அம்மாள் பெருமை அடித்துக்கொள்கிறாள்.

நம் நாட்டில் ஒவ்வொரு வீட்டிலும் அடுத்த வீட்டு அம்மாளைப் போல் ஒரு அம்மாள் புருஷனைக் கடிந்துகொண்டிருக்கையில், நம் நாட்டுப் பெண்கள் யாருக்கு வாழ்க்கைப்பட்டாலும், அவனுடன் மனமொத்து, "கல்லானாலும் கணவன், புல்லானாலும் புருஷன்" என்று வாழ்வதில் என்ன ஆச்சரியம்! அடிமேல் அடி அடித்தால் அம்மியும் நகரவேண்டியதுதானே?



# இதோ பார், அனு!

இதோ பார், அனு! நான்கு நாட்களாக நானும் உன் அம்மாவும் உன்னை அடிக்கொரு தடவை "அனு, அனு!" என்று கூப்பிட்டு உன் கழுத்தை அறுப்பது உனக்குக் கஷ்டமாகத்தான் இருக்கும். இருந்தாலும் என்னத்தைச் செய்ய?

நான்கு நாட்களாக நானும் உன் அம்மாளும் கோபித்துக்கொண்டு ஒருவரோடொருவர் பேசாமல் இருப்பது உனக்குத் தெரியும் என்று நினைக்கிறேன். இருந்தாலும் ஒரே வீட்டில் இருக்கும் இரண்டு பேர் ஒருவருக்கொருவர் தெரிவிக்க வேண்டிய விஷயங்கள் அநேகம் இருக்காதா?

உதாரணமாகச் சமையலறையில் வைக்கப்பட்டிருக்கும் பாலை பூனை குடித்துக்கொண்டிருக்கிறது என்று வைத்துக்கொள். அந்தச் சமயம் என்று பார்த்துத் தான் உன் அம்மா, கையில் ஒரு நாவலை எடுத்து வைத்துக்கொண்டு ஊஞ்சலாடிக் கொண்டிருந்தால் அந்த விஷயத்தை உன் அம்மாவிடம் எப்படித் தெரிவிப்பது? உங்கம்மா மீதுள்ள கோபத்தினால் "பூனை நன்றாகப் பாலைக் குடிக்கட்டும்" என்று என்னதான் ஆத்திரமாக இருந்தாலும் நாளைக்குப் பால்காரனுக்குப் பணம் அழ வேண்டியவன் நான்தானே? ஆகவே, "அனு! பூனை பாலைக் குடித்துக் கொண்டிருக்கிறது என்று உங்கம்மாவிடம் சொல்லு" என்று உன்னைக் கூப்பிட்டுத்தானே சொல்ல வேண்டியிருக்கிறது?

அதே மாதிரி, போட்ட வெந்நீரை ஆறவிட்டுவிட்டு, நான் பாட்டில் வெகு சுவாரஸ்யமாகப் பத்திரிகை படித்துக்கொண்டிருந்தால் அந்த விஷயத்தை உன் அம்மா என்னிடம் எப்படித் தெரிவிப்பது? "இந்தாடி அனு! வெந்நீர் ஆறுகிறது என்று உங்க அப்பா கிட்டே சொல்லுடி" என்றுதானே சொல்ல வேண்டியிருக்கிறது?

இதனால்தான் நான்கு நாட்களாக நானும், உன் அம்மாவும் உன்னை அடிக்கொரு தடவை கூப்பிட்டுக் கொண்டிருக்கிறோம். நீயும் விஷயம் புரியாமல் விழித்துக் கொண்டிருக்கிறாய். "தூக்கிக்

கொள்" என்று நீ கையையும், காலையும் ஆட்டி வாய் வலிக்க அழுதால்கூட "நீ தூக்கிக்கோ!" "நீங்கள் தூக்கிக் கொள்ளுங்கள்" என்று ஒருவருக் கொருவர் தட்டிக் கழிக்கும் அப்பாவுக்கும், அம்மாவுக்கும் திடீரென்று நம் மீது இத்தனை காதல் எப்படிப் பிறந்தது என்று எண்ணி நீ திகைத்துக் கொண்டிருக்கிறாய்.

உண்மையில் நாங்கள் இருவரும் கோபித்துக்கொண்டு பேசாமல் இருப்பதால்தான் உன் தயவை இப்படி நாடுகிறோம்.

நல்ல வேளையாக நீ இன்னும் பேசக் கற்றுக்கொள்ள வில்லை. இல்லாவிடில் உன் தயவை நாடுவது சாத்தியமா, என்ன ?

உனக்குப் பேசத் தெரிந்தால், "அனு, இதை அம்மாகிட்டே சொல்லு!" "அனு, இதை உங்க அப்பாகிட்டே சொல்லு" என்று நாங்கள் சொல்லும் போதெல்லாம், "ஏன், நீங்கள்தான் சொல்லிக் கொள்ளுங்களேன் ! நடுவில் நான் எதற்கு?" என்று எங்கள் வாயில் போட மாட்டாயா ?

நியாயமாகப் பார்த்தால், நாளைக்கு உனக்குப் பேசத் தெரிந்த தற்குப் பிறகுகூட நாங்கள் இப்படி ஒருவரையொருவர் கோபித்துக் கொண்டு, உன் தயவை நாடினால்கூட, நீ எங்கள் வாயில் போட நியாயமில்லை.

"அனு ! நீ இதை அம்மாவிடம் சொல்லு" என்று நான் உன்னிடம் சொல்லும் போதெல்லால் நீ போய்ச் சொல்லப்போகிறாய் என்றா நான் காத்துக்கொண்டிருக்கிறேன்? நான்தான் உங்க அம்மா காதுக்கு மட்டும் அல்ல, இன்னும் பத்து வீட்டுக்கு அப்பால் உள்ள அம்மாமார்கள் காதுக்கும் எட்டும் படியாக அல்லவா கத்துகிறேன் ?

குரல் விஷயத்தில்தான் உங்கம்மா எனக்குத் தோற்றவள் ல்ல என்பது உனக்குத் தெரியும். ஆகவே உங்கம்மாவும் அவள் சொல்லும் காரியத்தை நீ என்னிடம் வந்து சொல்ல வேண்டும் என்று எதிர் பார்க்கிறதில்லை. நீ தூங்கிக் கொண் டிருக்கும்போதுகூட, நாங்கள் இருவரும், "அனு ! இதை உங்க அப்பா கிட்டே சொல்லு !" "அனு ! இதை உங்க அம்மா கிட்டே சொல்லு" என்றுதான் பேசிக்கொள்ளுகிறோம்.

ஆகவே இப்பொழுதே சொல்லி வைக்கிறேன். நாளைக்கு உனக்குப் பேசத் தெரிந்ததற்குப் பிறகுகூட நாங்கள் எத்தனையோ சமயங்களில் பேசாமல், கோபித்துக் கொண்டிருப்போம். அப்பொழுது இதேமாதிரி, உன் தயவை நாடிக்கொண்டிருப்போம். அப்பொழுது நீ நாங்கள் சொல்லும் வார்த்தைகளைக் காதில் போட்டுக் கொண்டாலும் சரி, போட்டுக் கொள்ளாவிட்டாலும் சரி, "நடுவில் நான் எதற்கு?" என்று எங்கள் வாயில் போடமாட்டாய் என்று நம்புகிறேன்.

ஆனால் நீ ஒன்று கேட்கலாம். "இந்தப் பதினைந்து மாதங்களாகத்தான் ஐயா அனு என்று நான் ஒருத்தி இருக்கிறேன். அதற்கு முன்னால் சண்டை வந்து ஒருவருக்கொருவர் பேசிக்கொள்ளாமல் இருந்தால், என்ன செய்தீர்களாம்?" என்று நீ கேட்கலாம். அதற்கு இதோ பதில் சொல்லுகிறேன், கேள்.

நீ பிறப்பதற்கு முன்னால் எங்களுக்குள் சண்டை இல்லாமல் இருந்ததில்லை. அதுவும் நாங்கள் டில்லியில், கல்யாணமான புதிதில், தனிக் குடித்தனம் பண்ணிக் கொண்டிருக்கையில் எங்களுக்குள் நடந்த சண்டை சொல்லி முடியாது.

கல்யாணமான தம்பதிகள் ஒருவருக்கொருவர் ஒத்துக் குடித்தனம் பண்ணுவார்களா, இல்லை இப்படிச் சண்டை பிடித்துக் கொள்வார்களா என்று நீ கேட்கலாம். இதிலிருந்தே தமிழ் நாட்டுப் பழக்க வழக்கங்களை நீ இன்னும் தெரிந்து கொள்ளவில்லை என்று தெரிகிறது.

தமிழ் நாட்டில் இரண்டு பேருக்குள் ஏதாவது உறவு உண்டா, இல்லை அவர்கள் அன்னியர்கள்தானா என்று கண்டு பிடிப்பதற்குச் சிறந்த வழி அவர்கள் ஒருவரோடொருவர் சண்டை பிடித்துக் கொள்கிறார்களா, அல்லது வெகு அன்னியோன்னியமாகப் பழகிக் கொள்கிறார்களா என்று கவனிப்பதுதான்.

வெகு அன்புடன் பழகிக்கொள்கிறார்களா, ஒருவருக்கொருவர் அன்பு காட்டும் விஷயத்தில் இரண்டு பேரும் போட்டி போடுகிறார்களா, இரண்டு பேரும் அன்னியர்கள், அரை மணி நேரத்துக்கு முன்னால் தான் அறிமுகமானவர்கள் என்று தெரிந்து கொள்ளலாம்.

நம் ரயில் வண்டிகளில் ஜனங்கள் பழகிக்கொள்ளும் விதம் ஒன்றே இதற்குப் போதிய உதாரணம். அரை மணி நேரத்துக்கு முன்னால்தான் பழகியவர்கள் என்னமோ அரை நூற்றாண்டு காலம் பழகியவர்கள்போல். "அதெல்லாம் முடியாது ஸார்! காப்பிக்கு நான்தான் பணம் கொடுப்பேன்," "இல்லை ஸார்! நான்தான் கொடுப்பேன்" என்று சண்டை பிடித்துக் கொண்டிருப்பதைக் காணலாம்.

இல்லை, தினம் காலையில் எழுந்ததும் வக்கீல் வீட்டில் போய்த் தவங் கிடந்து, ஒருவருக்கொருவர் வக்கீல் நோட்டீஸ் அனுப்பிக் கொண்டும், கோர்ட்டில் சந்தித்துக் கொண்டும் இருக்கிறார்களா, கட்டாயம் அவர்கள் ஒரே தாயின் வயிற்றில் பிறந்த சகோதரர்கள் என்று அறியலாம். நம் நாட்டு வக்கீல்களும், ஜட்ஜ்களும், சம்பிரமமாகச் சாப்பிட்டுக்கொண்டு, உயிர் வாழ்வதற்கே இந்தச் சகோதரர்கள் தான் காரணம் என்று சொன்னாலும் மிகையாகாது.

இல்லை, வக்கீல் வீட்டுக்குப் போகவேண்டிய சிரமம்கூட எடுத்துக் கொள்ளாமல் ஒரே வீட்டிலேயே இருந்துகொண்டு கடுவன் பூனைகள் மாதிரி இரண்டு பேர் சிடு, சிடு, கடு கடு என்று எரிந்து விழுந்து கொண்டிருக்கிறார்களா, கட்டாயம் அவர்கள் சம்சாரம் என்னும் வண்டியைச் சேர்ந்து இழுப்பதாகச் சொல்லிக் கொள்ளும், புருஷன், மனைவி தான் என்று தெரிந்து கொள்ளலாம்.

அதோடு, கல்யாணமான புதிதிலேயே அத்தனை சண்டை நான் உன் அம்மாவோடு போட்டதற்கு இன்னொரு காரணமும் உண்டு.

எங்கே நாளானால் உன் தாத்தா, அதுதான் என் மாமனார் செய்த சீர்வரிசைகளின் அழகு மறந்து விடுமோ என்று எனக்குப் பயம்! அடுத்த வீட்டு அண்ணாசாமி அய்யரைப்போல் எனக்கு ஞாபக சக்தி இருக்கிறதா, என்ன? அவருக்குக் கலியாணமாகி வெள்ளி விழாக் கொண்டாட்டம் நடத்த வேண்டியதற்குரிய காலம் ஆகியும், இன்னும் இருபத்தைந்து வருஷங்களுக்கு முன்னால் அவர் மாமனார் செய்த, (அதாவது செய்யாதுவிட்ட) சீர் வரிசைகளைப் பற்றி மனைவியுடன் சண்டை போட்டுக் கொண்டிருக்கிறாரே?

எனக்கு இத்தனை ஞாபக சக்தி இல்லாததால் தான் கல்யாணமான புதிதிலேயே உன் அம்மாவுடன் சீர் வரிசைகளைப் பற்றிச் சண்டை போட ஆரம்பித்து விட்டேன்.

அப்பொழுது நாங்கள் எப்படிப் பேசிக்கொண்டோம் என்று கேட்கிருயா? இதோ சொல்லுகிறேன்.

அன்ெருரு நாள் நான் உன்னே ஒரு நாடகத்துக்கு அழைத்துக் கொண்டு போனேனே, ஞாபகம் இருக்கிறதா? நீ கூட நடுவில் அழ ஆரம்பித்து, நான் உன்னேத் தோளில் தூக்கிக் கொண்டு, கொட்டகைக்குப் பக்கத்தில் உள்ள வராந்தாவில் முன்னும், பின்னும் நடந்து கொண்டிருந்தேனே?

அதில் சில கதாபாத்திரங்கள் தங்களுக்குள் தாங்களே பேசிக் கொள்வதைக் கவனித்தாயா? தனக்குத்தானே பேசிக்கொள்ளும் கதாபாத்திரங்கள் அப்படிக் கொட்டகை அதிரும்படி போட்ட கூச்சலேக் கேட்டுப் பயந்துதானே நீ அழுதாய்?

அதைப் போலத்தான் நானும், உன் அம்மாவும் ஆகாயத்தைப் பார்த்துக் கொண்டு உரத்த தொனியில், தனக்குத்தானே பேசிக் கொள்வோம்.

எனக்குக் காரியாலயத்துக்குப் போக நாழிகையாகி, உங்கள் அம்மாவின் அழகு சமையல் வழக்கம்போல் தயாராகவில்லே யென்ருல் ஆகாயத்தைப் பார்த்து, "ஆபீசுக்குப் போக நாழிகையாகி விட்டது. இலே போட்டால் தேவலே" என்று கத்துவேன். உடனே உன் அம்மா, அவளும் ஆகாயத்தைப் பார்த்துக்கொண்டு, "எல்லாம் இலே போட்டு அரைமணி நேரத்துக்கு மேலாகிறது" என்று கத்துவாள்.

சில சமயங்களில் நாங்கள் ஆகாயத்துக்குப்பதில் சுவரைப் பார்த்துக் கத்துவதும் உண்டு. ஆனுல் எதைப் பார்த்துக் கத்தினுலும் கத்துவோம், ஒருவர் முகத்தைப் பார்த்து ஒருவர் கத்துவது என்பது மாத்திரம் கிடையாது. அப்படிப் பார்த்தால்தான் ஒருவருக்கொருவர் பேசியாகி விட்டது என்று அர்த்தமாகி விடுமே!...

யார் அங்கே! உங்க அம்மாவா! இங்கே எதற்காக வருகிருள்? நான் தான் அவளுடன் கோபித்துக் கொண்டிருக்கிறேனே!

"இந்தாடி அனு! இலே போட்டு அரை மணி ஆகிறது என்று உங்க அப்பாவிடம் சொல்லுடி!"

இதோ பார், அனு! நான் இப்பொழுது சாப்பிட வர முடியாது என்று உன் அம்மாவிடம் சொல்லிவிடு!

# பிள்ளையார் பிடிக்க

எனக்கு வெகு காலம், பிள்ளையார் பிடிக்க எதுவாகவோ முடிந்தது என்று ஒரு பழமொழி சொல்வார்களே, அதற்கு அர்த்தம் தெரியாது. பிள்ளையார் எதற்காக ஓடுகிறார், பயந்து ஓடும்படி அவர் யாரிடமாவது கடன்பட்டு விட்டாரா என்ன, அவரை ஓடிப்பிடித்தது யார், அப்படி பிடிபட்டதும் அவர் எதற்காகக் குரங்காக மாறினார் என்றெல்லாம் மூளையைக் குழப்பிக் கொண்டிருக்கிறேன்.

சமீபத்தில்தான் இந்தப் பழமொழியின் உண்மை அர்த்தம் எனக்குத் தெளிவாயிற்று. அப்படித் தெளிவாக்கியவர் வேறு யாரும் இல்லை, எல்லாம் என் சாக்ஷாத் நண்பர் கிருஷ்ணசாமி,பி.ஏ., எல். டி., அவர்கள்தான்.

இந்தக் கிருஷ்ணசாமி பி.ஏ., எல். டி.யை நினைக்கும்போதெல்லாம் எனக்கு ஆத்திரம் ஆத்திரமாக வருகிறது. அந்த மனுஷன் யோசனையைக் கேட்கப்போக, பிள்ளையார் பிடிக்க, எதுவாகவோ முடிந்தது என்று சொல்வார்களே, அந்த நிலைமை எனக்கு ஏற்பட்டு விட்டது.

ஞாபக சக்தி என்று சொல்வார்களே. அது எனக்கு மிகவும் கொஞ்சம்தான். அதற்காக, எனக்குக் கடன், கிடன் கொடுக்க முன் வருகிறவர்கள், பயந்து கொண்டு கொடுக்காமல் இருந்து விடாதீர்கள். கொடுத்த பணத்தை நான் இல்லையென்று சொல்ல மாட்டேன்.

நீங்கள் எவ்வளவு பணம் கொடுத்தீர்கள் என்பது நன்றாக ஞாபகம் இருக்கும். ஆனால் கொடுத்தவர்கள் பெயர்தான் மறந்து போகும். இந்தச் சனியன் பிடித்த பெயர் மறதியினால்தான் நான் வாங்கின பணத்தை எப்பொழுதும் திருப்பித் தருவதே கிடையாது. உண்மைக் காரணம் தெரியாமல் வெகு நண்பர்கள் (அவர்கள் பெயர்கள் ஞாபகமில்லை) நான் மோசக் கருத்துடன் அவர்கள் பணத்தை வாங்கிச் சாப்பிட்டு விட்டேன் என்று என்மீது குற்றம் சாட்டுகிறார்கள்.

நானாகவே வலுவில் போய் ஒவ்வொருவரிடமும், "ஏன் ஸார்! நீங்கள் பணம் கொடுத்ீர்களா, நீங்கள் பணம் கொடுத்தீர்களா?" என்று கேட்கலாம். ஆனால் இவர்களை நம்புவதற்கில்லை. ஏனெனில் இவர்களுக்கு இருக்கும் பணமுடையில், "ஆமாம்; நான்தான் பணம் கொடுத்தேன்" என்று சொல்லிப் பணத்தை வாங்கி வைத்துக்கொண்டு விட்டால் என்ன பண்ணுவது? நண்பர்களாதலால் ஏமாற்ற மாட்டார்கள், பின்னால் திருப்பிக் கொடுத்து விடுவார்கள் என்பது தெரியும். இருந்தாலும், வாங்கிக் கொண்டவர் பெயர் என்ன என்பதைத் திரும்பவும் மறந்து விடுவேனே!

நிலைமை இத்தனை மோசமாகப் போய்விடவே, இது விஷயமாக ஏதாவது செய்யத்தான் வேண்டும் என்று தீர்மானித்தேன். அந்தச் சமயம் என்றுதான் வந்து சேர்ந்தார் என் நண்பர் கிருஷ்ணசாமி, பி.ஏ., எல்.டி.

ஆனால் நண்பரைக் கண்டதும், அவர் பெயர் கிருஷ்ணசாமி என்று தெரிந்து கொண்டு விட்டேன் என்று நினைத்தீர்களா? இல்லை. வழக்கம்போல் அவர் பெயரும் மறந்து விட்டது.

ஆகவே, அவருடன் "ஸார்!" போட்டுக்கொண்டே பேசினேன்! இது அவருக்குப் பிடிக்கவில்லை. ஆகவே என்னைப் பார்த்து, "என்னடா ஸார் வேண்டியிருக்கு, ஸார்! என் பெயரைச் சொல்லிக் கூப்பிடேன்......என்ன விழிக்கிறாய்? என் பெயரை மறந்து விட்டுத் திண்டாடுகிறாயா என்ன?" என்று கேட்டார்.

"சீச்சீ! இத்தனை நாளாகப் பழகிவிட்டு, பெயர் மறந்து போகுமா, என்ன?"

"எங்கே, அப்படியானால் என் பெயர் என்னவென்று சொல், பார்க்கலாம்."

இதைக் கேட்டதும் நான் திரு, திரு என்று விழிக்க ஆரம்பித்தேன்.

"ஊஹூம்! அப்படியா! உண்மையை ஒப்புக்கொள்" என்றார் பி. ஏ., எல். டி. நான் உண்மையை ஒப்புக்கொண்டேன். பெயர் அடிக்கடி மறந்து விடுவதால் நான் படும் அவஸ்தைகளை விவரித்தேன்.

இதைக் கேட்டதும் நண்பர் சிரித்தார். "அட அசடே! நீ இத்தனை மக்காக இருப்பாய் என்று நான் நினைக்கவே

இல்லையே! பெயர்களை ஞாபகம் வைத்துக் கொள்வதற்கு வெகு சுலபமான வழி ஒன்று இருக்கிறதே."

"என்ன, சுலபமான வழியா? பெயர்களை ஞாபகம் வைத்துக் கொள்வதற்கா?"

"ஆம், பெயர்களை ஞாபகம் வைத்துக் கொள்வதற்கு மிகச் சுலபமான வழி. இதெல்லாம் எங்களுக்கு எல். டி., வகுப்பில் சொல்லிக் கொடுக்கிறார்களே, உனக்குத் தெரியாதா?"

"எல். டி. வகுப்பிலா! எதற்காக இதைச் சொல்லிக் கொடுக்கிறார்கள்?"

"எல்லாம் இந்தப் பள்ளிக்கூட வாத்தியார் வேலையை ஒப்புக் கொண்டால் பையன்கள் பெயர்களை ஞாபகம் வைத்துக் கொள்வதற்குத்தான்."

"சரி, அது என்ன வழி?"

"அதாவது, ஒரு பெயருக்கும், இன்னொரு பெயருக்கும் ஏதாவது சம்பந்தம் ஏற்படுத்தி வைத்துக் கொண்டால் பெயர் மறக்காது."

"அப்படியென்றால்?"

"பள்ளிப் பிள்ளைகளுக்குச் சொல்வதுபோல் உனக்கு உதாரணம் சொல்லி விளக்கினால்தான் புரியும். இப்பொழுது ராமசாமி என்று வைத்துக்கொள்."

"ராமசாமி என்ற பெயர் எனக்கு மறக்கவே மறக்காது. ஏனெனில் என் பெயரே அதுதானே?"

"இந்தக் குயுக்திதானே வேண்டாமென்கிறது? உதாரணத்துக்குச் சொல்ல வந்தால் நடுவில் தமாஷ் பண்ணுகிறாயே? உலகத்தில் நீதான் ராமசாமியா? அந்த பாங்கி காஷியர் ராமசாமியின் பெயர் மறந்து போகிறது என்று வைத்துக்கொள். உடனே ராமன் என்ற வார்த்தைக்கும், வேறு ஏதாவது வார்த்தைக்கும் சம்பந்தம் இருக்கிறதா என்று கண்டு பிடிக்க வேண்டும். ராமனுக்கு மனைவி சீதை அல்லவா! ஆகவே ராமசாமியைப் பார்க்கும் போதெல்லாம் சீதை என்ற வார்த்தை ஞாபகம் வந்தால் ராமசாமி என்ற பெயர் உடனே ஞாபகம் வந்துவிடும்."

"ஆனால் சீதை என்கிற பெயரும் மறந்து விட்டாலோ?"

"சீதைக்கும், வேறு ஏதாவது வார்த்தைக்கும் சம்பதம் கண்டு பிடித்தால் போகிறது."

"எப்படி?"

"சீதா மிதிலையில் பிறந்தாள். மிதிலை என்பது உன் எதிர்த்த வீட்டின் பெயர். எதிர்த்த வீடு என்றதும் உன் வீடு ஞாபகம் வரும். ஆகவே உன் வீட்டிலிருந்து ராமசாமி பெயரை கண்டு பிடிக்கலாம்."

"எப்படி?"

"என்னடா, ஒவ்வொன்றுக்கும் எப்படி, எப்படி என்று கேட்டுக் கொண்டிருக்கிறாய்? ராமசாமியைக் கண்டதும் உன் வீட்டை நினைத்துக் கொள்ளவேண்டும். உன் வீடு என்றதும் எதிர்த்த வீடு ஞாபகம் வரும். எதிர்த்த வீட்டின் பெயர் மிதிலை. மிதிலை என்றதும் மிதிலையில் பிறந்த சீதையின் பெயர் ஞாபகம் வரும். சீதை என்றதும் சீதையின் கணவனான ராமன் பெயர் ஞாபகம் வரும். ராமன் என்றதும் ராமசாமி. அவ்வளவுதானே?"

"சரி, ராமசாமியை ஞாபகம் வைத்துக் கொள்வதற்குத்தான் என் வீட்டை ஞாபகம் வைத்துக் கொள்ள வேண்டும். கிருஷ்ண சாமியை ஞாபகம் வைத்துக் கொள்வதற்கு என்ன பண்ணுவது?"

"அதுவும் இதேமாதிரி தாண்டா. கிருஷ்ணன் என்றால் ராதா ஞாபகம் வரும். ராதா என்றதும் உன் பெண் அனுராதா ஞாபகம் வரும். என்னைப் பார்க்கும் போதெல்லாம் அனுராதாவை ஞாபகம் வைத்துக் கொள்ளேன். என் பெயர் ஞாபகத்துக்கு வந்து விடுகிறது."

"நான் தவறிப் போய், ராமசாமியைப் பார்க்கும்போது அனுவை நினைத்துக் கொண்டு, உம்மைப் பார்க்கும்போது என் வீட்டை நினைத்துக் கொண்டால்?"

"இப்படி யெல்லாம் குயுக்தியாகப் பேசத்தான் உனக்குத் தெரியுமே யொழிய ஏதாவது நல்ல யோசனை சொன்னால் அதைப் பிடித்துக்கொள்ள மாட்டாய். சரி, அதற்கும் ஒரு யோசனை வைத் திருக்கிறேன். நீதான் இந்த அடுத்த வீட்டு அண்ணாசாமி அய்யரை மறக்கவே மாட்டேன் என்கிறாயே? எந்தப் பெயராக இருந்தாலும்

சரி, நான் முன்னே சொன்னதுபோல் சங்கிலிபோல் பிணைத்து, அடுத்த வீட்டு அண்ணுசாமி அய்யரிடம் இணைத்து விடலாம்."

"ஆச்சரியமாக இருக்கிறதே, அது எப்படி ஐயா முடியும்?"

"ஏன் முடியாது? அடுத்த வீட்டு அண்ணுசாமி அய்யர் அடுத்த வீட்டில் இருக்கிறார். அடுத்த வீடு என்றதும் எதிர்த்த வீடு ஞாபகம் வரும். எதிர்த்த வீட்டின் பெயர் மிதிலை. மிதிலையில் சீதை பிறந்தாள். சீதையின் புருஷன் பெயர் ராமன். ராமனிட மிருந்து ராமசாமி, எப்படி?" என்று என் நண்பர் வெகு உற்சாக மாகச் சொன்னார்.

எந்தப் பெயராய் இருந்தாலும் சரி அந்தப் பெயருக்கும், அடுத்த வீட்டு அண்ணுசாமி அய்யர் பெயருக்கும் உடனே ஒரு சங்கிலிப் பாலம் அமைத்து விடுவேன். முதலில் என்னமோ வெகு கஷ்டமான காரியம் என்று நினைத்துக் கொண்டிருந்த எனக்கு இது வெகு சுலபமாக இருந்தது.

என்ன, உங்களுக்குச் சந்தேகமாய் இருக்கிறதா? உதாரணத் துக்கு ஏதாவது ஒரு பெயரை எடுத்துக் கொண்டு அதை அடுத்த வீட்டு அண்ணுசாமி அய்யருடன் முடிச்சுப் போடட்டுமா?

மகாலிங்கம் என்று எடுத்துக் கொள்வோம். மகாவிலிருந்து மகாமகம், மகத்திலிருந்து சித்திரை, சித்திரையிலிருந்து கார்த்திகை, கார்த்திகையிலிருந்து கார்த்திகை அடை. அடை யென்றால் அண்ணுசாமி அய்யருக்குப் பிடிக்கும்!

இந்த மாதிரி எந்தப் பெயரையும் அடுத்த வீட்டு அண்ணுசாமி அய்யருடன் முடிச்சுப் போடுவது வெகு சுலபமாக இருந்தது. ஆனால் அடுத்த வீட்டு அண்ணுசாமியிலிருந்து முதலில் ஆரம்பித்த பெயருக்கு வருவதற்குள்தான் எத்தனையோ குளறுபடியாகி விட்டது, பிள்ளையார் பிடிக்கக் குரங்காய் முடிந்த கதையாகி விட்டது.

ஒரு நாள் இதைச் சொல்லிக்கொடுத்த என் நண்பர் கிருஷ்ண சாமி அவர்கள் பெயரே எனக்கு மறந்து விட்டது. அடுத்த வீட்டு அண்ணுசாமி அய்யரிலிருந்து இதைக் கொண்டு வருவதற்கு முயற்சி செய்தேன்.

அடுத்த வீட்டு அண்ணுசாமி அய்யர் என்றதும் அவர் மனைவி பார்வதம்மாள் ஞாபகம் வந்தது. பார்வதம் என்றதும் பார்வத குமாரியின் புருஷரான சிவன் ஞாபகம்வந்து, அதிலிருந்து சிவசாமி என்று தப்பான பெயர் வந்தது.

அந்த நண்பர் சொல்லிக் கொடுத்த இந்த வழியை உபயோகப் படுத்தப்போக என் நிலைமை இப்பொழுது வெகு மோசமாகி விட்டது. முன்பாவது கிருஷ்ணசாமியைப் பார்த்து லக்ஷ்மணசாமி என்றும், லக்ஷ்மணசாமியைப் பார்த்துக் கிருஷ்ணசாமி என்றும் நினைத்துக் கொண்டிருப்பேன். அதாவது தவறுதலான பெயராக இருந்தாலும், ஒரு பெயரையே ஞாபகம் வைத்துக் கொள்வேன்.

இப்பொழுதோ, ஒரே நபரைப்பற்றி எனக்குத் தினம் ஒரு பெயர் தோன்றுகிறது. இன்று மகாலிங்கமாக இருக்கிறவர் நாளைக்கு நாகலிங்கமாக மாறுகிறார். அடுத்த நாளே அவர் லிங்க சாமியாகக் காட்சி அளிக்கிறார்.

இந்த மாதிரி மோசமான நிலைமையில் என்னை ஆழ்த்திய அந்த நண்பரை (அந்த நண்பரின் பெயரை அதற்குள் மறந்து விட்டேன்.) என்ன பண்ணினாலும் பாவமில்லை.



# அன்றொரு நாள்

தினம் காலையில் எழுந்திருப்பதற்கு ஒவ்வொருவரும் ஒரு வழி வைத்துக்கொண்டிருக்கிருர்கள். சிலர் அலாரம் கடியாரம் வைத்துக்கொண்டு எழுந்திருக்கிருர்கள். சிலர் மனைவியின், "ஏன்ன! உங்களைத்தானே!" குரலைக் கேட்டு எழுந்திருக்கிருர்கள். சிலர் அடுத்த வீட்டுப் பிடாரிகள் (அதாவது அடுத்த வீட்டுக் குழந்தைகள்) போடும் சப்தம் பொறுக்கமாட்டாமல் எழுந்திருக்கிருர்கள். அதே மாதிரி அடுத்த வீட்டுக்காரர் இந்த வீட்டுப் பிடாரிகள் போடும் சப்தத்தைக் கேட்டு எழுந்திருப்பதும் உண்டு.

ஆனல் தினம் காலையில் எழுந்திருப்பதற்கு நான் வேறு ஒரு வழி வைத்திருக்கிறேன். அலாரம் கடியாரம் இல்லாதவர்களும், "ஏன்ன! உங்களைத்தானே!" என்று குரல்கொடுக்கும் மனைவி இல்லாதவர்களும், அக்கம் பக்கம் வீடுகளில் பிடாரிகள் இல்லாதவர்களும், இந்த வழியைக் கையாளலாம்.

அதாவது, ஏதாவது ஒரு பத்திரிகைக்கு மாதச் சந்தா கட்டி விட வேண்டியது. தினம் காலையில் உங்களை எழுப்பவேண்டிய வேலையைப் பத்திரிகைக்காரர்கள் கவனித்துக் கொள்வார்கள்.

இந்த யுக்தியை என் நண்பர் ஒருவர் எனக்குச் சொல்லிக் கொடுத்தபோது நான் முதலில் நம்பவே யில்லை. "பத்திரிகைக் காரர்களாவது! தினம் காலையில் நம்மை எழுப்புவதாவது! வேலை மெனக்கட்டு நம்மை வந்து எழுப்புவதற்கு அவர்களுக்கு ஏதாவது பயித்தியம் பிடித்திருக்கிறதா!" என்று கேட்டேன்.

"நான் சொன்னபடி ஏதாவது ஒரு பத்திரிகைக்கு மாதச் சந்தா அனுப்பி வையுங்களேன். அதற்குப் பிறகு பாருங்கள், அவர்கள் எழுப்புகிருர்களா, இல்லையா என்று" என்ருர் நண்பர்.

அப்படியே ஒரு பத்திரிகைக்கு மாதச் சந்தா அனுப்பி வைத்தேன்.

அடுத்த நாள் காலை ஆறு மணி யிருக்கும். நான் திண்ணை அறையில் நிம்மதியாகத் தூங்கிக்கொண்டிருந்தேன். திடீரென்று யாரோ முகத்தில் பளாரென்று ஒரு அறை விட்டதுபோல் பட்டது! உடனே முதல் நாள் பத்திரிகைக்கு மாதச் சந்தா அனுப்பியது ஞாபகத்துக்கு வந்தது. நம்மை எழுப்புவதற்குத்தான் பத்திரிகைக் காரர்கள் இந்த யுக்தியைக் கையாளுகிறார்கள் போலிருக்கிறது என்று கண்ணை விழித்துப் பார்த்தால் பக்கத்தில் யாரையும் காணோம்! அதற்குப் பதில் ஒரு சுருட்டி மடிக்கப்பட்ட பத்திரிகை கிடந்தது! அதை அந்த பத்திரிகைப் பையன் என் முகத்தைப் பார்த்து பலமாக வீசி எறிந்துவிட்டு ஓடிப்போ யிருக்கிறான்!

பத்திரிகைக்காரர்கள் சொல்லித்தான் செய்தானோ, அல்லது தானாகத்தான் என்னைக்கடைத்தேற்ற வேண்டும் என்று செய்தானோ, தினம் காலைப் பத்திரிகையை என் முகத்தில் சுருட்டி அடித்து எழுப்புவது என்று அப்பத்திரிகைப் பையன் வைத்திருந்தான்.

என்னதான் நல்லெண்ணத்துடன் அப்பையன் இக்காரியத்தைச் செய்த போதிலும், யாருக்கும் அப் பையன் மீது கோபம் வராமல் இருக்காது. பையனைப் பிடித்துச் செம்மையாக உதைக்க வேண்டும் என்று தீர்மானித்தேன். ஆனால், நம் நாட்டு எல்லா மகா நாடுகளிலும் வழக்கமாக நடப்பது போல், தீர்மானம் நிறைவேறியதே யொழியக் காரியம் நடக்கவில்லை. பையன் அகப்பட்டால் தானே அவனை உதைப்பதற்கு?

பையன் அகப்படாமல் போகவே அவன் அடியிலிருந்து தப்பித்துக் கொள்வதற்காக மாறி மாறிப் படுத்தேன். என்ன மாறிப் படுத்தும் பையன் குறி தவறாமல் பத்திரிகையை என் முகத்தை நோக்கி வீசி எறிந்துகொண்டே யிருந்தான்.

திண்ணை அறையை விட்டு கூடத்தில் படுத்தேன். அங்கேயும் பத்திரிகைப் பையன் வழக்கம் போல் என்னை எழுப்பத் தவறவில்லை! கூடத்தை விட்டு, இன்னொரு அறைக்குப் போனேன். அங்கேயும் அப்பத்திரிகை என்னைத் தொடர்ந்து கொண்டு வந்தது!

இப்படித் தன் முகத்தைக் காட்டாமலே என் முகத்தைச் சித்திரவதை செய்து கொண்டிருந்த பத்திரிகைப் பையனைப் பார்க்க வேண்டும் என்று வெகு நாள் துடித்தேன்.

கடைசியில், அன்று ஒரு நாள் பையன் கையும் களவுமாக அகப்பட்டான். தானாகவே வலுவில் என்னிடம் வந்தான். இந்தப்

பூனையும் பாலைக் குடிக்குமோ என்னும் பாவனையில் முகத்தைவைத்துக்கொண்டு, பத்திரிகையை என் முன் வெகு வினயமாகநீட்டினான்!

வெகு நாள் அகப்படாத பையன் திடீரென்று ஒரு நாள் தானாகவே வலுவில் வந்து அகப்பட்டுக் கொண்டால் நீங்கள் ஆச்சரியப்படுவீர்களா, மாட்டீர்களா?

ஆனால் நான் ஆச்சரியப்பட வில்லை.

இந்தப் பத்திரிகைப் பையனைப் போலவே எனக்கு இன்னொரு ஆசாமியும் டிமிக்கி கொடுத்துக் கொண்டு வந்தான். அவன் வேறு யாரும் இல்லை. எங்கள் வீட்டுக்கு வரும் தபால்காரன்!

எங்கள் வீட்டுக்கு வரும் தபால்காரனைப் பார்த்துச் சண்டை பிடிக்க வேண்டும் என்று எனக்கு வெகு நாளாக ஆசை! எனக்கு ஏதாவது கடிதம் வந்திருந்தால் "ஸார் போஸ்ட்" என்ற குரல் மாத்திரம் காதில் கேட்குமே யொழிய ஆள் கண்ணில் படமாட்டான்! ஆளைப் பார்த்துக் கடிதத்தைக் கையில் கொடுக்கும் வழக்கமே இந்தத் தபால்காரனிடம் கிடையாது.

"ஸார் போஸ்ட்"என்று குரல் கொடுப்பான். கடிதத்தை எங்கேயாவது தூக்கி எறிந்து விட்டு, ஆள்மாயமாக மறைந்து விடுவான்.

அவன் குரலைக் கேட்டு நமக்குக் கடிதம் வந்திருக்கிறது என்று தெரிந்து நாம் கடித வேட்டை ஆடத் தொடங்கவேண்டும்.

ஒரு நாள் கடிதம் கட்டிலுக்கடியில் கிடக்கும். இன்னொரு நாள் கடிதம் மேஜைக் கடியில் கிடக்கும். இதற்கடுத்த நாள் கடிதம் ஜன்னல் கதவில் தொத்திக்கொண்டு தொங்கிக் கொண்டிருக்கும்.

சில சமயங்களில் ஐந்தாறு கடிதங்கள் வந்து, ஒவ்வொன்றும் ஒரு இடத்தில் ஒளிந்துகொண்டிருக்கும். ஐந்து கடிதங்கள் வந்ததைத் தெரிவிப்பதற்காக "ஸார் போஸ்ட், ஸார் போஸ்ட்" என்று ஐந்து தடவை குரல் கொடுப்பது என்றாவது அத்தபால்காரன் வழக்கம் வைத்திருந்தானா? கிடையாது. ஆகவே எத்தனை கடிதங்கள் வந்தன என்று தெரியாமல் தவித்திருக்கிறேன்.

ஒவ்வொரு சமயம் எத்தனையோ கடிதங்கள் கையில் அகப்படாமல் போய்விடும். இன்னும் சில சமயங்களில் ஒரு கடிதத்துக்கு மேல் வராதபோதே நிறைய வந்ததாக நினைத்துக்கொண்டு, மூலை முடுக்கெல்லாம் தேடிக்கொண்டிருப்பேன். வீட்டில் உள்ளவர்கள் மீதெல்லாம் வேட்டை நாய் மாதிரி சீறி விழுந்து கொண்டிருப்பேன்!

ஆகவே என்னை இத்தனைத் தொல்லைக்கு ஆளாக்கி வைத்த தபால்காரனை நேருக்கு நேர் சந்தித்து என் ஆத்திரத்தைத் தீர்த்துக் கொள்வதற்காக நான் எத்தனையோ வழிகள் கையாண்டேன் ஒன்றும் பயன் இல்லை.

நமக்கு யாராவது மணியார்டர் அனுப்பினால் அப்பொழுது தபால்காரன் நேரே வந்துதானே ஆகவேண்டும் என்று நூறு ரூபாய் மணியார்டர் அனுப்பும்படி மாமனாருக்குக் கடிதம் எழுதினேன். "என்னடா! காரணம் இல்லாமல் திடீரென்று மாப்பிள்ளை, மணியார்டர் அனுப்பு என்று கடிதம் எழுதுவானா! ஏதோ காரணம் இருக்கக்கொண்டுதானே எழுதியிருப்பான்! ஏதோ நூறு என்கிற இடத்தில் ஐம்பதாவது அனுப்பி வைப்போம்" என்று இந்த மாமனார் நினைத்துப் பார்த்தார்என்கிறீரா? கிடையாது.

அதற்குப் பதில், "வரவுக்குள் செலவு பண்ணுவது எப்படி?" என்னும் விஷயத்தைப் பற்றி நீண்டதொரு வியாசம் எழுதி சரசுவுக்கு அனுப்பி, "இதை மாப்பிள்ளையிடம் படித்துக்காட்டு. இரண்டு பேரும் இன்னும் கொஞ்சம் சிக்கனமாகக் குடித்தனம் நடத்தக் கற்றுக் கொள்ளுங்கள்" என்று எழுதியிருந்தார்.

ஆக மாமனாரும் கையை விரித்துவிடவே, தபால்காரனைச் சந்திக்கும் சந்தர்ப்பம் எனக்குக் கிடைக்கவே யில்லை.

இப்படி இத்தனை நாளும் என்னிடம் அகப்படாமலே தப்பித்துக் கொண்டிருந்த தபால்காரன் திடீரென்று ஒரு நாள் தானாகவே வலுவில் வந்து எதிரே நின்றது போதாது என்று வெகு வினயமாக ஒரு கடிதத்தையும் நீட்டினான் என்றால் நீங்கள் ஆச்சரியப்படுவீர்களா, மாட்டீர்களா?

ஆனால் நான் ஆச்சரியப்படவில்லை.

இதேமாதிரி எனக்கு டிமிக்கிக் கொடுத்துக் கொண்டிருந்த இன்னொரு ஆசாமியையும் நான் வெகு நாளாகப் பார்க்கவேண்டும் என்று வெகு ஆவலாக இருந்தேன். அவன் வேறு யாரும் இல்லை. முனிசிபாலிட்டி குப்பை வண்டிக்காரன்!

தொன்று தொட்டு நம் நாட்டில் ஏற்பட்டுள்ள வழக்கத்தையொட்டி, எங்கள் வீட்டு வேலைக்காரி எங்கள் வீட்டுக் குப்பையையெல்லாம் அடுத்த வீட்டு வாசலில் எறிந்து விடுவாள். அதே மாதிரி அடுத்த வீட்டு வேலைக்காரி அவர்கள் வீட்டுக் குப்பையை எங்கள் வீட்டு வாசலில் எறிந்து விடுவாள்.

இதனால் இரண்டு வேலைக்காரிகளுக்கும் சண்டை மூள, கடைசியில், "எனக்கும் வேண்டாம், உனக்கும் வேண்டாம்" என்று குப்பையை யாராவது மூன்றாவது மனிதர் வீட்டு வாசலில் போட்டுவிட்டு வந்து விடுவார்கள்.

ஆனால் குப்பைத் தொட்டி வைக்கும் வழக்கம் ஆரம்பித்தாலும் ஆரம்பித்தது, வாசலில் திரும்பவும் குப்பை சேர ஆரம்பித்து விட்டது. அடுத்த வீட்டு வேலைக்காரி தன் வீட்டிலிருந்து குப்பைத் தொட்டியைப் பார்த்து எறியும் குப்பை எங்கள் வீட்டு வாசலில் வந்து விழும். அதே மாதிரி எங்கள் வீட்டு வேலைக்காரி எங்கள் வீட்டு வாசல் திண்ணையிலிருந்து குப்பைத் தொட்டியைக் குறி பார்த்து எறியும் குப்பை அடுத்த வீட்டு வாசலில் விழும்.

இரண்டு வேலைக்காரிகளுக்கும் குப்பைத் தொட்டியைப் பார்த்து எறிந்தோம் என்ற திருப்தி இப்போது ஏற்பட்டு விட்டபடியால், முன் போல் சண்டை போட்டுக்கொண்டு, மூன்றாவது வீட்டு வாசலில் குப்பையைப் போடமாட்டார்கள்.

நம் நாட்டு ஸ்திரீகளுக்குக் குறி பார்த்து எறியும் வழக்கம் இன்னும் ஏற்படவில்லை என்பது இந்தக் குப்பை வண்டிக்காரனுக்குத் தெரிந்ததுதானே! இருந்தும் ஒரு நாள்கூட வாசலில் இருக்கும் குப்பையை அள்ளமாட்டான். குப்பைத் தொட்டியை மாத்திரம் தான் கவனித்துக் கொள்வான்.

இதற்காக முனிசிபாலிட்டி குப்பை வண்டிக்காரனை நேரில் கண்டு விரட்டவேண்டும் என்று வெகுநாள் காத்துக்கொண்டிருந்தேன். ஆனால் ஆசாமி அகப்படவில்லை.

இப்படி என்னைக் கண்டு ஓடி ஒளிந்த ஆசாமி திடீரென்று எனக்குக் காது கேட்கும்படியாய் உரத்த குரலில் தன் சிப்பந்தியைப் பார்த்து, "டேய்! கீழே இருக்கும் குப்பையை யார் எடுக்கிறதுன்னு நினைச்சே?" என்று அதிகாரம் பண்ணினால் நீங்கள் ஆச்சரியப்படுவீர்களா, மாட்டீர்களா!

ஆனால் நான் ஆச்சரியப்படவில்லை.

அன்றொரு நாள் நடந்த இந்த மூன்று சம்பவங்களைக் கண்டும் நான் ஆச்சரியப்படாததற்குக் காரணம் அன்று தீபாவளி தினம் ஆனதுதான். தீபாவளி இனாம் வாங்குவதற்காக அத்தனை நாளும் தலை மறைவாக இருந்த பத்திரிகைப் பையனும், தபால்காரனும், குப்பை வண்டிக்காரனும் எனக்குத் தங்கள் திவ்விய தரிசனத்தைத் தந்தனர்!

